



# KARUNAMIRTHASAGARAM.

## BOOK II.

ON

## RAGAS.

(GRAMMAR OF MUSIC)

## கருணாமிர்தசாகரம்

இரண்டாம் புத்தகம்.

இராக இலக்கணம்.



M. ABRAHAM PANDITHER,
K. M. HALL, TANJORE.



Price Rs. 15.




# கருணாமிர்தசாகரம்

என்னும்

# இசைத்தமிழ் நூல்

இரண்டாம் புத்தகம்

இராகங்களைப் பற்றியது

(இசை இலக்கணம்)



# A TREATISE ON MUSIC or ISAITTAMIL

WHICH IS ONE OF THE MAIN DIVISIONS OF MUTTAMIL OR LANGUAGE, MUSIC & DRAMA

# KARUNÂMIRTHASÂGARAM

## BOOK II

## ON RAGAS.

(GRAMMAR OF MUSIC)

BY

M. ABRAHAM PANDITHER,

K. M. HALL, TANJORE.

PUBLISHED BY

Dr. A. S. Pandyan & Mrs. Maragathavalli Duraipandyan,

K. M. HALL, TANJORE.

PRINTED AT THE LAWLEY ELECTRIC PRINTING PRESS,

TANJORE.



முத்தமிழில் ஒன்ருகிய இசைத்தமிழ் என்னும்

சங்கீத நூல்.

# கருணாமிர்தசாகரம்

## இரண்டாம் புத்தகம்.

இராக இலக்கணம் கூறுவது.

கருணாநிதி வைத்தியசாலை

மு. ஆபிரகாம் பண்டிதரால்

இயற்றப்பெற்றது.

கருணாநிதி வைத்தியசாலை

டாக்டர். A. S. பாண்டியன் & Mrs. மரகதவல்லி துரைப்பாண்டியன்

இவர்களால் பிரசுரிக்கப்பட்டது.

தஞ்சை லாலி எலெக்டிரிக் அச்சுக்கூடத்தில் அச்சிடப்பட்டது.

தஞ்சாவூர்.

1946.



[Price Rs. 15.



## உரிமை யாக்கல்.



யாவராலும் கொண்டாடப்படும் சங்கீத சாஸ்திரத்தில் 72 மேளக்கர்த்தாவின் தாய்ராகங்களிலும் அவற்றின் ஜன்னிய ராகங்களிலும் இன்னும் சுருதி பேதத்தால் உண்டாகும் புதிய ராகங்களிலும் ஆரோகண அவரோகண சுரங்களைத் தெரிந்து இசை இலக்கணக் கணக்கின்படி கீதம் கீர்த்தனம் முதலியன செய்யும் முறையைக் காட்டி இந்நூலை எழுதி முற்றும் முடிக்க எல்லா நன்மைகளையும் செய்து உதவியருளிய கருணானந்த முனிவருக்கு இந்நூல் உரிமை யாக்கப்பெற்றது.

---

இசை இலக்கணத்தைப்பற்றிச் சொல்லும் இவ்விரண்டாம் புத்தகத்திற்கு

"கருணானந்தர் பொற்கடகம்"

என்று பெயர் வழங்கும்.



# கருணாமிர்தசாகரம்

## இரண்டாவது புத்தகம்.

### இப்புத்தகத்திலடங்கிய சில முக்கிய குறிப்புக்கள்.

கடவுள் துணை.




# கருணாமிர்தசாகரம்

## இரண்டாம் புத்தகம்

## முகவுரை.

"கருணாமிர்த சாகரம்" இரண்டாம் புத்தகமாகிய இராக இலக்கணங்களைக் கூறும் இந்நூலின் வரலாற்றையும் இதில் எழுதியிருக்கும் விஷயங்களையும் பற்றிச் சொல்லுமுன், எங்கள் தந்தை ராவ் சாகிப் மு. ஆபிரகாம் பண்டிதர் அவர்கள், இசையில் காட்டிய ஆர்வத்தைப் பற்றியும் இசை சம்பந்தமாகச் செய்த ஆராய்ச்சிகளைப் பற்றியும் சுருக்கமாய்க் கூற விரும்புகிறோம்.

எங்கள் தந்தை தம்முடைய சிறு வயதில் பள்ளிக்கூடத்தில் பயிலுங் காலத்திலேயே இசையில் அதிக ஆர்வமுள்ளவர்களாய்ச் சிறு பாட்டுக்களை இராகங்களில் அமைத்துத் தம்முடன் சேர்ந்த மாணவர்களுக்குச் சொல்லிக் கொடுத்து, அதனால் இசையில் திறமை வாய்ந்தவரென எல்லா ஆசிரியர்களாலும் நன்கு மதிக்கப் பெற்று வந்ததாகக் கேள்வியுற்றிருக்கிறோம். பிற்காலத்தில் அவர்கள் அநேக பெருங் காரியங்கள் செய்து வந்தார்கள். கருணானந்தர் எனும் மகரிஷியின் அருள் பெற்று, அவர்களிடம் வைத்திய சாஸ்திரத்தையும், சில மருந்து மூலிகைகளையும் கற்றறிந்து, அதிக ஊக்கத்தோடும், அரிய முயற்சியோடும் மருந்துகள் செய்து, உலகத்தார் நன்மை அடையச் செய்து உலகப் பிரசித்தியைப் பெற்றார்கள். விவசாயத்தில் கரும்பு, சோளம் முதலானவைகள் பயிரிடும் முறைகளைப்பற்றி அநேகம் புத்தகங்கள் எழுதி வெளியிட்டதுடன், மிக்க பொருட் செலவில், பெரு முயற்சிகொண்டு, பற்பல மரம், செடி, கொடிகள் அடங்கிய மிக அழகான அகன்ற பெரிய "கருணானந்தபுரம்" எனும் தோட்டமும் அமைத்து அதினின்று விவசாய உலகம் அதிகப் பிரயோஜனம் அடையச் செய்தார்கள். ஒரு பெரிய அச்சுக்கூடமும் நாட்டி நடாத்தி வந்தார்கள். மற்றும் பற்பல கைத்தொழில்கள், அதாவது, சவுக்காரம் செய்தல், படம் பிடித்தல், ஒலிப்பதிவுத் தட்டுகள் செய்தல், கால் நடைப் பண்ணை நாட்டிச் சிறந்த பசு, காளைகளை வளர்த்தல் முதலிய பலவற்றைத் தொடங்கி நடத்தி வந்தார்கள். தம் இனத்தார் யாவரையும் வரவழைத்து, அவரவர்கள் திறமைக்கு ஏற்ற வேலைகளைக் கொடுத்து, உதவியது மல்லாமல், யாவரும் நல்ல பக்தியடைய விருப்பங் கொண்டு தத்துவ சாஸ்திரத்தைப் போதித்து அதனை "நன்மறை காட்டும் நன்னெறி" என்னும் பெயரால் இரண்டு பகுதிகளாக இயற்றி வெளியிட்டார்கள்.

ஜோதிட சாஸ்திரத்தை நன்கு கற்றறிந்து "ஜோதிஷ விமர்சனி சபை" ஒன்று நிறுவி, அதற்குத் தலைமை வகித்து நடத்தி வந்தார்கள். அவர்கள், இங்ஙனமாகிய தங்கள் நானாவித அலுவல்களுக்கிடையே இசையை முதன்மையாகப் பாவித்து, சங்கீத சாஸ்திர சம்பந்தமான நுட்பக் கருத்துக்களை ஆராய்வதிலும், இறைவன் துதியா யமைந்துள்ள இனிய தமிழ்ச் சாகித்தியங்கள் செய்வதிலும் மிக்க முயற்சியும், விருப்பமும் உடையவர்களா யிருந்தார்கள். நாங்கள் சிறுவர்களாயிருக்கும் பொழுதே, எங்களுக்குச் சங்கீதம் கற்பிக்க விரும்பி, அதற்காகத் தஞ்சையில் சங்கீதத்தில் சிறந்த வித்துவான் எனப் பெயர்பெற்ற அரண்மனை வித்துவான் வீணை வேங்கடாஜலம் ஐயர் அவர்கள் மூலமாக வீணையும், தியாகராஜ ஐயரின் சிஷ்யர் தியாகராஜப்பிள்ளையின் குமாரர் சாமியா பிள்ளை அவர்கள்மூலமாக வாய்ப்பாட்டும், முதல் முதலாக கீர்த்தனங்களையும், திண்டி ஜாக்கிகளையும், வசனங்களையும் ஒன்று சேர்த்து, கதாகாலக்ஷேபம் செய்ய ஆரம்பித்து, அதில் பெயர் பெற்ற கிருஷ்ணபாகவதரின் சிஷ்யரும், கதா காலக்ஷேபம் செய்வதிலும், பிடில் வாத்தியத்திலும் கைதேர்ந்தவருமான பஞ்சாபகேச பாகவதர் அவர்கள் மூலமாகப் பிடிலும் கற்றுக்கொள்ளச் செய்தார்கள்.

கர்நாடக சங்கீதம் சிறப்புற்றோங்கிய சோழ நாட்டிலுள்ள திருவாரூரில் அவதரித்த திரு. தியாகய்யரவர்கள் எப்பொழுதும் தெய்வ சந்நிதியில் இருந்து புதிது புதிதான சாஹித்தியங்கள் தினந்தோறும் செய்து, சகல சங்கீத லக்ஷணங்களோடும், ராக பாவத்தோடும், அர்த்த புஷ்டியோடும் கூடிய ஆயிரக்கணக்கான உருப்படிகளை, மனம் பரவசமாகி, அவர்கள் தாய் பாஷையாகிய தெலுங்கிலே வெகு அழகாக யாவரும் கொண்டாடக் கூடியனவாக இயற்றியிருக்கிறார்கள். அங்ஙனமே தீக்ஷிதர், ஸ்யாமா சாஸ்திரிகள் முதலானோர் செய்த கீர்த்தனங்களும், வர்ணங்களும், ஸம்ஸ்கிருதம், தெலுங்கு பாஷைகளில் இருப்பதால், தமிழர்களாகிய நாம், பொருள் தெரியாமல் பாடுவதினால் சங்கீதத்தில் அர்த்தபாவம் என்ற மேலான பாகத்தை விருத்திசெய்ய ஏது இல்லாமலிருப்பதை, அவர்கள் கண்டு, பொருளின்றி இனிய ஓசையை மாத்திரம் அந்நிய பாஷைகளில் கேட்டுச் சந்தோஷப் படுவதை விட, இசையின் இனிய ஓசையோடு பொருளுமறிந்து, உணர்ச்சி மேலிட்டுப் பக்தி ரசமான கீர்த்தனைகளைக் கேட்டு ஆனந்திப்பதினால், கேட்பவர்கள் யாவரும் நற்பயனடைவார்கள் என்பதை உணர்ந்து, சில கீர்த்தனங்களுக்கும் வர்ணங்களுக்கும், இராகங்களுக்கேற்ற விதமாகவும், பக்தி விருத்திக்குத் தகுதியாகவும் சுமார் 45 வருஷங்களுக்கு முன்னதாகத் தமிழ் சாஹித்தியங்கள் செய்து எங்களுக்குக் கற்பித்தார்கள். இவை இப்பொழுதும் பலரால் பாடப்பட்டு வருகின்றன. தமிழ் உலகுக்கு உபயோகமாயிருக்கும் பொருட்டுச் சுர சாகித்தியங்களோடு தாள அட்சரங்களுக்குள்ளடக்கி, மிகத் தெளிவாய், சங்கீதம் பயிலும் சிறுவர்கள் முதல் யாவரும் தெரிந்து கொள்ளக் கூடியதாய், 95 பாட்டுக்கள் அடங்கிய 'கருணாமிர்த சாகரத்திரட்டு' என்னும் புத்தகத்தை 1907-ம் ஆண்டில் அச்சிட்டார்கள்.

தெய்வத்தின் அருட் குணாதிசயங்களைத் தம் தாய் மொழியிலேயே பலவித ராகங்களில் அமைத்துப் பாடும்பொழுது, ஒருவன் மிகுந்த உணர்ச்சியுடையவனாய், மனம் ஒடுங்கி, தியான நிலைக்கு வந்து, திருவுருவைத் தரிசிக்கும் மேலான பதவியடைவான். வெறும் இன்னிசையை மாத்திரம் கேட்பவர்கள், இராகத்தின் இனிமையை மட்டும் கேட்டு விரைவில் மறந்து போவார்கள். இயற்றமிழைக் கேட்டும், வாசித்தும் உணராத ஒருவன், இசைத் தமிழைக் கேட்கும் போது, அதன் பொருட் சுவையின் உணர்வடைவான். தமிழ் இசையின் மேன்மை இன்னதென்பதும், சங்கீத சாஸ்திரத்திற்கே அடிப்படையான சுருதியைப்பற்றிய அரிய பெரிய விஷயங்களும் முதற் புத்தகமாகிய பொற்கடகம் என்ற கருணாமிர்த சாகரத்தில் அங்கங்கே விளக்கமாகக் கூறப்பட்டிருக்கின்றன.

அந்நூலில் பண்டைத் தமிழ் மக்களே மக்களில் முதல்வரென்றும், தமிழ் மொழியே முதல் மொழியென்றும், அம்முதுமொழி, இயல், இசை, கூத்து என மூன்று பகுதியுடையதாயிருந்ததென்றும், இசைத்தமிழ் என்ற சாஸ்திரத்தில் சுருதிகள் அமைத்து, ராகங்கள் உண்டாக்கி, அவற்றைச் சேர்ந்த ஆளத்தி (ஆலாபனம்), அவிநயம் (அபிநயம்), பாணி (தாளம்), முதலியவைகளாலும், யாழ், வங்கியம் (குழல்), தண்ணுமை (மிருதங்கம்) முதலிய இசைக் கருவிகளாலும் சிறந்த புலமையுற்றுத் தமிழ் மக்களே முதன்மை பெற்றிருந்தார்கள் என்றும் கூறப்பட்டுள்ளன. இன்னமும் ஒரு இயக்கில் (ஸ்தாயியில்) பாடப்படும் சுரங்கள் ஏழு என்றும், ச-ப, ச-ம, முறையில் ஏழாவது ஏழாவதாய், ஐந்தாவது ஐந்தாவதாய், உண்டாகும் சுரங்கள் 12 என்றும், இதையே ஆயப்பாலை என்றும், ஒரு இயக்கில் வரும் 12 சுரங்களும் சம அளவான ஓசையுடையவைகளாய் வருகின்றன என்றும், சுரங்களும் படிப்படியாய் உயர்ந்து அதாவது, ஒன்றிற்கொன்று தீவிரமாய் நடுவில் வேறு நாதமுண்டாகாமல் மேலே போகவேண்டுமென்றும், ஒரு ஸ்தாயியை 12 ராசிகளாகப் பிரித்து அதில் இன்னின்ன ராசியில் வரும் சுரங்கள் பொருத்தமுள்ளவை என்றும், மற்றவை பொருந்தாவென்றும், ஒரு ஸ்தாயியின் பன்னிரு சுரங்களையும் ஒவ்வொரு சுரத்திற்கும் இரண்டிரண்டு அலகுகளாக வைத்து 24 அலகுகளாக நிச்சயித்து, அதில் இணை கிளையான இரண்டு சுரங்களில் இரண்டு அலகுகளைக் குறைத்து, கானம் செய்து பாடலமுதம் பருகினார்களென்றும், 22 சுருதிகளில் அடங்காவென்றும், 24, 48, 96 போன்ற நுட்ப சுருதிகளில் பூர்வ தமிழ் மக்கள் கானம் செய்தார்களென்றும், (அதாவது, ஒரு ஆரோசண, அவரோசணத்தில் வரும் ஏழு சுரங்களில் இணை கிளையான அல்லது இணை இணையான சுரங்களில் அலகுகளைக் குறைத்து, பூர்வ தமிழ் மக்கள் கானம் செய்து வந்திருக்கிறார்களென்றும்) தெளிவாகச் சொல்லியிருக்கிறார்கள். மேலும் ராசி வட்டத்தில் நிற்கும் பன்னிரு சுரஸ்தானங்களை ஆயப்பாலையென்றும், அதை இரண்டிரண்டாய்ப் பிரித்து 24 அலகுகளாக வருவது வட்டப்பாலை யென்றும், வட்டப்பாலையிலுள்ள 24 அலகுகளையும் இரண்டிரண்டாகப் பிரித்து 48 அலகுகளாக வருவது திரிகோணப்பாலையென்றும், திரிகோணப்பாலையின் அலகுகளை இரண்டிரண்டாகப் பிரித்து 96 கால் சுருதிகளாகவருவது சதுரப்பாலை யென்றும், அம்முறைப்படி பல்லாயிர வருஷங்களுக்கு முன்னரே நம் முன்னோர்கள் இனிமையாகப் பாடி வந்திருக்கிறார்களென்றும், தற்காலத்தில் நாம் பாடும் கர்நாடக சங்கீதத்திற்கும் அதற்குமுள்ள ஒற்றுமையை எடுத்துக் காட்டி, ஒரு ஸ்தாயியின் பன்னிரு சுரங்களும் எப்படிச்சமமான இடைவெளிகளுள்ள சுருதிகளாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றனவென்றும், பூர்வ தமிழ் நூல்களின் தகுதியான மேற்கோள்களைக்கொண்டு மிக்க நுட்ப அறிவுடன் விளக்கி எழுதியிருக்கிறார்கள். இந்த அபிப்பிராயத்தை ஸ்தாபிப்பதில் நுட்பமான கணக்குகளும், லாகிர்தமும், எட்டு ஸ்தானம் வரை தசாம்ச பின்னங்களும், தந்தியின் நீளமும், ஓசை அலைகள் செகன்ட்களின் கணக்குகளும், சுரம் சுருதிகளில் எவ்விதமான சந்தேகமும் உண்டாகாத கணித முறைகளும், நம் அனுபவத்தில் பாடிவரும் இராகங்களில் வரும் நுட்ப சுரம், சுருதிகளை அறியும் திருஷ்டாந்தங்களும் மிகத் தெள்வுற எடுத்துக் காட்டித் தமிழிசையின் ஒப்பற்ற உயர்வை யாவரும் உணரும்படியாக எழுதியிருக்கிறார்கள்.

தமிழ் இசை சம்பந்தமான இவ்வித நுட்பமான கருத்துக்களை ஆராய்ந்து பல ஆண்டுகளாகப் பெரிதும் முயன்று, அவ்வப்போது சங்கீத சபைகள் கூட்டி, அதில் சங்கீத வித்துவான்களையும் சங்கீத ரசிகர்களையும் ஒன்று சேர்த்து அவர்களுடைய அபிப்பிராயங்களைக் கலந்து ஆலோசித்தச் சங்கீத விஷயமாய்த் தர்க்கித்து முக்கிய தத்துவத்தை வெளிப்படுத்தி வந்தார்கள். முதலாவது இசைச் சங்கத்தை 1912 ம் வருஷம் மே மாதம் 27-ம் தேதியிலும், அதுமுதல் தொடர்ந்து சங்கங்கள் கூட்டி வந்து, ஏழாவது சங்கத்தை 1916-ம் வருஷம் ஆகஸ்டு மாதம் 19, 20, 21 தேதிகளிலும் நடத்தினார்கள். அதில் சுருதியைப் பற்றிப் பல வித்துவான்கள் பலவிதமாய்ச் சொல்வதையறிந்து, அவை யாவும் திட்டமாயும், அனுபவத்திற்கு வரக்கூடியதாயும் இல்லையென்று கண்டு, தென்னிந்திய சங்கீதத்

தைப் பின்னும் விரிவாகத் தொடர்ந்து ஆராய்ந்து வந்தார்கள். நாம் அனுபவத்தில் பாடிக்கொண்டிருக்கும் தியாகய்யர், தீக்ஷிதர், ஸ்யாமா சாஸ்திரிகள் முதலிய பெரியோர் செய்த நுட்ப சுரங்கள் வரும் கீர்த்தனைகளை வீணையில் தந்தத்தாலான மெட்டுகள் வைத்துப் பார்த்து, நுட்பமான சுரங்களைக் குறித்து, நாம் வழக்கமாகப் பாடிவரும் தன்யாசி, சங்கராபரணம், தோடி, புன்னாகவராளி, ஆரபி, தேவகாந்தாரி, பவப்பிரியா, கைகவசி, கானடா, சஹானா, நாயகி, பியாகடை முதலிய அநேக இராகங்களின் நுட்ப சுரங்களைப் பாடிப்பார்த்து, நம் தென்னிந்திய சங்கீதம் 22 சுருதிகளில் அடங்காதென்பதையும், 24, 48, 96 போன்ற அதிநுட்ப சுரங்களே உள்ளதாயிருக்கின்ற தென்பதையும் இவை யாவும் சிலப்பதிகாரமென்ற நம் பூர்வ தமிழ் நூலில் ஆயப்பாலை, வட்டப்பாலை, திரிகோணப்பாலை, சதுரப்பாலை என்று வகுத்துக் காட்டியிருப்பதையும் எடுத்துக்காட்டி அதிக விரிவாக எழுதியிருக்கிறார்கள். மேலும் அங்ஙனம் எழுதியதைத் தஞ்சை சங்கீத வித்யா மகாஜன சங்கத்திலும், 1916-ம் வருஷம் மார்ச்சு மாதம் 22-ம் தேதி பரோடாவில் நடந்த அகில இந்திய சங்கீத மகாநாட்டில், மேன்மை தங்கிய மகாராஜாவின் தலைமையிலும், தாகூர் நவாப் அலி அவர்களின் தலைமையின் கீழும், பரோடா திவான்சாகிப் V. P. மாதவராவ் அவர்கள் மேற்பார்வையிலும், (முதற் புத்தகம் 983-ம் பக்கம் முதல் பார்க்கவும்.) 24, 48, 96 போன்ற நுட்ப சுரங்கள் நம் அனுபவத்தில் பாடிக்கொண்டிருக்கும் கீர்த்தனைகளில் வருகிறதை, அந்த நுட்ப சுரங்கள் இருக்கும் இடத்தை வீணையில் மெட்டு வைத்துக் கமகம் வருவதை வாசித்தும் பாடிக்காட்டியும், ஆயப்பாலையின் பன்னிரு சுரங்களையும் வட்டப்பாலையின் 24 சுருதிகளையும் வரிசைக்கிரமமாய் வீணையோடும், வீணையில்லாமலும் எங்களைக் கொண்டு பாடிக்காட்டியுமிருக்கிறார்கள். கேட்ட வித்துவான்கள் யாவரும் நுட்பமான சுரங்கள் பாடப்பட்டதையும், அனுபோகத்தில் நாம் பாடும் கீர்த்தனைகளில் வரும் நுட்ப சுருதிகள் இன்னவையென்று நான்கு பாலைகளிலும் வரும் நுட்ப சுரங்களைப் பாடிக் காட்டியதையும் கேட்டு அதிக ஆச்சரியமும், சந்தோஷமும் கொண்டார்கள்.

சங்கீத வித்யா மகாஜன சங்கங்கள் நடத்தி வந்த சமயங்களில், அநேக இராகங்களுக்கு இராக சஞ்சாரங்கள் எழுதி, ஜீவசுரம், அமுதவைப்பு முதலியவைகளைக் கண்டு பிடித்து, கீதம், கீர்த்தனம், சுரஜதி, வர்ணம் அமைக்கும் வகைகளை எங்களுக்குப் போதித்து வந்திருக்கிறார்கள். அவர்கள் போதித்ததின்படியே நம் பழக்கத்திலிருக்கும் இராகங்களிலும், புது இராகங்களிலும் ஸ்புடம் செய்து, சுமார் 60 கீர்த்தனங்கள் வரை எழுதியிருக்கிறோம். எங்கள் சிறிய தாயார் திருமதி பாக்கியம் அம்மையார் அவர்களாலும், எங்கள் சகோதரி திரு. அன்னபூரணி அம்மாள் அவர்களாலும் அநேக இராகங்களுக்கு ஸ்புடமும் கீதமும் கைப்பிரதிகளில் எழுதி வைக்கப்பட்டிருக்கின்றன. சங்கீத வித்யா மகாஜன சங்கத்தில் நாங்கள் வச்சிரகாந்தி, மோகனம், நாகபூஷணி, ஹம்ஸத்தொனி, ஆனந்ததோடி, பௌளி, ஹிமாங்கி, ஆனந்தபைரவி முதலிய ராகங்களில் சில கீர்த்தனங்கள் பாடிக் காட்டினோம். சங்கீத வித்துவான்களும், மற்றும் வந்திருந்த பெரியோர்களும், இராகச் சாயையும், கீர்த்தனங்களின் போக்கும் அதிக அழகாக இருந்ததைக் கொண்டாடினார்கள். காயக சிகாமணி முத்தையா பாகவதர், விஜயநகரம் வீணை வேங்கட்டரமணதாஸ், மைசூர் வீணை சேஷண்ணா, கிருஷ்ண ராவ் முதலிய பெரிய வித்வான்கள் ஆச்சரியப்பட்டு, ஆசி வார்த்தைகள் பல கூறினர். ஆனால் "தமிழர்களுக்குச் சங்கீதம் ஏது? தமிழருக்குச் சங்கீத சாஸ்திரத்தைப்பற்றி என்ன தெரியும்? தமிழருக்கும், இசைக்கும் சம்பந்தமில்லை" என்று இழித்துரைத்த அக்காலத்தில், அதாவது சுமார் 30 வருஷங்களுக்கு முன்னதாக, அவர்கள் செய்த அரும் பெரும் வேலையைச், சிலர் வேண்டுமென்று "சுருதியைப்பற்றியும், கீதம், கீர்த்தனம் இப்பற்றுவதைப் பற்றியும், ஏன் இவர் எழுதிக் கொண்டும், சொல்லிக் கொண்டும் வீணாகப் பிரயாசைப் படுகிறார்," என்று வெகு ஏளனமாகப் பேசினார்கள். இசைத் தமிழின் பெருமையை அறியாமல், தற்பெருமை கொண்டு வேண்டுமென்று

ஏளனமாய் அன்னோர் பேசியதையெல்லாம் பொருட்படுத்தாமல், அறிவுடைய பெரியோர் சிலராவது அதன் பெருமையை அறிந்து நற்பயனடைவார்களெனத் துணிந்து, அதிக சிரத்தையோடும், ஊக்கத்தோடும் இராகத்தின் இணை. கிளை, நட்பு, பகை சுரத்தொடர்களை எழுதி, ஜீவ சுரம் தெரிந்து, அதிலிருந்து கீதம், கீர்த்தனம் முதலானவைகள் எழுதி, அம்மட்டில் நில்லாது, சாதனையிலும் கொண்டு வந்து, தென்னிந்திய தமிழ் மக்கள் யாவரும் சங்கீத சாஸ்திரத்தில் முன்னேற்றமடைந்து விருத்தியடையவும், தென்னிந்திய சங்கீதம் கலப்பில்லாமல் சாஸ்திர முறையுள்ளதாயிருப்பதை யாவரும் தெரிந்துகொள்ளவும் அவாக்கொண்டு, தம் மனோரதத்தை நிறைவேற்றத் தம் காலத்தையும் பொருளையும் சங்கீதத்திற்காகவே பிரயோகித்து வந்தார்கள். சங்கீதத்தையே தம் உயிர் நிலையாக வைத்து இரவு பகலாய் அநேக வருஷங்கள் சங்கீத விஷயமாய், ஆசையோடும், ஊக்கத்தோடும், விடாமுயற்சியோடும் உழைத்து வந்தார்கள்.

இப்படிப் பல வருஷங்களாய் ஆராய்ந்தறிந்த ஒன்றை, அதாவது, ஒரு இராகத்தை ஸ்புடம் பண்ணிக் கணக்கிட்டு அதிலிருந்து ஜீவ சுரமும், அதற்கு இணை கிளையான சுரங்களில் அமுதவைப்பு வருவதையும், இன்னும் பாடலமுதமும் தெரிந்து, கீதம், கீர்த்தனம், பதம், சுரஜதி வர்ணம் முதலானவைகள் இயற்றும் விதத்தையும், எங்களுக்குப் போதித்து, இந்த அருமையான விஷயங்களை உலகத்தார் யாவரும் தெரிந்துகொள்ளும் பொருட்டு, கருணாமிர்த சாகரம் இரண்டாம் புத்தகத்தை எழுத ஆரம்பித்தார்கள். அதில் முதல் பாகத்தில், இராகங்களின் தொகையையும், அவற்றின் விபரங்களையும், இரண்டாம் பாகத்தில் உலகத்தில் பரம்பரையாய் வழங்கி வருகிற தாய் ராகங்களை அல்லது மேளக்கர்த்தாக்களைப் பற்றியும், மூன்றாம் பாகத்தில் 72 மேளக்கர்த்தா இராகங்களையும், அவற்றில் பிறக்கும் ஜன்ய ராகங்களையும், அவைகளின் ஆரோகண அவரோகண சுரங்களையும், அவைகள் இன்னின்ன அலகில் வருகின்றன என்பதையும், அதிக விளக்கமாய் எழுதி 256 பக்கங்கள் வரை அச்சிட்டு வைத்திருந்தார்கள்.

இதற்குப் பின் ஒரு இராகத்தின் ஆரோகண அவரோகண சுரங்களைத் தெரிந்து, ஸ்புடம் செய்து அதினின்று கீதம், கீர்த்தனை, சுரஜதி, வர்ணம் முதலியவைகளைச் செய்யும் முறையை எழுதி அச்சிடவேண்டும் என்ற நோக்கமுடையவர்களாய், பல குறிப்புக்களை எழுதி வைத்திருந்தார்கள். அவைகளில் சில குறிப்புக்கள் அடுத்த பதிப்பில் வெளிவரும். இம்முறையானது பழைய ராகங்களில் மாத்திரமல்ல, புதிது புதிதான ராகங்களிலும் ஸ்புடம் செய்து, சுரங்களின் முக்கிய ஸ்தானமறிந்து, கீதம் கீர்த்தனை முதலியவை உண்டாக்கவும், ஸ்புடக் கணக்கிட்டு கர்னாடக ராகங்களைத் திருத்திக் கொள்ளவும் உதவியாயிருக்கும். சங்கீத அபிமானிகள் தங்கள் தங்கள் மனோபாவப்படி. பெரிதாகவும், சிறியதாகவும், ஸ்புடக் கணக்கினால் புதிது புதிதாகக் கீதம், கீர்த்தனைகள் உண்டு பண்ணி ராகங்களின் போக்கையறிந்து பக்தி ரசமான சாகித்தியங்களைச் செய்து அவற்றைப் பாடி ஆனந்தித்து அதினால் அதிகப் பலனடைவார்கள் என்று எண்ணி, இசைத் தமிழாகிய நம் சங்கீதம் மிகவும் நன்றாக ஒழுங்கு படுத்தப்பட்டுச் சிறந்த விதிகளும், இலக்கணங்களும் பொருந்தியதென்று யாவரும் தெரிந்து கொள்ளுமாறு விரிவாக எழுத நினைத்து, அனேக முக்கியமான குறிப்புக்களையும் ஸ்புடக் கணக்குகளையும் எழுதி வைத்திருந்தார்கள். இசைத் தமிழ் என்ற சங்கீத சாஸ்திர இலக்கணத்தின் மேலான விஷயத்தை, சற்குருவான எங்கள் தந்தையார் எங்களுக்கு அதிக சிரத்தையோடு போதித்தார்கள். எங்களுக்குப் போதித்தவைகளைக் கொண்டும், எழுதி வைத்த சில குறிப்புக்களைக் கொண்டும், சங்கீத உலகத்தாருக்குப் பிரயோஜனமாயிருக்குமாறு, சில சங்கீத ரஸிகர்களின் வேண்டுகோளுக்கிணங்கி இசை இலக்கண மேன்மையை விளக்கும் இந்நூலை வெளியிட்டோம். இந்நூலின் பின் பாகத்தில், சில ராகங்களை ஸ்புடம் செய்து இராக சஞ்சாரம், கீதம், கீர்த்தனை, சுரஜதி, வர்ணம் முதலியவைகளை எழுதிக் காட்டியிருக்கிறோம்.

சங்கீதக் கலை அதி நுட்பமான சாஸ்திர விதிகளும் இலக்கணமும் உள்ளதென்று தமிழ் மக்கள் இக்காலத்தில் நன்கு அறிவார்கள். ஒரு ராகத்தின் ஆரோகணம், அவரோகணம், ஔடவம், ஷாடவம், சம்பூரணம், வக்ரம், வர்ஜ்ஜியம், சுருதி பேதங்கள், இணை, கிளை, நட்பு, பகைசுரம், ஜீவசுரம், அமுத வைப்பு, பாடலமுதம் முதலியவை தெரிந்து, அந்த ராகத்தைப்பாடி அதன் இனிமையைத் தெரிந்து கொண்டவர்கள் அதையே விரும்புவார்கள் என்பது நிச்சயம். இசை இலக்கணத்தைக்கொண்டு புதிய இராகங்கள், புதிய கீதம், கீர்த்தனைகள் எழுத விரும்புவோர்க்கும், சங்கீத ரஸிகர்களுக்கும் இந்நூல் மிகுந்த பிரயோஜனமாயிருக்கும்.

இந்நூலை விரைவில் முடிக்கும்படியாக அடிக்கடி எங்களை உற்சாகப்படுத்திய தஞ்சை ஜில்லா ஜட்ஜ் கனம் M. அனந்தநாராயணய்யர், I. C. S., அவர்களின் இசைத் தமிழ் நுண்ணறிவைப் போற்றிப் பெரிதும் அவர்களுக்கு எங்கள் நன்றியைச் செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறோம்.

எங்கள் அருமைத் தந்தையார் மிகுந்த பிரயாசத்துடன் செய்துவைத்த வேலையிலுள்ள மேன்மையான பாகங்களை ஆராய்ந்தறிந்து விருத்திசெய்ய, அறிவிற்சிறந்த பெரியோரை வணக்கமாய்க் கேட்டுக்கொள்ளுகிறோம்.

பெருமை வாய்ந்த சங்கீத சாஸ்திரம் மென்மேலும் வளர்ந்து உலகத்திற்கு நன்மை பயக்கும் வண்ணம், தம்முடைய எல்லா நலங்களையும் தத்தஞ்செய்த எமது தந்தையாரின் நற்புகழ் நிலைத்து இந்நூலின் பயனாகச் சங்கீத உலகத்திற்குச் சகல நன்மைகளையும் அளிக்கும்படி, நாத சொரூபியாகிய தெய்வத்தின் திரு அருளைப் பிரார்த்திக்கிறோம்.

கருணாநிதி வைத்தியசாலை,
தஞ்சாவூர்.

ஆ. சுந்தரபாண்டியன்.
மரகதவல்லி துரைப்பாண்டியன்.



## தஞ்சை ஜில்லா ஜட்ஜ்,
## ஸ்ரீ M. அனந்தநாராயண ஐயர் M.A., I.C.S., அவர்களது

# மதிப்புரை.

**நமது** கலைகள் அறுபத்து நான்கெனக் கூறப்பட்டிருந்தாலும், அவைகளுள் சிதையா வடிவத்துடனும் பூர்விக களையுடனும் விளங்குவன மிகச் சிலவே. அவைகளுள் கர்நாடக ஸங்கீதம் முன் ஸ்தானத்தி லிருப்பதென்பதில் சிறிதும் சந்தேகமில்லை. இந்தக் கலையும், ஸ்ரீ தியாகராஜர், ஸ்ரீ முத்துஸ்வாமி தீக்ஷிதர், ஸ்ரீ ச்யாமா சாஸ்திரிகள் எனப்படும் ஸங்கீத 'மும்மணி' களும் கேரள நாட்டரசர் ஸ்ரீ ஸ்வாதித் திருநாள் மஹாராஜாவும் வாழ்ந்து இந்தக் கலைக்கு அருந்தொண்டியற்றி வந்த காலத்தி லடைந்த செழிப்பையும் பொலிவையும், பிற்காலத்தில் இழந்து நிற்பதாகவே கூற வேண்டும். இதற்குக் காரணம், முன்கூறிய ஸங்கீத மஹான்களை யொத்தவர் நமது நாட்டில் தோன்றாததே யென்று எளிதில் டகரலாம். ஆனால், இதனிடையே மற்றொரு சங்கை எழுகின்றது. மேற்கூறிய மஹான்களும் இசையிலக்கணமொன்றை அநுசரித்தன்றோ பல நுட்பமான கிளை ராகங்களில் கணக்கற்ற கீர்த்தனங்களை இயற்றிக் குவித்திருக்கிறார்கள்? 'அநுக்ரஹ பலத்தினால் இயற்றினார்கள்' என்ற கேவல சமாதானம் முற்றும் பொருந்துமா? தெய்வப் புலமை வாய்ந்த காளிதாஸர், கம்பர் முதலிய மஹாகவிகளும் ஓர் மொழியின் நுட்பங்களையும், யாப்பியலையும் கற்றறிந்தே, பிறகு கவித்வம் பெற்று விளங்கினவரன்றோ?

இசை யிலக்கணம் என்பது யாது? புதிதாகக் குறித்த வோர் ஆரோஹண அவரோஹணக் கிரமத்தில் ராகத்தை சிருட்டிக்கும் முறையும், அந்த ராகத்தில் கீதம், வர்ணம், கீர்த்தனைகளை இயற்றும் நுட்ப விதிகளும் எவை? இந்த விதிகளுக்கும், நமது ஸங்கீதத்தின் சுருதி நிலைகளுக்கும் சம்பந்தமென்ன? இவ்வாறெழும் சங்கைகளைத் தீரமாகவும் சாவதானமாகவும், எல்லையற்ற பொறுமையுடனும் முயற்சியுடனும் ஆராய்ந்தவர், காலம் சென்ற ராவ்சாகிப் மு. ஆபிரகாம்பண்டிதர் அவர்கள். காஷ்மீர தேசத்தவரும் கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்தவருமான சார்ங்கதேவர் இயற்றிய ஸங்கீத ரத்னாகரத்தில் கர்நாடக ஸங்கீதத்தின் சுருதிகள் 22 என்றும், 23 தந்திகள் அமையப்பெற்ற வீணையினால் அவைகளை நிர்ணயிக்கும் முறை யிதுவென்றும் குறிக்கப்பட்டிருக்கின்றன. டண்டிதர் அவர்கள் இந்த விஷயத்தை அதி நுட்பமாக ஆராய்ந்து, தமது கருணாமிர்தசாகரம் முதல் பாகத்தில் 24 சுருதிகளெனக் கொள்வதே தகுதியென்றும், அறிந்தோ அறியாமலோ நிகழும் ஸங்கீத சம்பிரதாயமும் இதை அநுசரித்தே யுள்ளதென்றும், பண்டைத் தமிழ்மக்கள் இவ்விதியை அடிப்படையாகக் கொண்டு ஒரு ஸ்தாயியின் பன்னிரண்டு ஸ்வரங்களை 24 அலகுகளாக நிச்சயித்து, ஸ்தாயியைப் பன்னிரண்டு ராசிகளாகப் பிரித்து, ஒவ்வொன்றிலும் பொருந்தும் ஸ்வரங்களைக்கொண்டு 24, 48, 96 என்ற நுட்ப சுருதிக் கணக்கில் ராகங்களைப் பெருக்கி அனுபவித்ததாகவும் எழுதியிருக்கிறார்.

இது விஷயத்தை அதி நுட்பமாய் ஆராய்ந்து நாம் அனுபவத்தில் பாடிக்கொண்டிருக்கும் இராகங்களைப் பிரித்து 2, 1, ½, ¼ போன்ற நுட்ப சுருதிகளை ஆயப்பாலை, வட்டப்பாலை, திரிகோணப்பாலை, சதுரப்பாலை என்ற அட்டவணைகளிற் பிரித்து அநேக இராகங்களில் வரும் நுட்ப சுருதிகளைக் கருணாமிர்தசாகரம் முதல் புத்தகத்தில் 874, 875, 876, 878 பக்கங்களில் எழுதியிருக்கிறார். அவர் முடிவுகளை விவரமாகப் பரீக்ஷித்து, தகுந்தனவா அல்லவா என்று நிர்ணயிக்கும் ஒரு நூலையும் நான் இதுவரை பார்த்ததில்லை. இந்த சுருதி விஷயம் எப்படிப்போனாலென்ன? என்று புறக்கணிப்பது தவறென்றே எனக்குத் தோன்றுகிறது. இதற்குக் காரணங்களைக் கூறுகிறேன்.

நமது கர்நாடக ஸங்கீதம் டன்னிரண்டு ஸ்வர ஸ்தானங்களில் பழகப்பட்டு வந்தாலும், இவைகள் வெறும் ஸ்தூல நிதானங்களே யென்பதையும், இவைகளால் மாத்திரம் ராகங்களின் நுட்ப நிலைகள் அறியப்படா என்பதையும் வித்துவான்கள் என்றும் ஒப்பவேண்டியவரே. இணை கிளை பகை நட்பு என்பவைகளைப்பற்றிச் சிலப்பதிகாரம், கல்லாடம், தண்டியலங்காரம், இசைமரபுடையார் முதலான டண்டைத் தமிழ் நூல்களில் சொல்லப்படும் முறையை அநுசரித்து யாவரும் அதினால்

பிரயோஜனமடையுமாறு இசை இலக்கணத்தைப் (ஸ்புடம்) பற்றி பண்டிதரவர்கள் இந்தப் புத்தகத்தில் தெளிவாகச் சொல்லியிருக்கிறார்கள். சமீபத்தில், விஞ்ஞான முறையில் சுருதிகளின் நுட்ப பேதங்களை விளக்கு மோர் நூல் வெளிவந்துள்ளது. (A Grammar of South Indian [Karnatic] Music By C. S. IYER.) ஒரே ஸ்வரஸ்தானம், ராகத்துக்குத் தக்கபடி தீவ்ரமாகவோ கோமளமாகவோ மாறுவது அநுபவப் பிரஸித்தம். பல உதாரணங்கள் கூறலாம். வராளி, கைகவசி போன்ற ராகங்களில் பிரதிமத்திமம் தீவ்ரமாக ஒலிப்பதும், (வராளி மத்திமம் என்ற வழக்குச் சொல் காண்க.) பியாகடையில் நிஷாத மத்திம ஸ்தானமும், ஆரபி சாமா போன்ற ஒத்த ராகங்களில் சதுச்ருதி ரிஷப ஸ்தான பேதத்தால் ராகச்சாயை மாறுவதும், மாயாமாளவ கௌள கல்யாணி ராகங்களில் காகலி நிஷாத ஸ்தானபேதமும், அநுபவத்தில் விளங்குவன. இவை விரிக்கின் பெருகும். கரஹரப்ரியா, ஹரிகாம்போதி ராகங்களை உத்தராங்கத்திலேயே பாடி ('பதநிஸ) சாயா பேதம் விளக்க முடியுமல்லவா? பன்னிரண்டு ஸ்வரங்களால் நமது ஸங்கீதம் ஒருநாளும் கட்டுப் படாது. ஏதோ வொரு இசை இலக்கணத்தைக் கொண்டுதான், ஸ்ரீ தியாகராஜர் போன்ற ஸங்கீத மஹான்கள் ஒரு ஆரோஹண அவரோஹணக் கிரமத்தில் ஒரு மிகச் சிறிய மாறுபாட்டாலும் புது சஞ்சாரங்களை நிர்ணயித்து, கீர்த்தனைகளை இயற்றியிருக்கவேண்டும்.

இப்பொழுது பிரசுரிக்கப்பட்டுள்ள இந்தக் கருணாமிர்தசாகரம் இரண்டாம் புத்தகம் இந்தப் பரம ரஹஸ்யத்தை உலக நன்மைக்காக வெளிப்படுத்த முன் வந்துள்ளது. இதில் வெளியிடப் பட்ட ஸ்புடம் முறை வேறெந்த நூலிலும் விவரிக்கப்பட்டதாகத் தெரியவில்லை. வித்வான்கள் முக்கியமாக இணை, கிளை, நட்பு, பகை (வாதி, ஸம்வாதி, அநுவாதி, விவாதி) ஸ்வரங்களின் உறவு களையும், ஜீவசுரம், அமுதவைப்பு, பாடலமுதம் என்ற குறிப்புக்களையும், 'ஸ்புடம் செய்யும் விதம்' என்ற 272-ம் பக்கத்திலுள்ள விதிகளையும், ஆழ்ந்து கவனிக்கவேண்டும். இறுதியில், மாயாமாளவ கௌளை, வச்சிரகாந்தி, [ஆபேரி] போன்ற பிரஸித்த ராகங்களிலும், கனகாங்கி (1), தர்மவதி (59), பவப்ரியா (44) போன்ற அபூர்வ மேளங்களிலும், ராகபூஷணி, கருணாகரி போன்ற அபூர்வ கிளை ராகங்களிலும், ஆனந்தரூபா, அபிராமம், ஞானப்போன், சுந்தராங்கி போன்ற புது இராகங்களிலும் ஸ்புடத் தொடர்களும், கீதம், கீர்த்தனைகளும் இயற்றப்பட்டுள்ளன. இந்த நூலின் உயிர்நிலையான விஷயத்தின் அருமையையும் மேன்மையையும் கூறின் மிக விரியும்.

இந்த நூலில் காணப்படும் கீதம் கீர்த்தனை முதலியவைகளை இயற்றிய ஸ்ரீமதி மரகதவல்லி துரைபாண்டியன் அம்மையார் அவர்கள், தமது தந்தையார் காலத்திலேயே உயர்குருவினிடம் இசையில் தகுந்த சிக்ஷை பெற்று, நிச்சயமான நுட்ப சுருதிஞானமும் இந்த ஸ்புட முறையைக் கையாளும் ஆற்றலும் அடைந்தவர். இதை நான் அனுபவத்தில் கண்ட பின்பே, இந்த முறையின் உயர்வு ஒருவாறு எனக்குப் புலனாகியது.

இன்னும் ஒரு மொழி. இதை இயற்றியவர் தமது சித்தாந்தத்தை யாவரும் ஒப்புக் கொள்ளுமாறு கேட்கவில்லை. வித்வான்கள் இதை ஆழ்ந்து, ஆராய்ந்து, உண்மை கண்டு, ஒப்பவோ மறுக்கவோ வேண்டுமென்றே விரும்பினார். அவர் தமது காலத்தில் ஸங்கீதத்தின் மறுமலர்ச்சியை இன்றுபோல் பார்க்கவில்லை. இன்றுவது, விஷயம் கடினமானதென்று திரஸ்காரம் செய்யாமல், வித்வான்கள் இதனுட் புகுந்து, 24 சுருதி பேதங்களை அஸ்திவாரமாகக் கொண்ட இந்த ஸ்புட முறையைக் கண்டு களிப்பதே, சாந்தியடைந்த பண்டிதரின் ஆத்மாவிற்கு மகிழ்ச்சி யளிப்பதாகும். அவரால் ஸங்கீத உலகத்தவர்க்கு ஏற்படும் பெரு நன்மை யாதெனில், ஸங்கீத ஞானமுள்ள பலரும் இந்த ஸ்புடம் செய்யும் முறையினைக் கண்டு தெளிந்து, புதிய புதிய ராகங்களிலும் பல அபூர்வ கிளைராகங்களிலும் இறைவனை வழிபட்டு, நாதரூபமாய் ஆனந்த நர்த்தனமிடும் பரம் பொருளைப் கீர்த்தனை மலர்களினால் அர்ச்சிப்பதேயாகும்.

தஞ்சை,
15—2—46.

M. அனந்தநாராயணன்.



கடவுள் துணை.



# கருணாமிர்த சாகரம்.

## இரண்டாவது புத்தகம்.

இராகங்களைப்பற்றியது.

### 1-வது பாகம்.

இராகங்களின் தொகையும் அவற்றின் விபரமும்.

### I. இரண்டாம் புத்தகத்தின் உள்ளுறை.

பூவுலகையும் அவைகளிலுள்ளயாவையும் தமது சொல்லால் உண்டாக்கி அவையாவற்றையும் காத்து நடத்திவரும் கர்த்தனின் கிருபையால் கருணாமிர்த சாகரம் இரண்டாம் புத்தகம் ஆரம்பிக்கப் பெற்றோம். எழுவகைத் தோற்றத்திலமைந்த எழு சுரங்களையும் அவைகள் சட்ஜம, பஞ்சம முறையாய் ஏழாவது ஏழாவதாய், இணை இணையாய், ஒரு ஸ்தாயியிலமைந்த பன்னிரு அரைச்சுரங்களையும் அவைகளின் உட்பிரிவான இருபத்துநான்கு, நாற்பத்தெட்டு, தொண்ணூற்றாறு போன்ற நுட்பமான சுருதிகளையும் அவைகளின் கணக்கையும் அவைகள் வழங்கிவந்த இராகங்களையும்பற்றிச் சில முக்கியமான குறிப்புகளை கருணாமிர்த சாகரம் முதற்புத்தகம் அல்லது கருணானந்தர் பொற்கடகத்தில் சுருக்கமாகப் பார்த்தோம்.

கருணானந்தர் பொற்கடகத்தில் பூர்வ தமிழ்மக்கள் வழங்கி வந்த இசைத்தமிழ் என்னும் சங்கீதத்திலுள்ள சுரம், சுருதிகள், நுட்ப சுருதிகளாகிய இவைகளே எக்காலத்திலும், எத்தேசத்தவரும் அனுஷ்டிக்கக் கூடிய மேலான முறையென்று ருசுப்படுத்துவதும் அம்முறையில் சுரம், சுருதிகளுக்கும், நுட்பமான சுருதிகளுக்கும் கணக்குச் சொல்வதும் அக்கணக்கின்படி

தற்கால அனுபவத்திலிருக்கும் இராகங்களை மெய்ப்பித்துக் காட்டவேண்டியதும் அதோடு சுருதிகளைப்பற்றி பலர் சொல்லும் அபிப்பிராயங்களையும் கணக்கினால் தவறுதலென்று ருசுப் படுத்திக் காட்ட வேண்டியதும் முக்கிய வேலையாயிற்று.

பொற்கடகத்தின் பொருளைப் பூரணமாய்க் கவனிப்போமானால் பூர்வ தமிழ் மக்களே மக்களில் முதல்வரென்றும் அவர்கள் பேசிவந்த மொழியே முதல் மொழியென்றும் அம் முது மொழி இயல், இசை, கூத்து என்னும் முப்பகுதியுடையதாய் இசைத்தமிழ் என்னும் சங்கீதம் பாஷையின் ஒரு அங்கமாயிருந்ததற்கு ஏற்பச் சுருதிகள் அமைப்பதிலும் இராகங்கள் உண்டாக்கும் முறையிலும் மற்றும் அதைச் சேர்ந்த ஆலாபம், அபிநயம் தாளம் முதலியவைகளிலும் யாழ், குழல், வங்கியம், தண்ணுமை முதலிய வாத்தியக்கருவிகளிலும் தமிழ் மக்களே முதன்மை பெற்றிருந்தார்களென்றும் நமக்குப் புலப்படாமல் போகாது.

எழுத்தில்லாமல் பேச்சுப்பழக்கத்தில் மாத்திரம் நிலைத்திருக்கும் பாஷை காலக்கிரமத்தில் பல பாஷையின் வார்த்தைகள் கலந்து இனந்தெரியாமல் போகும் என்பதை நாம் அறிவோம். அப்பாஷைக்கு எழுத்துண்டாய் அதற்குரிய வார்த்தைகளின்படி இலக்கணம் அமைந்து ஒழுங்குபடுமானால் அதன் பின் பலர் பலவிதமாய் நினைக்கவும் சொல்லவும் கூடிய ஒழுங்கீனம் உண்டாகமாட்டாது என்பதையும் அறிவோம். இதுபோலவே இராகங்களில் வழங்கிவரும் சுரம் சுருதிகள் இன்னவையென்று அறிந்து அவைகளுக்கேற்ற விதமாய் அவைகள் பொருந்தும் முறையில் ஒரு இராகம், கீதம் கீர்த்தனம் முதலியவை செய்யும் பொதுவிதியையும் தெரிந்து கொண்டால் மாத்திரம் தென்னிந்திய சங்கீதம் கலப்பின்றி நிலையுள்ளதாகும்.

பொற்கடகத்தில் ஒரு ஸ்தாயியில் பாடப்படும் சுரங்கள் ஏழு என்றும், ச-ப, ச-ம முறையாய் ஏழாவது ஏழாவதாய், ஐந்தாவது ஐந்தாவதாய் உண்டாகும் சுரங்கள் பன்னிரண்டு அரைச்சுரங்கள் என்றும், ஒரு ஸ்தாயியில் வழங்கும் பன்னிரண்டு அரைச் சுரங்களை இரண்டு இரண்டு அலகாகப் பிரித்து இருபத்து நான்கு சுருதிகளாகவும், அவைகளையும் பாதி பாதியாகப் பிரித்த 48, 96 போன்ற நுட்ப சுரங்களில் இனிமை பெற பூர்வ தமிழ் மக்கள் பல பண்களைப் பாடி பகவானை ஆராதித்து வந்தார்களென்றும் சுரம், சுருதிகளில் எவ்வித மான சந்தேகமும் உண்டாகாதபடி மிகத் தெளிவுறச் சொல்லி யிருந்தார்களென்றும் பார்த்தோம். அவைகளின் கணித முறையையும் அனுபவ முறைகளையறியும் திருஷ்டாந்தங்களையும் போதுமான அளவு பார்த்திருக்கிறோம்.

இதைப்போலவே 2/3, 2/3, ஆய்ப் போவதினாலுண்டாகும் 4/5, 5/6, 5/8, 9/10 போன்ற பின்னங்களில் கிடைக்கும் natural scale என்று சொல்லப்படும் unnatural scale ஒரு காலத்திலும் சங்கீதத்திற்கு வழங்கி வந்ததில்லையென்றும் அவைகள் ஒருநாளும் வழக்கத்தில் வரமாட்டாவென்றும் மிகத் தெளிவுறக் காண்போம். $\frac{2}{3}$, $\frac{3}{4}$ முறையாய் சங்கீதத்திற்கு சுரம், சுருதிகள் சொல்வோரின் அபிப்பிராயங்களை ஒன்றாகச் சேர்த்துப் பொற்கடகம் 491—494 ம் பக்கங்களில் வரும் 4 அட்டவணைகளில் யாவரும் இலகுவாய் அறிந்து கொள்ளும் படி கொடுத்திருக்கிறோம்.

மேலும் ஒரு ஸ்தாயியில் 22 சுருதிகளுண்டென்று சொல்வோரின் கொள்கையைப் பல நியாய வழியாகவும் கணித மூலமாகவும் எடுத்துக்காட்டிக் கண்டித்திருக்கிறோம். இவைகள் சுருதியைப்பற்றித் தெளிவான அறிவையுண்டாக்குமென்று நம்புகிறோம். இதைப் போலவே ஒரு ஆரோகண அவரோகணத்தில் இராகம், கீதம், கீர்த்தனங்கள் செய்யத் தெரிவிக்

கும் முறையும் மிக முக்கியமானதென்று எனக்குத் தோன்றுகிறது. என் பாஷைக்காரரும் என் தேசத்தவரும் அன்றி; உலகத்தவர் யாவரும் இம்முறையை அறிந்து சங்கீதத்தின் உயர்வை உண்மையில் கண்டு ஆனந்தப்பட வேண்டுமென்று விரும்பியே இதை எழுதுகிறேன்.

ஒரு ஆரோகண அவரோகணத்தில் இராகம் எழுதும் முறை இதுவரையிலும் எங்கும் சொல்லப்படாததாலும் எவரும் அறிந்திராததாலும் இது அதிக உபயோகமாயிருக்குமென்று எண்ணுகிறோம்.

ஒரு ஆரோகண சுரங்களில் அச்சுரங்களுக்குரிய பொதுவிதியின்படி ஒரு இராகம் உண்டாக்கவும் இராக சஞ்சாரத்திற்கு வழிகாட்டும் கீதம் உண்டாக்கவும் அதிலிருந்து கீர்த்தனங்கள் முதலியவையுண்டாக்கவும் பூர்வம் முதல் தமிழ்மக்கள் திறமையுடையவர்களாயிருந்தார்களென்று பல உருப்படிகளினால் காண்கிறோம். அப்படியிருந்தாலும் அவைகள் இசையில் தேர்ந்த அவதார புருஷர்களால் மாத்திரம் செய்யப்பட்டிருக்கிறதாகச் சொல்லப்படுகிறது. இதனால் சங்கீத வித்தைக்கு ஆதாரமான முதல் பாடம் அதாவது கீதம் மற்றவர்களால் பாடம் பண்ணப்பட்டு வந்ததேயொழிய அதன் செய்முறை இன்னதென்று ஒருவரும் அறிந்துகொள்ள ஏதுவில்லாமல் போயிற்று. அதனால் அபூர்வமான சில இராகங்கள் நாளடைவில் மறைந்தும் மலினப்பட்டும் வருகின்றன.

ஆரோகண அவரோகணங்களில் கீதங்கள் கீர்த்தனங்கள் எழுதும்படியான ஒரு முறை நமக்கு இருக்குமானால் பூர்வ இராகங்கள் காலக்கிரமத்தில் மறைந்து போகமாட்டா. சங்கீதமே இன்னதென்று தெரியாத சாதாரண அறிவுடைய ஒருவன் சங்கீத வித்வான்கள் கொண்டாடும்படியான ஒரு கீதத்தை திருத்தமுற எழுதக்கூடிய ஒரு முறையிருப்பது சங்கீத சாஸ்திரத்திற்கு உயிர் நிலையான ஒரு உயர்ந்த இடமென்று நாம் எண்ணுகிறோம். எப்படி சுரஸ்தானங்களும் சுருதி ஸ்தானங்களும் நிலையுறச் சொல்லாமல் போனால் ஒரு இராகமில்லையோ, அது போலவே கீதம் எழுதும்முறை தெரியாமல் போனால் சங்கீத சாஸ்திரமே உயிரற்றதாகுமென்று திட்டமாகச் சொல்லலாம்.

கீதம் எழுதும் சரியான முறையை நாம் தெரிந்துகொள்வோமானால் இதன் முன்னுள்ள கீதங்கள், நெடுநாள் அனுபோகத்தைக்கொண்டு மிகுந்த பிரயாசையுடன் செய்யப்பட்டிருப்பதாகவும் அவைகளில் சிலபாகங்கள் விடப்பட்டிருப்பதாகவும், விடுபட்ட பாகங்களைக் காட்டுவதற்கு பல கீதங்கள் எழுதப்பட்டதாகவும் காண்போம். அதோடு ஒரு இராகத்தின் சிவசுரம் இன்னதென்று சங்கீதம் அதிகம் தெரியாதவர் கூட கண்டு சொல்லக்கூடியதான ஒரு முறையையும் கண்டிருக்கிறோம்.

பதினாறுக்குப் பதினாறு என்ற பெருக்கல் வாய்ப்பாட்டில் ஆறு எண்களின் பெருக்குத் தொகையைவிட்டு பத்துப் பெருக்குத் தொகையை வைத்து ஒரு வாய்ப்பாடும் மற்றொருவர் முந்தினவர் விட்ட ஆறு தொகையில் சில சேர்த்து மற்றும் பத்துத் தொகையில் ஒரு வாய்ப்பாடும் இப்படியே ஒருவர் பின் ஒருவராக வித்தியாசமான எத்தனையோ வாய்ப்பாடுகள் உண்டாக்கலாம். ஆனால் பதினாறு பெருக்குத் தொகையையும் பூரணமாய்த் தெரிந்த ஒருவன் இவைகள் சில தொகைகள் குறைந்துள்ளனவென்று சொல்வான். அதுபோலவே கீதம் எழுதத் தெரிந்தவனுக்கு அந்த இராகத்திற்குரிய சஞ்சாரமெல்லாம் வருவதைக் கண்ட பின் இதற்கு முன்னுள்ளவை சற்றுக் குறையுடையவை என்று காண்பான். ஒரு இராகத்திற்கு எழு எட்டுக் கீதம் படிக்கும் சிரமம் நீங்கி ஒரு கீதத்திலேயே ஒரு இராகத்திற் குரிய பூர்ண சஞ்சாரம் அறிவான்.

இம் மேலான ஒரு முறை எந்த தேசத்தவரின் சங்கீத சாஸ்திரத்திற்கும் இது வரையும் இருந்ததில்லை என்று துணிந்து சொல்லலாம். இம் முறைக்குரிய ஆதார விதிகள் பூர்வ தமிழ் நூல்களில் அங்கங்கே வெகு சுருக்கமாகக் காணக்கிடக்கின்றன. என்றாலும் அவைகளின் பொருளை அறிந்து அனுபவ முறை தெரிந்து அனுஷ்டானத்துக்குக் கொண்டு வரக் கூடியதாக இல்லை. மிகுந்த அனுபவமுடையவர்களுக்கு மாத்திரம் ஒருவாறு விளங்கக் கூடியதே யொழிய மற்றவர்கள் இலேசில் அறிந்துகொள்ளக் கூடியதாயில்லை.

சங்கீத சாஸ்திரத்திற்கு உயிர் போன்ற இம்முறையை தெய்வாதீனமாய் நான் கண்டு பிடித்தேன் என்று சொல்வதைப் பெரியோர் மன்னிக்கும்படி மிகவும் கேட்டுக்கொள்ளுகிறேன்.

என் பிள்ளைகளுக்கு பள்ளிக்கூடம் ஒழிந்த நேரங்களில் சொற்ப சங்கீத அப்பியாசம் செய்து வைத்த நான் அவர்களுக்கு இலேசாகத் தோன்றும்படி சங்கீத விஷயமாய் சில எழுதி வந்தேன். சங்கீத சாஸ்திரத்தில் வழங்கும் சில அருமையான இராகப் பிரஸ்தாரங்கள், பல்லவிப் பிரஸ்தாரங்கள், மேளக் கர்த்தாவின் விபரங்கள், ஒரு ஸ்தாயியில் இருபத்து நான்கு சுருதிகள் முதலியவைகளைப் பற்றி விசாரித்து எனக்குத் தெளிவாகத் தெரிந்தவற்றை எழுதிக் கொண்டு வந்தேன். இவ் விஷயங்களில் அரிகேசவநல்லூர் மகா-ா-ா-ஸ்ரீ முத்தையா பாகவதர் அவர்களும், தஞ்சை, வீணை, மகா-ா-ா-ஸ்ரீ வேங்கடாசலம் ஐயர் அவர்களும் அப்போதைக்கப்போது உதவியாயிருந்தார்கள். இப்படிப் பல வருஷங்கள் வேலை செய்தும் என் மனது சங்கீத சாஸ்திரத்தின் விஷயத்தில் ஒரு முடிவுக்கு வரவில்லை.

ஒரு ஆரோகண அவரோகணத்தில் இராக சஞ்சாரம் எழுதவும், கீதம் எழுதவும், கீர்த்தனம் எழுதவும் கூடிய முறை வந்தாலொழிய சங்கீத சாஸ்திரத்தின் முடிவைக் கண்டதாக எண்ணக்கூடாதென்ற அறிவு அடைந்தேன்.

பலமுகமாக பல சங்கீத வித்வான்களிடத்திலும் விசாரித்தேன். கீதம் எழுதும் முறை இராகம் எழுதும் முறை, தெரிந்தவர்களிருக்கிறார்களா என்று பல நாள் விசாரித்தேன். அவ் விஷயத்தில் எவ்விதமான துப்பும் சொல்லக் கூடியவர்களை நான் பார்க்கவில்லை. இராக சஞ்சாரத்திற்கு சுருக்கம் எழுதுவதைப் பற்றி விசாரித்த பொழுது சிலர் ‘ இவருக்கு சங்கீதப் பயித்தியம் பிடித்துவிட்டது ’ என்று பரிகாசம் செய்தார்கள்.

கூடவே யிருந்து கவனித்த வீணை வேங்கடாசலம் ஐயர் அவர்கள் ‘ எழு கடலுக்கும் எல்லை சுலபமாகப் போட்டு விடலாம். எழு சுரங்களில் பாடப்படும் ஒரு இராகத்திற்கு எல்லை கட்டிச் சொல்வது கூடிய காரியமல்ல ’ என்று சொன்னார்கள்.

மற்றும் சிலர் ‘ இவருக்கு முன் பின் சங்கீதம் ஒன்றுந் தெரியாது ஏதோ மனதில் நினைத்துக்கொண்டு இப்படி உழைக்கிறார் ’ என்று பரிகாசம் செய்தார்கள்.

இப்படி யிருக்கையில் மைசூர் வைணிக சிகாமணி மகா-ா-ா-ஸ்ரீ சேஷண்ணா அவர்கள் தஞ்சைக்கு வந்தபோது இவ் விஷயத்தைப் பற்றி பல குறிப்புகள் பேசிக்கொண்டிருந்தேன். அவர்கள் மற்ற யாவையும் ஒப்புக்கொண்டாலும் கீதம் எழுதும் முறையைக் கேட்ட மாத்திரத்தில் ‘பரம்பரையாய்ச் சங்கீதத்திலேயே சீவனம் பண்ணும் எங்கள் ஞாபகத்திற்கு வராத அநேக காரியங்களைச் சொல்லுகிறீர்கள். அவைகள் நடக்கக் கூடிய காரியங்கள் என்று நான் நினைக்கவில்லை. தாங்கள் வீண் சிரமம் எடுத்துக்கொள்ள வேண்டாம்’ என்று சொல்லி விட்டு ரயிலுக்குப் போகும்பொழுது அவரோடு ஸ்டேஷனுக்குப் போய்க்கொண்டிருந்த பென்ஷன் டிப்டி போஸ்ட் மாஸ்டர் எனது சிநேகிதர் கிருஷ்ணசாமி ஐயரிடம் ‘பண்டிதர் அவர்களுக்கு

சங்கீதப் பயித்தியம் பிடிக்கும்போலத் தோன்றுகிறது. அவர் கேட்கிற கேள்விகளைப் பார்த்தால் ஆச்சரியமாகத் தோன்றுகிறது. ஆனால் நியாயமாகவு மிருக்கிறது. வெயில் காலம் அதிகமாயிருப்பதனால் அதிக சிரமம்எடுத்துக்கொள்ளவேண்டாம் என்று நான் சொன்னதாகச் சொல்லுங்கள்' என்று சொல்லிப் போனார்கள்.

இப்படிப் பல வழியில் விசாரித்தும் அனுகூலமான ஒரு குறிப்பையாவது நான் காண வில்லை. ஆனால் 'இப்படி ஒரு முறை யிருக்கவேண்டும்; இருந்தால் மிகப் பிரயோஜனமா யிருக்கும்' என்ற எண்ணம் மாத்திரம் என் மனதை விட்டு ஒரு நிமிஷமும் நீங்கவில்லை.

மேலும் என் அபிப்பிராயத்தை யொத்த சில முறைகளாவது எங்கேயாவது இருக்கலாமென்று நினைத்து சுதேசமித்திரன், மதுரைத் தமிழ்ச் சங்கத்து செந்தமிழ், ஸ்டான்டர்டு முதலிய பேப்பர்களுக்கும் மேற்றிசைக்கும் வியாசங்கள் எழுதியிருந்தேன். அவற்றுள் பல குறிப்புகளில் 5-வது குறிப்பு வருமாறு:—

5. ஒவ்வொரு இராகத்தின் சஞ்சாரக்கிரமம் அறிவதற்குக் கீதம் ஆதாரமென்கிறீர்களே. அப்படிப்பட்ட கீதம் இப்போதுண்டாக்கக் கூடியவர்கள் இருப்பார்களானால் பின்வரும் அலகுள்ள சுரங்களில் தமக்குப் பிரியமான ஒரு தாளத்தில் கீதம் அமைத்துக் கீதம் அமைக்கும் விதத்தையும் என் சொற்ப அறிவுக்குத் தெளிவாக விதியுடன் சொல்ல அநுக்கிரகிப்பார்களா?

24-வது மேளம் வருணப்பிரியையில் ஜன்னியமான நவநீதபஞ்சமம் சகமத பதநிசா சநிபமரிசா. ரி-க 4 சுருதி; த-நி.6-வது சுருதி; சுத்தமத்திமம்.

மற்றும் அவ்வியாசம் முழுமையும் பொற்கடகத்தில் 235—242ம் பக்கங்கள் வரை காண்க. இந்தியாவிலிருந்தாவது, மேற்றிசையிலிருந்தாவது என் விருப்பத்திற்குத் தகுந்த மறுமொழி கிடைக்கவில்லை.

இராகம் கண்டு பிடிக்கும் முறையைக் கொண்டு புதிய கீர்த்தனங்களும் கீதங்களும் செய்து பிள்ளைகள் படிப்பதாகவும் மற்றவர்களும் புதிய கீர்த்தனங்கள் செய்து படிப்பதாகவும் சிம்ம சொற்பனம் கண்டு கொண்டிருந்தேன்.

இப்படிப் பல நாள் செல்லுகையில் ஒரு நாள் அரிகேசவ நல்லூர் மகா-ா-ா-ஸ்ரீ முத்தையா பாகவதர் அவர்களும், வீணை மகா-ா-ா-ஸ்ரீ வேங்கடாசலம் ஐயர் அவர்களும் வீணை வாசித்துக் கொண்டிருந்த எனது மூத்த குமாரத்தி அன்னபூரணி யம்மாளும், நானும் சங்கீத விஷயமாய்ப் பேசிக்கொண்டிருந்த சமயத்தில் இராகங்களை உண்டாக்குவதற்கு உதவியான ஒரு முறை தெய்வாதீனமாய் என் மனதில் தோன்றிற்று.

உடனே மகா-ா-ா-ஸ்ரீ முத்தையா பாகவதர் அவர்களை எழுதும்படியாகக் கேட்டுக் கொள்ள அம் முறைகளில் ஒன்றையும் விடாமல் பூரணமாய் எழுதினார்கள். இவைகள் இதற்கு முன் பின் எனக்குத் தெரியாதவைகளா யிருந்ததனால் மகா-ா-ா-ஸ்ரீ வேங்கடாசலம் ஐயர் அவர்களும் மகா-ா-ா-ஸ்ரீ முத்தையா பாகவதர் அவர்களும் மிகுந்த ஆச்சரியப்பட்டு எழுதப் பட்டவைகளில் சொல்லியிருக்கும் முறைப்படி இராகம் பாடிப்பார்த்து அவை மிகவும் சரியா யிருக்கின்றனவென்று சந்தோஷமடைந்து அம் முறையே மற்றும் சில இராகங்களைச் செய்து பார்க்கையில் அவைகளும் சரியாயிருப்பதாக அனுபவத்தில் கண்டு அடைந்த சந்தோஷத்திற்கு அளவில்லை. 'இன்று தான் சங்கீதத்திற்கு உயிர் பிறந்தது, இந்த இடம் தான் சங்கீதம் பிறந்த இடம்' என்று மிகவும் கொண்டாடினார்கள்.

இம் முறையை மற்ற யாவருக்கும் சொல்ல வேண்டுமென்று நினைக்கிறேன். தங்களுடைய அபிப்பிராயம் என்னவென்று கேட்கும்பொழுது மகா-ா-ா-ஸ்ரீ வேங்கடாசலம் ஐயரவர்கள் இதை ஒருவருக்கும் சொல்லக்கூடாதென்றும் மகா-ா-ா-ஸ்ரீ முத்தையா பாகவதர் அவர்கள் உலகத்திற்குச் சொன்னால் மிக உபகாரமாயிருக்குமென்றும் சொன்னார்கள். அதன் மேல் உலகத்தவருக்கு வெளிப்படுத்த வேண்டுமென்றே நினைக்கிறேன். ஆனால் இன்னும் இதோடு கவனிக்க வேண்டிய சில காரியங்கள் இருக்கின்றனவென்று காண்கிறேன். நான் பூரணமாய்க் கண்டு வெளிப்படுத்தும் வரைக்கும் தாங்கள் இதை வெளிப்படுத்தாதிருக்கும்படி உறுதி சொல்லவேண்டுமென்று கேட்டுக்கொண்டேன். அப்படியே அவர்களும் மிக சந்தோஷத்துடன் ஒப்புக்கொண்டார்கள்.

1909-ஆம் வருஷத் துவக்க முதல் இதுவரையும் இராகங்களுக்குரிய முறைகளை எழுதுவதில் முயற்சி எடுத்து வந்தேன். பல அம்சங்களில் சில அம்சங்கள் விட்டுப்போனதாகக் கண்டு அப்போதைக்கப்போது திரும்பத் திரும்ப எழுதும் வேலை இருட்டித்தது. சில தரம் அதாவது 700 இராகங்கள் எழுதின பின் மைசூர் வைணிக சிகாமணி மகா-ா-ா-ஸ்ரீ சேஷண்ணா அவர்கள் தஞ்சையில் என் வீட்டிற்கு வந்த சமயத்தில் கீதங்களைப் படித்துக் காட்டினேன். அவர்களும் பல இராகங்களுக்கு கீதம் படிக்கும்படி கேட்டு அவைகள் முற்றிலும் சரியாயிருக்கிறதென்று கொண்டாடினார்கள். அதன்பின் 'இப்படியெல்லாமிருந்தாலும் ஒரு வித்வானிடத்திலிருந்து தானே இவை கற்றுக்கொள்ள வேண்டியதாயிருக்கிறது' என்று சொன்னார்கள். எதனால் அப்படி சொல்லுகிறீர்கள் என்று கேட்க, 'ஒரு இராகத்திற்கு சிவசுரம் இன்னதென்று தெரிந்தால் மாத்திரம் இவைகள் பிரயோஜனப்படும். இல்லையானால் படிப்பது கஷ்டமாகும். சிவ சுரம் கண்டு பிடிக்கும் முறை யிருந்தால் அப்போது மிகப் பிரயோஜனமாயிருக்கும்' என்று சொன்னார்கள்.

இதன் முன் சிவசுரம் கண்டு எழுதும் நினைப்பில்லாதிருந்தாலும், இராகங்கள் செய்யும் முறையில் வரும் சில முறைகளைக் கவனித்தால், அதையும் கண்டு பிடித்துச் சொல்லலாமென்று எண்ணமுண்டாக, அவர் முன் கண்டு பிடித்துச் சொல்லலாம் என்று பதில் சொன்னேன். அவர் உடனே ஒரு இராகத்தைச் சொல்லி அதற்கு சிவ சுரம் சொல்லும்படி கேட்டார். கணக்குப்பார்த்து சிவ சுரம் இன்னதென்று ஒரு கடிதத்தில் குறித்து அவர்களையும் குறிக்கும்படியாகச் சொல்லி முடிவில் ஒத்துப் பார்த்து சந்தோஷமடைந்தாலும், திருப்தியடையாமல் இன்னொன்று, இன்னொன்றாக ஏழு இராகங்களுக்கு சிவ சுரம் கேட்டு, அவைகள் யாவும் சரியாயிருக்கக் கண்டு திடீரென்று தான் எழுந்திருந்து, மேல் வஸ்திரங்களைத் தாழ்த்தி தன் இரு கைகளையும் குவித்துக்கொண்டு 'இது மகான்களாலும், இராஜாக்களாலும், நடக்கவேண்டிய காரியம் இதைத் தாங்கள் சீக்கிரம் அச்சிட்டு எங்கள் கண்ணுள்ள பொழுதே கொடுக்கவேண்டும்' என்று பகவானைப் பிரார்த்தித்து பிரியமொழி பல சொன்னார்கள. நானும் பிரதி நமஸ்காரம் செய்து தெய்வ கிருபைக்காக நன்றி பாராட்டினேன்.

அதன்பின் என்னிடத்திற்கு வரும் சிறந்த வித்வான்களுக்கு நேரில் பாடிக் காட்டி அவர்கள் அபிப்பிராயம் அறிந்து இவை உலகத்திற்கு பிரசித்தப்படுத்தக் கூடியவை யென்று தைரியங் கொண்டேன்.

மைசூர் வைணிக சிகாமணி மகா-ா-ா-ஸ்ரீ சேஷண்ணா அவர்களும் விஜயநகரம் வைணிக சிரோமணி மகா-ா-ா-ஸ்ரீ வேங்கடரமணதாஸ் அவர்களும் மைசூர் வைணிகர் மகா-ா-ா-ஸ்ரீ H. P. கிருஷ்ணராவ் B. A. அவர்களும் அரிகேசவநல்லூர் மகா-ா-ா-ஸ்ரீ

முத்தையா பாகவதர் அவர்களும் உத்தமமான புதிய முறையென்று கொண்டாடியிருக்கிறார்கள். அதில் மகா-ா-ா-ஸ்ரீ H. P. கிருஷ்ணராவ் அவர்கள் அபிப்பிராயம் பின் வருமாறு.

**Indian Music Journal. By H. P. Krishna Rao, B.A. Vol. I. No. 5. 1911 Page 102, 103.**

"Two days—25th and 26th were spent at Tanjore in the company of Rao Sahib Abraham Pandither avl. The Rao Sahib is a very popular gentleman both by his profession and good nature. He is an ardent admirer of music and the treatise on music that he is writing is likely to be of immense good to the students only if he would carry out the plans he has chalked out. All his children are well-versed in music, eastern as well as western, and it is a great pleasure to every friend of the Pandit to listen to the sweet singing of his children in *solo* or in *concert*. One admirable work that he is engaged in is the laying down of a set of rules for enabling every student of music to compose Gitams, Swarajatis and other Pieces.

மகா-ா-ா-ஸ்ரீ H. P. கிருஷ்ணராவ் B. A. அவர்களுடைய இந்தியன் மியூசிக் ஜர்னல் Vol. I. No. 5. 1911 பக்கம் 102, 103.

"25 ஆம், 26 ஆம் தேதிகளாகிய இரண்டு நாட்களையும் தஞ்சாவூரில் Rao Sahib Pandither அவர்களுடன் கழித்தோம். தன்னுடைய தொழில் மூலமாயும் சற்குணத்தின் மூலமாயும் Rao Sahib அவர்கள் யாவராலும்நன்கு மதிக்கப்பட்டார்கள். சங்கீதத்தில் அவர்களுக்கு அத்யந்த பிரீதி. இப்போது அவர்கள் எழுதிக் கொண்டு வரும் சங்கீத நூலானது அவர்கள் மனதில் நினைத்திருக்கிற பிளான்படி முடிவடையுமானால் சங்கீதம் படிப்பவர்களுக்கு அதிக பிரயோசனமுள்ளதாய் இருக்கும். அவர்கள் குமாரர் குமாரத்திகள் எல்லாரும் மேற்றிசை சங்கீதத்திலும் கீழ்த்திசை சங்கீதத்திலும் தேர்ந்தவர்களானதால் அவர்கள் இன்னிசையோடு தனித்துப் பாடுவதையும் எல்லோரும் ஒன்று சேர்ந்து பாடுவதையும் அவர்கள் சிநேகிதரெல்லாரும் கேட்டு ஆனந்திக்கும் படியான சிலாக்கியம் இருக்கிறது. இப்போது அவர்கள் செய்து வரும் வேலையின் அருமையான பாகம் என்னவென்றால் சங்கீதம் கற்கும் ஒவ்வொருவரும் தானாய் கீதம், ஸ்வரஜதி முதலியவற்றை எழுதும் படிக்கான விதிகளை எழுதிக்கொண்டு வருவதே."

ஒரு இராகத்திற்கும் மற்றொரு இராகத்திற்கும் சொற்பமாக ஒரு சுரம் வித்தியாசமிருந்தாலும் அது ஒன்றினாலேயே இராகம் முற்றிலும் பேதமாகுமென்பதை நாம் அறிவோம். சங்கராபரணத்திற்கும் கல்யாணிக்கும் உள்ள சுரத்தில் எல்லாம் ஒன்று போலிருந்தாலும், சங்கராபரணத்திற்கு சுத்த மத்திமமும், கல்யாணிக்குப் பிரதி மத்திமமுமாக மத்திமம் மாத்திரம் சற்று பேதப்படுவதனால், இராகத்தின் அம்சம் முற்றிலும் பேதப்படுகிறது. இதுபோலவே ஒன்று, இரண்டு, மூன்று முதலிய சுரங்களை விட்டுப் பாடுவதாலும் அவைகள் முன் பின்னாக வருவதனாலும் இராகங்கள் அதிக பேதத்தை அடையும். அதோடு ஆரோகணத்தில் ஒரு விதமாகவும், அவரோகணத்தில் வேறொரு விதமாகவும் சுரங்கள் வந்து இராகங்கள் அனந்த விதமாம்.

பூர்வ தமிழ் மக்கள் பன்னீராயிரம் ஆதி இசைகளைப் பாடிக்கொண்டு வந்ததாகத் தெரிகிறது. அவைகள் வர வர, பழக்கத்திலில்லாமல் குறைந்து சுமார் ஆயிரத்து சொச்சம் இராகங்களுக்கு மாத்திரம் தற்காலத்தில் ஆரோகண அவரோகணங்கள் தெரிகின்றன. அவைகளில் சுமார் 100 இராகங்கள் வரைக்கும் பெரிய வித்வான்களுக்குள் பழக்கத்திலிருக்கின்றன.

ஆகையால் தற்காலத்தில் ஆரோகண அவரோகணம் காணப்படும் எல்லா இராகங்களுக்கும் இராக முறை எழுதுவது மிகுந்த பணச் செலவும் பிரயாசையுமான காரியமாம். இராக முறைகளைப் பற்றி முதல் முதல் எழுத நினைத்து ஆயத்தம் செய்து வந்த நான் சங்கீத

வித்யா மகாஜன சங்கத்தில் சுருதிகளின் விவாதத்தை முன்னிட்டு உண்டான சந்தேகங்களை நீக்க சுருதிகளைப் பற்றி முதற் புத்தகமாக எழுதவேண்டியதாயிற்று. அதனால் இது இரண்டாம் மூன்றும் புத்தகங்களாக வெளியிட வேண்டியதாயிருக்கிறது.

இராகங்களைப் பற்றிய முறை எழுது முன் வரக்கூடிய இராகங்கள் எத்தனை என்று அனுபோக பூர்வமாய்க் கணக்கிட்டு அறிந்துகொள்வது நமக்கு நல்லது. இப்படிப்பட்ட விஷயங்களை அதிக அவசியமல்லவென்று இதன் முன் சங்கீதத்தில் தேர்ந்த பல புண்ணியவான்கள் விட்டு விட்டதினால் சங்கீதத்திற் குரிய அநேக அம்சங்கள் தற்காலத்தில் புலப்படாமல் போயின. ஆகையால்

(1) சுரப் பிரஸ்தாரங்களினால் சம்பூரணம், சாடவம், ஔடவம் என்னும் வழியில் எத்தனை இராகங்கள் கிடைக்குமென்று முதல் முதல் அறியவேண்டும்.

(2) உலகத்தில் நாளது வரையும் வழங்கிவந்த கர்த்தா இராகங்கள் இன்னவையென்று விசாரிக்கவேண்டும்.

(3) 72 மேளக் கர்த்தாக்களைப் பற்றியும் அவற்றில் வரும் ஜன்னிய இராகங்களைப் பற்றியும் கவனிக்கவேண்டும்.

(4) இராகம் உண்டாக்குவதற் குரிய முறைகளில் கவனிக்க வேண்டிய சில ஆதார விதிகளையும் இராகங்கள் செய்முறையையும் கவனிக்க வேண்டும்.

இந்நான்கு பிரிவுகளும் மிக முக்கியமானவை. இவைகளைப் பற்றிய விவரம் தெரியாமல் போகவே சங்கீதத்தில் சந்தேகம் உண்டாயிற்று. அதாவது

### சுரப்பிரஸ்தாரங்கள்.

(1) ஏழு சுரங்களும் முன் பின்னாகக் கலந்து எத்தனை விதம் வரலாம்? அதில் வக்கிர வர்ச்சியமாக எப்படி வரலாம்? அப்படி வருபவைகளில் எத்தனை பிரஸ்தாரங்கள் வரும்?

(2) அப்படி வந்த ஆரோகண அவரோகணங்கள் முறைப்படி கலந்து வெவ்வேறு விதமான இராகங்கள் எத்தனை உண்டாகும்? அதன்மேல் ஆரோகண அவரோகணங்கள் சம்பூரணமாகவும் $7 \times 7$, சம்பூரண சாடவமாகவும் $7 \times 6$, சம்பூரண ஔடவமாகவும் $7 \times 5$, சாடவ சம்பூரணமாகவும் $6 \times 7$, சாடவ சாடவமாகவும் $6 \times 6$, சாடவ ஔடவமாகவும் $6 \times 5$, ஔடவ சம்பூரணமாகவும் $5 \times 7$, ஔடவ சாடவமாகவும் $5 \times 6$, ஔடவ ஔடவமாகவும் $5 \times 5$, வருவதனால் எண்ணிறந்த இராகங்கள் உண்டாகும். இவற்றோடு ரிஷப காந்தாரமும் தைவத நிஷாதமும் 2, 4, 6 முதலிய அலகுகள் பெற்று மத்திமம் சுத்த மத்திமம், பிரதிமத்திமம் என்ற இரண்டு பேதத்தோடும் வரும்போது ஏராளமான இராகங்கள் உண்டாகலாம். இவைகள் யாவையும் கணக்கிட்டுச்சொல்வது யாவருக்கும் பிரயோசனமாயிருக்கும்.

என்றாலும் சம்பூரணம், சாடவம், ஔடவம் என்ற மூவகையிலும் உண்டாகும் லட்சத்து எழுபத்தோராயிரத்து முந்நூற்றுத் தொண்ணூற்றாறு இராகங்களையும், அவைகளிலிருந்து விகுருதி பேதத்தால் ஏற்படும் 72 தாய் இராகங்களின்படி உண்டாகக்கூடிய மற்றும் இராகங்களையும் வட்டப்பாலை திரிகோணப்பாலை சதுரப்பாலைகளில் வரும்போது உண்டாகும் எண்ணிறந்த இராகங்களையும் ஒருவாறு நாம் கவனிக்கவேண்டும்.

---

தாய் இராகங்கள் அல்லது கர்த்தா இராகங்கள் என்று வழக்கமாய்ச் சொல்லிக் கொள்ளும் மேளக்கர்த்தாவைப்பற்றி நாம் சிறிது கவனிக்கவேண்டும். அதிபூர்வமாகத் தென் தமிழ் நாட்டில் வழங்கிவந்த கர்த்தா இராகங்கள் இன்னின்னவை என்பதையும் (2) அதன் பின் தமிழ் நாட்டிற்கு வந்த மற்றவர் வழங்கிவந்த ஆறு கர்த்தா இராகங்களையும் அவற்றிற்கினமான முப்பத்தாறு இராகங்களையும் (3) 72 மேள கர்த்தா இராகங்களையும் (4) 4264 கர்த்தா இராகங்களையும் அவைகளின் சுர அமைப்பையும் பூர்வ தமிழ் மக்களின் அபிப்பிராயத்திற்கு ஒத்தவைகளும் தற்கால அனுபவத்திலிருப்பவைகளுமாகிய 72 கர்த்தா இராகங்களைப்பற்றியும் அவைகளில் வரும் ஜன்னிய இராகங்களைப் பற்றியும் நாம் பார்க்கவேண்டும்.

---

4. சம்பூரணம், சாடவம், ஔடவமாக ஆரோகணம் அவரோகணம் ஒன்றுபோல் வரும் இராகங்களும் இவைகளில் ஆரோகணம் ஒன்றாகவும் அவரோகணம் வேறொரு விதமாகவும் ஆரோகண அவரோகணங்களில் வக்கிரமாகவும் வக்கிரமில்லாமலும் கலந்து வரும் (1,71396) லட்சத்து எழுபத்தோராயிரத்து முந்நூற்றுத் தொண்ணூற்றாறு இராகங்களில் ஒன்றின் ஆரோகண அவரோகணத்தை வைத்துக்கொண்டு அதற்கு இசை முறை வைப்பு, இசைகூடா நரம்பு, ஆளத்தி செய்யுமாறு, பாடல் அமுதம், இசை பொருந்தும் முறையில் பண் அமைப்பு ஆகிய இந்த ஐந்து முக்கிய காரியங்களை கவனிக்கவேண்டும்.

1. ஒரு ஆரோகண அவரோகணத்தில் சுரங்கள் ஒன்றோடொன்று பொருந்தும் முறையும் பொருந்தா முறையும் தெரிந்து கொண்டபின்பே அவற்றில் பாடல் அமுதம் அல்லது சீவ சுரம் இன்னதென்று காணவேண்டும்.

2. ஒரு ஆரோகணத்தில் அமுதவைப்பு (சீவ சுரம்) தெரிந்தபின்பே ஆளத்தி பாடவேண்டும் அல்லது ஆலாபிக்கவேண்டும்.

3. அமுதவைப்பு (சீவ சுரம்) தெரிந்து கொண்டபின்பே பண் (கீதம்) அமைக்கவேண்டும்.

4. அம்முறையே வர்ணம், கீர்த்தனம், பல்லவி முதலிய உருப்படிகள் செய்வதற்கு அநுகூலமாம்.

ஒரு ஆரோகண அவரோகணத்தில் சுரங்கள் பொருந்தும் முறையில் ஒன்றன் பின் ஒன்று வைப்பதே தமிழ் இராகங்கள் இனிமைபெறுவதற்கும் ஒரு இராகத்தின் சாயை மற்றொன்றோடு கலவாமல் தனித்துப் பெயர் சொல்லி அழைக்கப்படுவதற்கும் போதுமான காரணமாயிருக்கிறது. இந்த அருமையை அறியாத பலர் கர்நாடக சங்கீதத்தில் Harmony இல்லை என்று சொல்வார்கள். ஆனாலும் அவைகள் தனித்த அழகுடையவைகளாய் இருக்கின்றனவென்று கண்டு ஆச்சரியப்படுகிறார்கள். நாலு விதமாக ஒற்றுமைச் சுரம் தெரிந்து அதாவது பூர்வ தமிழ் மக்கள் அகநிலை, புறநிலை, அருகியல், பெருகியல் என்னும் நாலுசாதியில் வழங்கிவந்த முறைப்படி பாடத்தெரிந்தவர்கள் அகநிலையில் அவரவர் இஷ்டப்படி எழுதிய ஒரு பாடலுக்கு மற்றும் மூன்று சாதிப்பாடல்கள் எழுதும் விதம் சொன்னார்களேயொழிய முதல் பாடலுக்கு இலக்கணம் சொல்லவில்லை; ஆனால் முதல் சாதி எப்படி எழுதுகிறதென்று தெரியாமல் சில பொதுக்குறிப்புகள் மாத்திரம் சொன்னார்கள். அதனால் பல இராகங்கள் கலந்து ஒன்றுபோல் தோன்றக் கூடியவைகளாய் இராகவேற்றுமையில்லாமல் கலங்குகின்றன. இவ்வாறின்றி வேற்றுமைகள் தெளிவாய்த் தெரிவதற்கு சுரங்கள் ஒன்றோடொன்று பொருந்தும் முறை மிக அவசியம். அதோடு ஒரு இராகத்தை அதன் எல்லா அழகோடும் ஆலாபிப்பதற்கு சிவசுரம் அல்லது பாடலமுதமாய் வருகிற சுரம் இன்னதென்று தெரியவேண்டும். சிவசுரம் இன்ன

தென்று அறிந்துகொள்வதற்கு இயலாமல் குரு பரம்பரையாய் நாளது வரையும் சொல்லப்பட்டு வருகிறது. மிக இரகசியமாக வெகுநாளைக்குப் பின் சொல்லப்படுகிறதாக நாம் அறிவோம். இதனால் புதிய இராகங்களில் ஒன்றைப்பாடுவதற்கு கூடாமலிருக்கிறதென்பது யாவரும் அறிந்த காரியம்.

ஆளத்தி செய்யும் பொழுது அநேக விதமான பிரஸ்தாரக் கிரமங்கள் உபயோகிக்க நேரிடும். அக்காலத்தில் அந்த ஆரோகண அவரோகணத்திற்குப் பொருந்தாத தொகுதிகள் இன்னவையென்று அறிந்தால் மாத்திரம் அவைகளை விலக்கி இசைபொருந்தும் முறையில் அழகாகப்பாட முடியும். அதுவன்றி பகை நரம்புகள் கலக்குமானால் பண் அழகுபடாமல் வெறுப்புத்தரும். இம்முறையை நாம் ஒழுங்கு பெற கவனிப்போமானால் இராகங்கள் மிக அழகாகவும் சுரங்கள் பொருந்தும் முறையில் அவைகளுக்குண்டாகும் இனிமையோடும் பொருளோடும் கேட்பவர்களை ஆனந்திக்கும் செயலோடும் பொருந்தி நிற்கும். இவைகளில் ஒவ்வொன்றையும் அறியவேண்டுமென்றும் அநுபோகத்திற்குக் கொண்டு வரவேண்டுமென்றும் அவாக்கொண்டநான் இரவுபகலாய் இதே ஞாபகமாகவும் இதே பேச்சாகவுமிருந்து இடைவிடாமல் பலமுறைகளைச் செய்துபார்த்துக்கொண்டு வருகையில் தெய்வாதீனமாய் ஒரு உத்தமமுறையைக் கண்டுபிடித்தேன். அதிலிருந்து அம்முறைக்கு அநுகூலமான பல குறிப்புகளையும் ஒன்றன் பின் ஒன்றாக அறிந்து அதற்கேற்ற விதமாய் இராக முறை எழுதியிருக்கிறேன். அதில் ஒவ்வொன்றையும் கற்க விரும்புவோர் சுலபமாய் அறிந்துகொள்ளக்கூடிய விதம் காட்டியிருக்கிறேன். சில திருஷ்டாந்த மூலமாய் விளக்கியுமிருக்கிறேன்.

எனக்குத் தெரிந்தவைகள் மிக சொற்பமாய்த் தோன்றிய போதிலும் அவை தெரியுமுன் நான் அடைந்த துன்பத்தையும் அவைகள் தெரியாமல் மற்றவர்படும் கஷ்டத்தையும் அறிந்தே மிகத் தெளிவாக எழுதியிருக்கிறேன்.

கீதங்கள் எழுதும் முறையில் பல எழுதக்கூடும் என்பதையும் காட்டியிருக்கிறேன். கீதம் எழுதுவதில் அவைகளுக்கு சாகித்தியம் செய்யும் முறை சில சொல்லியிருக்கிறேன். கீதங்கள் யாவுக்கும் சாகித்தியம் எழுதாமல் பாக்கி வைத்திருக்கிறேன். நேரம் கிடைக்கும் பொழுது அவரவர் தங்கள் தங்கள் விருப்பத்தின்படி அவைகளைச் செய்துகொள்ளட்டுமென்றே அவைகள் விடப்பட்டிருக்கின்றன. இராகங்களின் போங்கை அறிந்து பக்திரசமான சாகித்யங்கள் செய்துகொள்ளக்கூடியவர்கள் அப்போதைக்கப்போது செய்துகொள்ளலாம் என்பதே என்னுடைய நோக்கம். இராகங்களில் தற்கால அநுபோகத்திற்கு அவசியமானவைகள் எவைகளோ அவைகளை எவ்வித மறைப்புமின்றி எழுதியிருக்கிறேன். அநுபோகத்திற்கு வராதவைகளுக்குப் பதிலாக நான் எவ்விதமான கற்பனையும் யுக்தியும் நினைக்கவில்லை. அசம்பாவிதமான கட்டுக்கதைகள் நாளடைவில் பயனற்றவை யாவதோடு பிறர் கண்டு நகைக்கவும் கூடியவையாகுமே. என்றாலும் சுரங்களைப்பற்றிய சில நுட்பமான குறிப்புகளை நேரங் கிடைக்கும் பொழுது நான் எழுதுவேன்.

இது வரையிலும் எந்த தேசத்திலும் எவரும் அறிந்துகொள்ளாததாகிய ஒரு ஆரோகண அவரோகணத்தில் ஒரு இராகம் உண்டாக்கும் முறையை நான் தெய்வகிருபையால் வெளிப்படுத்தினேன் என்று பெருமை பாராட்டிச் சொல்லிக்கொள்ளக்கூடியதாயிருந்தாலும் அறிவிற்சிறந்த பெரியோர் அவைகளில் ஒவ்வொன்றையும் நன்குமதித்து அவற்றில் வரக்கூடிய சொற்ப குற்றங்களை நீக்கிக் குணத்தைக் கொள்ளும்படி மிகுந்த வணக்கத்துடன் பிரார்த்திக்கிறேன்.

## 9. பரதர் தமது காலத்திற்குமுற்பட்ட மிகப்பழமையான நூல்களில் சொல்லப்படுகிறதாகச் சொல்லும் 36 தாய் இராகங்கள்.

| | | |
|---|---|---|
| 1. பைரவம் | 3. இந்தோளம் | 5. மேகநாதம் ¶ |
| 2. மாளவ கௌசிகம் | 4. தீபகம் | 6. ஸ்ரீராகம் |

இவைகள் ஒவ்வொன்றிற்கும் ஐந்து ஐந்து ஸ்திரீ ராகங்களுண்டு. அவையாவன:—

| I. பைரவம். | II. மாளவ கௌசிகம் | III. இந்தோளம். |
|---|---|---|
| 1. பைரவி | 1. விசித்திரை | 1. வைராவளி |
| 2. கடபைரவி | 2. பாவினி | 2. பாராதோடி |
| 3. மாலஸ்ரீ | 3. மாரவணி | 3. தேசாக்கியை |
| 4. படமஞ்சரி | 4. இராமக்கிரி | 4. சணவாரிகை |
| 5. லளிதை | 5. கூர்ஜரி | 5. மாதவி |

| IV. தீபகம். | V. மேகநாதம். | VI. ஸ்ரீராகம். |
|---|---|---|
| 1. தனசரி | 1. களாடிகை | 1. வங்காளி |
| 2. வசந்த | 2. கௌரி | 2. மேகசாலி |
| 3. கர்நாடி | 3. கருபா | 3. மோதகா |
| 4. வைராடி | 4. விபாவரி | 4. சாமா |
| 5. மதுகரி | 5. கௌடி | 5. அசாவேரி |

இவை மண்டலகண்டிதர் எழுதிய மாதுர்கா விலாசத்தில் 141, 142, 143ஆம் பக்கங்களில் சொல்லப்படுகின்றன. (கருணாமிர்த சாகரம் 624-625ஆம் பக்கங்களில் காண்க.)

¶ மேக இராகம் என்று பூர்வ தமிழ்மக்களும் மேக விரஞ்சி அல்லது வேகவிரஞ்சி என்று சங்கீத ரத்னாகரரும் வழங்கிவந்தார்கள். தற்காலத்தில் மேகரஞ்சனி என்று வழங்கி வருகிறது. அப்படியானால் ஆறு தாய் இராகங்களும் தமிழ் இராகங்களே.

## 10. பூர்வ தமிழ் நாட்டில் வழங்கி வந்த இராகங்கள்.

| புருட இராகம். | ஸ்திரீஇராகம் | புருட இராகம். | ஸ்திரீ ராகம் |
|---|---|---|---|
| பைரவி | தேவக்கிரியை<br>மேகவிரஞ்சி<br>குறிஞ்சி | வசந்தம் | இராவக்கிரியை<br>வராளி<br>கைசிகம் |
| பூபாளம் | வேளாவளி<br>மலஹரி<br>பௌளி | மாளவி | குண்டக்கிரியை<br>நாராயணி<br>கூர்ச்சரி |
| சிராகம் | இந்தோளம்<br>பல்லதி<br>சாவேரி | பங்காளம் | தன்னியாசி<br>காம்போதி<br>கௌளி |
| படமஞ்சரி. | தேசி<br>இலலிதை<br>தோடி | நாட்டை | தேசாக்ஷரி<br>காந்தாரம்<br>சாரங்கம் |

| | | | |
|---|---|---|---|
| துக்கஇராகம். | 1. ஆகிரி<br>2. கண்டாரவம் | 3. நீலாம்பரி<br>4. பியாகடை | 5. புன்னாகவராளி<br>6. வராளி |
| மகிழ்ச்சி இராகம். | 1. காம்போதி | 2. தன்னியாசி | 3 சாவேரி |
| யுத்த இராகம். | 1. நாட்டை. | | |

| | | | |
|---|---|---|---|
| வசந்தகால இராகம் | 1. காம்போதி | 2. அசாவேரி | 3. தன்னியாசி |
| மாலை இராகம். | 1. கல்யாணி | 3. கன்னடம் | |
| | 2. காபி | 4. காம்போதி | |
| யாம இராகம். | 1. ஆகிரி | | |
| விடியற்கால இராகம். | 1. இந்தோளம் | 3. தேசாக்ஷரி | 5. பூபாளம். |
| | 2. இராமகலி | 4. நாட்டை | |
| உச்சி இராகம். | 1. சாரங்கம் | 2. தேசாக்ஷரி | |

மேற்காட்டிய அட்டவணையை நாம் கவனிக்கையில் எட்டு புருட இராகமென்றும் அவைகள் ஒவ்வொன்றிற்கும் மும்மூன்றாக இருபத்துநான்கு ஸ்திரீ இராகங்களென்றும்சொல்வதாகக் காண்போம். அவைகள் முப்பத்திரண்டும் $4 \times 8 = 32$ ஆக வழங்கி வந்திருக்கலாமென்றும் நாம் நினைக்க இடமிருக்கிறது. சுத்தசுரங்கள் பன்னிரண்டாக வழங்கிவரும் முறையில் இரண்டு அலகுபெற்ற ரிஷபம் இரண்டு அலகு பெற்ற காந்தாரத்தோடும் நாலு அலகுள்ள காந்தாரத்தோடும் வரும்பொழுது இரண்டு பேதத்தைப் பெறும். அப்படியே நாலு அலகுள்ள ரிஷபம் காந்தாரத்தின் இரண்டு பேதங்களையும் பெறும். ஆக ரிஷபகாந்தாரங்கள் நாலு பேதத்தையடையும். இம்முறையே தைவத நிஷாதங்களும் நாலு பேதத்தையடையும். ரிஷப காந்தாரத்தின் நாலு பேதங்களில் ஒவ்வொன்றோடும் தைவத நிஷாதங்கள் கலந்து வரும்பொழுது $4 \times 4 = 16$ பேதங்களாகும். இதோடு சுத்தமத்திமமும் பிரதிமத்திமமும் இப் பதினாறு பேதங்களோடு கலந்து வரும்பொழுது முப்பத்திரண்டாகும். இம் முறையில் வழங்கிவரும் தற்கால இராகங்களின் முறைப்படி பெயர் சொல்லி யிருக்கிறோம். பூர்வ முறைப்படி அவ்விராகங்கள் இன்னின்ன சுரமுறையில் இருந்தனவென்று சொல்லும் நூல் இல்லை. இருந்தாலும், ரிஷப காந்தாரங்களின் நாலு முக்கியமான பேதங்களையும் அவற்றோடு பிரதிமத்திமம் கலந்து வரும் பொழுதுண்டாகும் நாலு பேதங்களையும் முக்கியமாக எடுத்துக்கொண்டு 8 புருட இராகங்ளென்று சொல்வதாகவும் அதற்குப் பின் ரிஷப தைவதங்களின் பேதத்தினால் வரும் மும்மூன்று இராகங்களை ரிஷப காந்தாரத்தோடு வரும் 8 இராகங்களோடு சேர்த்து இனம் பிரித்துச் சொல்லுவதாகவும் நாம் நினைக்கவேண்டியிருக்கிறது. இதனால் சுரபேதங்களை அறிந்துகொள்ளக் கூடிய விதமாய் ரி-க வின் நாலு பேதங்களை புருட இராகமென்றும் த-நி யின் பேதங்களை ஸ்திரீ இராகமென்றும் பெயரிட்டழைக்கிறதாகக் காண்கிறோம். ச, ரி, க, ம, ப, த, நி என்ற ஏழு சுரத்தில் ரி-க வின் முன் பாகத்தைப் பிரதானமாய் எடுத்துக்கொண்டு அதற்கு வாதி சம்வாதியான த-நி என்ற பேதங்களை ஸ்திரீ பாகமாக்கிப் பெயர் வைத்ததானது மிகவும் கொண்டாடத்தக்கது. பஞ்சமத்தின் கீழுள்ள ரி-க என்ற சுரங்கள் பஞ்சமத்திற்கு மேலுள்ள த-நி சுரங்களோடு சட்சம பஞ்சம முறையாய்ச் சேர்ந்து வருகின்றனவென்று நாம் அறிவோம். இதையே இணை சுரமென்றும் பொருத்த சுரமென்றும் இம்முறையே சுரங்கள் கண்டுபிடித்தார்களென்றும் சொல்லுவது மிகப் பொருத்தமாயிருக்கிறது. சட்சமத்திற்கு எப்படி பஞ்சமம் இணை சுரமாய் அல்லது களத்திர சுரமாய் வருகிறதோ அம்முறையில் புருட இராகமென்றும் ஸ்திரீ இராகமென்றும் பெயர் வைத்ததாக நாம் கவனிக்கவேண்டும். இம்முறையில் 32 தாய் இராகங்கள் பிறக்கும் முறை பின் வரும் அட்டவணையில் காண்க.

## 11. பூர்வ தமிழ்நாட்டில் வழங்கிவந்த 32 இராகங்கள்.

(32 இராகத்தில் சுத்த மத்திம இராகங்கள் 16-உம் பிரதி மத்திம இராகங்கள் 16-உம்).

| | | 2 | 4 | 2 | 4 | 2 | | | 2 | 4 | 2 | 4 | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ச | ரி | ரி | க | க | ம | | ப | த | த | நி | நி | இராகங்களின் பெயர் |
| 1 | ச | ரி | ... | க | ... | ம | | ப | த | ... | நி | ... | அனுமத்தோடி |
| 2 | ச | ரி | ... | க | ... | ம | | ப | த | ... | ... | நி | தேனுக |
| 3 | ச | ரி | ... | க | ... | ம | | ப | ... | த | நி | ... | நாடகப்ரியை |
| 4 | ச | ரி | ... | க | ... | ம | | ப | ... | த | ... | நி | கோகிலப்ரியை |
| 5 | ச | ரி | ... | ... | க | ம | | ப | த | ... | நி | ... | வகுளாபரணம் |
| 6 | ச | ரி | ... | ... | க | ம | | ப | த | ... | ... | நி | மாயாமாளவகௌள |
| 7 | ச | ரி | ... | ... | க | ம | | ப | ... | த | நி | ... | சக்ரவாகம் |
| 8 | ச | ரி | ... | ... | க | ம | | ப | ... | த | ... | நி | சூர்யகாந்தம் |
| 9 | ச | ... | ரி | க | ... | ம | | ப | த | ... | நி | ... | நடபைரவி |
| 10 | ச | ... | ரி | க | ... | ம | | ப | த | ... | ... | நி | கீரவாணி |
| 11 | ச | ... | ரி | க | ... | ம | | ப | ... | த | நி | ... | கரகரப்ரியை |
| 12 | ச | ... | ரி | க | ... | ம | | ப | ... | த | ... | நி | கௌரிமனோகரி |
| 13 | ச | ... | ரி | ... | க | ம | | ப | த | ... | நி | ... | சாருகேசி |
| 14 | ச | ... | ரி | ... | க | ம | | ப | த | ... | ... | நி | சரசாங்கி |
| 15 | ச | ... | ரி | ... | க | ம | | ப | ... | த | நி | ... | ஹரிகாம்போதி |
| 16 | ச | ... | ரி | ... | க | ம | | ப | ... | த | ... | நி | தீரசங்கராபரணம் |

| | | 2 | 4 | 2 | 4 | | 4 | | 2 | 4 | 2 | 4 | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ச | ரி | ரி | க | க | | ம | ப | த | த | நி | நி | இராகங்களின் பெயர் |
| 1 | ச | ரி | ... | க | ... | | ம | ப | த | ... | நி | ... | பவப்ரியை |
| 2 | ச | ரி | ... | க | ... | | ம | ப | த | ... | ... | நி | சுபபந்துவராளி |
| 3 | ச | ரி | ... | க | ... | | ம | ப | ... | த | நி | ... | ஷட்விதமார்க்கிணி |
| 4 | ச | ரி | ... | க | ... | | ம | ப | ... | த | ... | நி | சுவர்ணாங்கி |
| 5 | ச | ரி | ... | ... | க | | ம | ப | த | ... | நி | ... | காமநாராயணி |
| 6 | ச | ரி | ... | ... | க | | ம | ப | த | ... | ... | நி | காமவர்த்தினி |
| 7 | ச | ரி | ... | ... | க | | ம | ப | ... | த | நி | ... | ராமப்ரியை |
| 8 | ச | ரி | ... | ... | க | | ம | ப | ... | த | ... | நி | கமநசிரம் |
| 9 | ச | ... | ரி | க | ... | | ம | ப | த | ... | நி | .. | ஷண்முகப்ரியை |
| 10 | ச | ... | ரி | க | ... | | ம | ப | த | ... | ... | நி | ஸிம்மேந்திரமத்தியமம் |
| 11 | ச | ... | ரி | க | ... | | ம | ப | ... | த | நி | ... | ஹேமவதி |
| 12 | ச | ... | ரி | க | ... | | ம | ப | ... | த | ... | நி | தர்மா வதி |
| 13 | ச | ... | ரி | ... | க | | ம | ப | த | ... | நி | ... | ரிஷபப்ரியை |
| 14 | ச | ... | ரி | ... | க | | ம | ப | த | ... | ... | நி | லதாங்கி |
| 15 | ச | ... | ரி | ... | க | | ம | ப | ... | த | நி | ... | வாசஸ்பதி |
| 16 | ச | ... | ரி | ... | க | | ம | ப | ... | த | ... | நி | மேசகல்யாணி |

## 12. தற்காலம் வழங்கிவரும் 72 மேளகர்த்தாக்களைப்பற்றி.

பூர்வ தமிழ்மக்கள் ஒருஸ்தாயியில் வழங்கி வந்த ஏழு சுரங்களை செம்பாலைப்பண் அல்லது தீர சங்கராபரண முறைப்படி, 1, 2, 2, 1, 2, 2, 2, என்னும் இராசிகளின் இடைவெளியுள்ளதாய் அதாவது சட்சமத்திற்கு ஒரு இராசியும் ரிஷபத்திற்கு இரண்டு இராசியும் காந்தாரத்திற்கு இரண்டு இராசியும் மத்திமத்திற்கு ஒரு இராசியும் பஞ்சமத்திற்கு இரண்டு இராசியும் தைவதத்திற்கு இரண்டு இராசியும் நிஷாதத்திற்கு இரண்டு இராசியுமாக, சட்சமம் 2 அலகும் (சுருதியும்) ரிஷபம் நாலு அலகும் காந்தாரம் நாலு அலகும் மத்திமம் இரண்டு அலகும் பஞ்சமம் நாலு அலகும் தைவதம் நாலு அலகும் நிஷாதம் நாலு அலகுமாக வைத்துப் பாடியிருக்கிறார்களென்று தெளிவாக அறிகிறோம். இதனால் ஒருஸ்தாயியில் ச-ப முறையாய் அல்லது இணை இணையாய் அல்லது ஏழாவது ஏழாவது இராசியாய் சுரம் பொருந்தும் முறையில் பன்னிரண்டு அரைச் சுரங்கள் அதாவது இரண்டு அலகுள்ள அல்லது இரண்டு சுருதிகொண்ட பன்னிரண்டு சுரங்கள் கண்டு பிடித்து அவற்றைப் பன்னிரண்டு இராசிகளில் அமைத்துச் செம்பாலை அல்லது சங்கராபரண முறைப்படிக் கிரகமாற்றி ஆறு தாய் இராகங்களும் அவைகளைச் சேர்ந்த பல கிளை இராகங்களும் பாடினார்களென்று இதன் முன் பல இடங்களிலும் சொல்லியிருக்கிறோம்.

மேலும் இம்முறையில் பன்னிரு பாலை பிறக்கும் வழியில் காணப்படும் சில சுர சம்பந்தங்களினால் பல இராகங்கள் உண்டாகும் முறையும் தோன்றுகிறது. 96 ஆம் பக்கத்தி லுள்ள சக்கரத்தில் காண்கிறபடி ரிஷப காந்தாரங்கள் நாலு பேதத்தையடைவதுபோல, 88 ஆம் பக்கத்தில் சொல்லியிருக்கும் ஆயப்பாலை முறையில் பிறக்கும் பன்னிரு பாலையில் ரிஷப காந்தாரங்கள் தங்கள் இடம் விட்டு முன்பின் சென்று மும்மூன்றாகி ஆறு பேதத்தை அடையக் கூடியவையென்று 2, 4, 7, 9, 11, ஆம் வரிகளில் காண்போம். அதாவது நாலாவது தைவதத்தில் நிஷாதமும் நாலாவது ரிஷபத்தில் காந்தாரமும் கீழ் இறங்கி நிற்கிறதாகக் காண்போம். இதுபோலவே மத்திம பஞ்சமங்களும் காந்தார மத்திமங்களின் இடத்தில் இறங்கி நிற்கின்றன. இதனால் சுரங்கள் வரவேண்டிய இரண்டு இராசிகள் போக மூன்று இராசிகள் வரும்படியாக அமைத்துப் பல பேதங்களுண்டாக்கி 12000 ஆதி இசைகள் பாடினார்களென்று காண்கிறோம்.

பன்னிருசுரங்களில் பாடிய ஆயப்பாலை முறையும் இருபத்து நான்கு சுருதிகளில் இரண்டு சுருதி குறைத்துக் கானம்பண்ணிவந்த வட்டப்பாலை முறையும் இன்னும் நுட்பமான சுருதிகளில் கானம் பண்ணி வந்த திரிகோணப்பாலை சதுரப்பாலை முறைகளும் இசைத் தமிழ் நூல்களில் காணப்படுகின்றன. இவைகளால் எண்ணிறந்த இராகங்களுண்டாக் கூடுமாயினும் இவற்றின் ஆரோகண அவரோகணங்கள் இன்னவையென்று காணக் கிடைக்காமையால் நாம் வற்புறுத்திச் சொல்ல ஏதுவில்லை. தேவாரம், திருவிசைப்பா, திருத்தாண்டகம் முதலிய பக்திக்குரிய நூல்களில் சொல்லப்படும் இராகங்களின் பெயரைக் கொண்டும் அவைகளின் சந்தத்தைக்கொண்டும் அவைகளுக்கு ஆரோகண அவரோகணங்களைக் கண்டு பிடித்து இக் காலத்தில் பாடப்படும் இன்னின்ன இராகத்திற்குச் சரியாயிருக்கிறதென்று நாம் குறித்துக் கொண்டாலும் அவைகளிற் சில தற்கால முறைப்படி மாறியிருக்கலாமே. அவைகளிற் சிலவற்றை பொற்கடகத்தில் 889-897 பக்கம் வரையில் பார்த்திருக்கிறோம்.

மற்றும் தமிழ் நாட்டில் வழங்கிவரும் கலித்துறை, வெண்பா, விருத்தங்களின் இராகங்கள் யாவும், பூர்வ தமிழ்ப் பெயர்கள் மாறி அன்னிய பாஷையின் பெயர்களால் அழைக்கப்படுகின்றன. இப்படிச் சந்தேகமான நிலைக்கு வந்த காலத்தில் 'தமிழர்களுக்குள்ளது சங்கீதம்' என்று

சொல்லாமல் வேறு என்ன சொல்லுவார்கள். உள்ளக் கருத்தை உள்ளபடி சொல்லவும் பிறர் அறிந்துகொள்ளவும் போதுமான தமிழ் மொழிகள் இருந்தும் அவைகளை விட்டு விட்டு வடமொழியில் சொல்வது மிக அழகென்று நினைத்துப் பல வட சொற்களைச் சேர்த்து இரண்டொரு தமிழ் மொழிகளையும் அவற்றோடு கலந்து இது தமிழ் மொழி என்று சொல்லுகிறவர்கள் நிறைந்த இக்காலத்தில் நான் எதைச் சொல்வது? இயற்றமிழேயன்றி, இசைத்தமிழும் நாடகத்தமிழும் அன்னிய சொற்களின் கலப்பினால் நாளடைவில் தமிழர்களுக்குச் சங்கீதம் ஏது என்று சொல்லும் நிலைக்கு வந்தனவோ? இசை, கூத்து என்ற தமிழின் இரு பகுதிகளும் ஒழிந்துபோகுமே. தமிழ்மக்கள் முத்தமிழையும் ஆதரிக்காத குறையால் இவ்விதம் நேர்ந்ததேயொழிய மற்றவரைக் குறை சொல்வதற்கு இடமில்லை. இப்படி வருந்தக் கூடிய நிலைமையில் நாமிருக்கிறோமென்று தெளிவாக அறிந்தாலும் தற்காலம் வழக்கத்திலிருக்கும் முறையை மாற்றிச் சொல்வது நல்லதென்று நினைக்கவில்லை. மாற்றிச் சொல்வதற்கு மிகுந்த விருப்பம் எனக்கிருந்தாலும் சாஸ்திர விஷயமான சில இரகசியங்களைத் தெளிவான நடையில் யாவரும் அறிந்துகொள்ளும்படி தற்காலம் அனுபவத்திலிருக்கிற முறைப்படிச் சொல்வதே மேல் என்று நினைக்கிறேன்.

72 மேளக்கர்த்தா என்று சொல்லும் அட்டவணை எந்தக் காலத்தில் உண்டானதென்று திட்டமாகச் சொல்லக்கூடாதிருந்தாலும் சுமார் 250 வருஷங்களுக்கு முன்னிருந்த வேங்கடமகியினால் உண்டானதென்று சொல்ல ஏதுவில்லை. மேலும் 1212-1247 வரையுமிருந்த சங்கீதரத்னாகருடைய காலத்தில் இம்முறையிருந்ததாகவும் எண்ண ஏதுவில்லை. வேங்கடமகியின் காலத்திற்கு முன்னும் சங்கீத ரத்னாகருடைய காலத்திற்குப் பின்னுமாகிய இடைப்பட்ட காலத்தில் இது உண்டாகியிருக்கவேண்டும்.

இராமநாதபுர சமஸ்தானத்தில் தற்காலமிருக்கும் மகா-ா-ா-ஸ்ரீ சீனிவாச ஐயங்கார் அவர்களிடத்திலுள்ள பழமையான ஏட்டுப் பிரதிகளைப் பார்த்துக்கொண்டு வருகையில் வியாச கடகம் என்ற பெயருடன் 72 மேளக்கர்த்தாவின் லக்ஷணம் சொல்லும் ஒரு ஏட்டைப் பார்த்தேன். அதில் கனகாங்கி, ரத்னாங்கி, கானமூர்த்தி வனஸ்பதி என்ற கடபயாதி சங்கையுடன் தற்காலம் வழங்கிவரும் 72 மேளக்கர்த்தாக்கள் சுலோக ரூபமாகக் காணப்பட்டன. இப்புத்தகம் எழுதியவர் வேத வியாசர் அல்ல என்றும் அவருக்குப் பின் வந்த பல வியாசர்களில் ஒரு வியாசராயிருக்கவேண்டுமென்றும் தோன்றுகிறது. வேதம் வகுத்த வியாசரால் எழுதப்பட்டிருக்குமானால் சங்கீத ரத்னாகரும் அவர்க்கு முற்பட்ட பரதரும் அம்முறையையே தம் புத்தகத்தில் எடுத்தாண்டிருப்பார்கள்.

பூர்வ தென் தமிழ் நாடு கடல்கொண்டபின் பூர்வ தமிழ் மக்களில் சங்கீதத்திற்குரிய பரம்பரையாரின் பழக்கத்திலிருந்த உருப்படிகளைப் பாடக்கேட்ட மற்றவர்கள் இசைத் தமிழுக்கு எல்லைபோட ஆரம்பித்தார்கள். பலர் பலவாறாக எழுதிவருகையில் 72 மேளக்கர்த்தாவில் இசைத் தமிழ் யாவும் அடக்கிவிடுமென்று பன்னிருபாலையின் சாரப்படி 72 தாய் இராகம் உண்டாக்கி அவைகளில் எண்ணிறந்த இராகங்களைக் குறித்தார்கள். இதன் பின் இதிலும் நுட்பமாக சுரங்கள் கலந்து வருகின்றனவென்று அனுபவத்தால் அறிந்து 24 சுருதிகளில் மேளக்கர்த்தா உண்டாக்கி விட்டால் தமிழ் இராகங்கள் அனைத்தையும் அதில் அடக்கிவிடலாமென்று நினைத்து 4624 தாய் இராகங்களடக்கிய பிர்ம மேளம் என்ற நூலை கனகையா கவி சாதுர்கம் என்பவர் தெலுங்கில் வியாக்கியானத்துடன் எழுதியிருக்கிறார்.

இதில் 24 சுருதிகளில் வரும் சுரங்களின் சேர்க்கையால் உண்டாகும் 1156 பேதங்கள் சுத்த மத்திமம் முதல் பஞ்சமம் வரையுமுள்ள மத்திமத்தின் நாலு பேதங்கள் சம்பந்தப்படும்பொழுது 4624 மேளகர்த்தாவாகச் சொல்லப்படுகின்றன. 12 அரைச் சுரங்களில் வரும் 72 மேளகர்த்தாக்கள் ருத்ரமேளமென்றும் ஒற்றைப்பட்ட பத்து சுருதிகளும் சட்சமம் பஞ்சமம் சேர்ந்த 200 மேளகர்த்தாக்களும் விஷ்ணு மேளமென்றும் 24 சுருதிகளாகிய 4624 மேளமும் பிர்ம மேளமென்றும் சொல்லப்படுகின்றன. பிர்ம மேளத்தில் விஷ்ணு மேளமும் ருத்ர மேளமும் அடங்கியிருக்கின்றன.

இவைகளில் முதல் சுத்தமத்திம மேளத்தின் இராகங்களுக்குப் பெயரும் சுரம் கிரகநியாச அம்சங்களும் சூத்திர ரூபமாய்ச் சொல்லும் மேளாதிகார லட்சணம் என்ற புத்தகம் தஞ்சை அரண்மனை சரஸ்வதிமால் என்ற புத்தகசாலையில் இன்றுமிருக்கிறது. இதில் கனகாங்கி ரத்நாங்கி என்ற 72 மேளகர்த்தாவும் அதன் அதன் சுரமுறையில் கடபயாதி என் முறைப்படி வருகின்றன. ஆனால் மற்றப் பெயர்கள் அம்முறையில் அமையவில்லை. இதனால் கனகாங்கி ரத்நாங்கி முதலிய 72 மேளகர்த்தாக்களையும் ஒருவர் செய்த பின்பே 24 சுருதி முறையில் சொல்லப்படும் பிர்ம மேளம் செய்யப்பட்டிருக்கவேண்டுமென்று தெளிவாகக் காண்கிறோம்.

இது நிற்க பூர்வ தமிழ் மக்களின் கானம் 72 மேளகர்த்தாவில் அடங்கவில்லை என்று நினைத்து எழுதிய பிர்ம மேளத்திலும் அடங்காதது கண்டு பிர்மமேளத்தின் முறையை அனுசரிக்காமல் விட்டு விட்டார் போலும். தமிழ் மக்கள் பயின்ற திரிகோணப்பாலை சதுரப் பாலைகளில் வழங்கி வரும் 48, 96 ஆன நுட்ப சுருதிகள் 24 சுருதிகளுக்குள் எப்படி அடங்கும்? ஆகையால் பிர்ம மேளம் வழங்காதொழிந்தது. ஆயப்பாலை முறையில் வழங்கி வரும் பன்னிரு சுரங்கள் இராக உற்பத்திக்குக் காரணமாயிருக்கிறதென்று நாம் அறிகிறோம். இப் பன்னிரு சுரங்களே கிரக மாற்றும் பொழுதும் கிராம மாற்றும்பொழுதும் சாதிகள் மாற்றும் பொழுதும் பல பேதங்களைப்பெறும். ஆனால் வட்டப்பாலை முறையில் வரும் சுருதிகள் இருபத்து நான்கிலும் மேளகர்த்தா உண்டாக்கும் விதம் தமிழ் நூலில் சொல்லவில்லை.

ஆதலால் இராகங்களுண்டாவதற்கு ஒரு ஸ்தாயியிலுள்ள 12 சுரங்களையே ஆதாரமாக எடுத்துக்கொள்வோம். இப்பன்னிரண்டு சுரங்களின் கலப்பினாலுண்டாகும் 4 விக்ருதி சுரங்களையும் சேர்த்து 72 மேளகர்த்தா செய்திருக்கும் அட்டவணையைப் பிரதானமாக எடுத்துக்கொண்டால் அவைகளில் சம்பூரணம் சாடவம் ஔடவம் என்ற பேதங்களும் 24 அலகில் இரண்டு அலகு குறைத்துக் கமகமாய்ப் பாடப்படும் வட்டப்பாலை இராகங்களும் $\frac{1}{2}$ அலகு $\frac{1}{4}$ அலகு குறைத்துப் பாடும் திரிகோணப்பாலை சதுரப்பாலை இராகங்களும் இன்னின்னவை யென்று தெளிவாகக் குறித்துக்கொள்ளலாம். பொற்கடகம் 872-880 பக்கம் வரையில் காட்டியிருக்கும் நாலு அட்டவணைகளில் இவற்றிற்கு திஷ்டாந்தம் காண்க. இதைத் தவிர தற்கால வழக்கத்தின்படியும் இசைத்தமிழ் முறைப்படியும் பொருந்தும் வேறு மார்க்கம் இருக்குமென்று எனக்குத் தோன்றவில்லை.

ஆயப்பாலை முறைப்படி 72 மேளகர்த்தாவில் இன்ன கர்த்தாவைச் சேர்ந்த இராகமென்றும் இச் சுரங்களோடு சேர்ந்து வரும் நுட்ப சுரங்களுக்குத் தகுந்த விதம் இன்ன பாலையைச் சேர்ந்த இராகமென்றும் தெளிவாக இனம் பிரித்துச் சொல்லலாம். அப்படியானால் பாடப்படும் எந்த இராகமும் எவ்வித மயக்கமுமின்றிச் சொல்லக் கூடியதாயிருக்கும். நுட்ப சுருதிகள் வழங்குமிடம் இன்னதென்று தெரியாமல் பன்னிரண்டு சுரத்திலேயே சந்தேகப்பட்டுத் தற்காலத்தில் வாதாடிக்கொண்டிருக்கிறோம். அநுபவத்திலிருக்கும் கீர்த்தனைகள்

பன்னிரண்டு சுரத்திலேயே பாடப்பட்டு வருகின்றனவென்றும் அவைகளில் வாதி சம்வாதியாக வரும் இரண்டு இரண்டு சுரங்கள் நுட்ப சுருதிகள் சேர்ந்து வருகின்றனவென்றும் பொற்கட்கம் 872-880 பக்கம் வரையில் கானு அட்டவணையாகத் திருஷ்டாந்தம் கொடுத்திருக்கிறோம். இன்னும் பல திஷ்டாந்தம் கொடுக்கலாம்.

பூர்வ தமிழ் மக்கள் பெற்றிருந்த சுர ஞானமும் சுரம் சுருதிகளில் அவர்கள் செய்திருந்த கானவகை பாகுபாடுகளும் போனபின் சந்தேகம் உண்டாவது இயற்கைதானே. கானு விதமான பாலைகள் போனபின் நுட்ப சுருதிகள் சேர்ந்த இராகங்களை இனம் பிரித்துச் சொல்வதும் கூடியதல்லவே. இப்படிக் கூடாதிருக்கும் காலத்தில் பலர் பலவிதமாய்ச் சுரங்களையும் சுருதிகளையும் நிச்சயிக்க ஆரம்பித்தார்கள். உற்று விசாரிக்கும் விவேகிகள் கஞ்சுண்ட மீனைப்போல் இன்னது செய்வதென்றறியாமல் மயங்கினார்கள். கொஞ்சம் மயக்கம் தெளிகிற காலத்தில் தாங்கள் சொன்ன முறைகளே சரியானவையென்று கணக்குக் காட்டி வாதாடத் தொடங்கினார்கள். ஆனால் நாங்கள் வாதாடும் கணக்கின்படி பாடிப்பார்க்க நினைக்கவில்லை. பூர்வமாயுள்ளதைப் பாடிப்பார்க்கும்போது சிலர் தங்கள் முறை சரியானதல்லவென்று தாங்களே பின்வாங்கிக்கொண்டார்கள். பின்வாங்கிய பிறகும் பழைய மயக்கத்தினால் பொய்ப் பஞ்சமத்தையாவது பிடித்துக்கொண்டு சாதித்துவிடலாமென்று சட்சம பஞ்சம பொருத்தம் சில இடங்களில் 12 சுருதியாகவும் சில இடங்களில் 13 சுருதியாகவும் வருகிறதென்று கணக்குக் காட்டுகிறார்கள். இது கையில் காசில்லாத ஒருவன் கணக்கினால் காரியம் முடித்துக்கொள்ள நினைத்ததுபோல் ஆயிற்று. வேறு சிலர் பன்னிரண்டு சுரங்களில் ரி க த நி யில் வழங்கிவரும் விக்ருதி சுரம் நாலையும் சேர்த்து ஒரு ஸ்தாயியில் 16 சுருதிகள் வழங்குகின்றனவென்றும் அதோடு அவற்றிற்கு அநுசுரமாக அவைகள் ஒருஸ்தாயியில் 32 ஆகின்றன என்றும் மூன்று ஸ்தாயியிலும் 96 ஆகின்றனவென்றும் சொல்லிவைத்தார்கள்.

அதோடு ஒரு தந்தியில் ஐந்தாவது நூலில் சுத்தரிஷபமும் எட்டரையாவது நூலில் சதுர் சுருதி ரிஷபமும் பதினோராவது நூலில் சட்சுருதி ரிஷபமும் பன்னிரண்டாவது நூலில் சுத்த காந்தாரமும் பதினேழாவது நூலில் சாதாரண காந்தாரமும் இருபதாவது நூலில் அந்தர காந்தாரமும் இருபத்தாறுவது நூலில் சுத்தமத்திமமும் முப்பதாவது நூலில் பிரதிமத்திமமும் முப்பத்து நான்காவது நூலில் பஞ்சமமும் பேசுகிறதென்று அளவுடன் எல்லைகட்டி வைத்தார்கள். சுத்தமத்திமம் இருபத்தாறுவது நூலில் பேசுகின்றதென்று சொல்வதனால் அத்தந்தியின் நீளம் 104 நூலாய் அல்லது 13 அங்குலமாயிருக்கவேண்டும். அப்படியானால் அதன் மூன்றிலொரு பாகமாகிய முப்பத்துநான்கு நூலில் வரும் பஞ்சமத்தின் அளவின்படி $34 \times 3 = 102$ நூல் கினமுன்னதாகக் காணப்படுகிறது. இவ்வளவு வித்தியாசமான கணக்கு சட்சம பஞ்சம முறையாய்ப் போகும் பன்னிரண்டு சுரங்களுக்குக் கொஞ்சமாவது ஒத்துவருமா? இது ஒன்றே இக்கணக்கைப் பிசகென்று நாம் யாவரும் அறிந்துகொள்ளப் போதுமானது.

மேலும் பதினோராவது நூலில் சட்சுருதி ரிஷபமும் பன்னிரண்டாவது நூலில் சுத்த காந்தாரமும் வருகிறதென்று சொல்வார்கள். எட்டரையாவது நூலில் வரும் சதுர்சுருதியாக வழங்கும் சுத்த காந்தாரத்திற்கும் பன்னிரண்டாவது நூலில் கிடைக்கும் சுத்தகாந்தாரத்திற்கும் என்ன சம்பந்தம்? எட்டரையாவது நூலில் வருகிறதென்று சொல்லும் சுத்த காந்தாரமே தற்காலம் வழங்கிவரும் மேளகர்த்தாக்களில் வருகிறதாகக் காண்கிறோம். ஆனால் சட்சுருதி ரிஷபத்திற்கு மேல் ஒரு சுத்த காந்தாரமிருக்கிறதென்று எந்த நூலில் ஆதாரமிருக்கிறது? சுர

சம்பந்தங்களின் முறையும் பாடிக்கொண்டு வருகிற பாட்டின் அனுபோகமும் இன்னதென்று தெரியாத மகா வித்வான்களின் ஆடம்பரமென்று நாம் காண்போம். இதைப்பற்றி அநேக குறிப்புகள் சொல்லக்கூடியதாயிருந்தாலும் அவசியமில்லாமையால் விடப்பட்டன.

பூர்வ தமிழ் மக்கள் முறைப்படி ஒரு ஸ்தாயியில் சட்சம பஞ்சம முறையாய்க் கிடைக்கும் பன்னிரண்டு சுரங்களே நேற்று, வழங்கியவை ; இன்று வழங்குகிறவை; நாளைக்கும் வழங்கி வரக்கூடியவை. மலைகள் நிலைபெயர்ந்தாலும் கடல் கரைபுரண்டாலும் ஏழு கண்டங்களும் அழிந்து இந்துமகாசமுத்திரமானாலும் என்றும் நிலைத்திருப்பது இந்தப் பன்னிரண்டு சுரங்களே. இப்பன்னிரண்டைப் பதினாறென்று சொல்லுகிறவர்களை இப்போது பாடிக்கொண்டிருக்கும் பாட்டையும் இப்பாட்டு உண்டாகும் பன்னிரண்டு சுரங்களையும் அறியாதவர்களென்றே சொல்லவேண்டும். இப்பன்னிரண்டு சுரங்களிலிருந்து உண்டாகும் நாலு விக்ருதி பேதங்களை அடியில் வரும் அட்டவணையில் காண்க.

## ஆயப்பாலையின் பன்னிரு சுரங்கள் பதினாறு சுரங்களாய் வழங்கி வருவதைக் காட்டும் அட்டவணை.

இம்முறையே 72 மேளம் உண்டானதற்குக் காரணம்

| தற்காலத்தில் வழங்கும் சுரங்களும் விக்ருதி சுரங்களின் பெயர்களும். | | | | பூர்வப்பெயர்கள். |
|---|---|---|---|---|
| சட்சமம் ... ... ... | ச | ச | சட்சமம் ... ... ... | |
| சுத்த ரிஷபம் ... ... | ரி$^{2}$ | | | 2 அலகு ரி |
| சதுர் சுருதி ரிஷபம் ... | ரி$^{4}$ | க$^{2}$ | சுத்த காந்தாரம் ... ... | 4 அலகு ரி or 2 அலகு க |
| சட் சுருதி ரிஷபம்... ... | ரி$^{6}$ | க$^{4}$ | சாதாரண காந்தாரம் ... ... | 6 அலகு ரி or 4 அலகு க |
| | | க$^{6}$ | அந்தர காந்தாரம் ... ... | 6 அலகு க |
| சுத்தமத்திமம் ... ... | ம$^{2}$ | | | 2 அலகு ம |
| பிரதிமத்திமம் ... ... | ம$^{4}$ | | | 4 அலகு ம |
| | ப | ப | பஞ்சமம் ... .. ... | ப அல்லது இளி |
| சுத்த தைவதம் ... ... | த$^{2}$ | | | 2 அலகு த |
| சதுர் சுருதி தைவதம் ... | த$^{4}$ | நி$^{2}$ | சுத்த நிஷாதம் ... ... | 4 அலகு த or 2 அலகு நி |
| சட் சுருதி தைவதம் ... | த$^{6}$ | நி$^{4}$ | கைசிக நிஷாதம் .. ... | 6 அலகு த or 4 அலகு நி |
| | | நி$^{6}$ | காகலி நிஷாதம் ... ... | 6 அலகு நி |
| | ச | ச | | ச or குரல் |

நாம் வீணையில் ரிஷபத்திற்கு இரண்டு மெட்டுகளும் காந்தாரத்திற்கு இரண்டு மெட்டுகளும் ஆக நாலுமெட்டுள்ள இடங்களில் ரிஷப காந்தாரங்கள் பேசுகின்றனஎன்றறிவோம். ரிஷபத்திற்குரிய இரண்டு ஸ்தானங்களோடு கலந்து நாலு பேதம் உண்டாக ஏதுவாயிருந்தது. அப்படியே தைவத நிஷாதங்களின் நாலு பேதங்கள் ரிஷப காந்தாரங்களின் நாலு பேதங்களோடு தனித்தனி கலந்து பதினாறு பேதங்களும் சுத்தமத்திமம் பிரதிமத்திம பேதத்தினால் இவைகள் முப்பத்திரண்டு ஆன விதமும் முந்தின 96 ஆம் பக்கத்திலுள்ள அட்டவணையில் பார்த்திருக்கிறோம். அதுபோலவே 72 மேளக்கர்த்தாவின் முறையுமிருக்கிறதேயொழிய வேறல்ல. ஆனால் நாலு இடங்கள் பெற்ற ரிஷப காந்தாரத்தில் இரண்டு, மூன்று, நாலு என்ற மூன்று இடங்களும் காந்தாரத்தின் இடமாக வைத்துக்கொண்டும் அதுபோல முதல் மூன்று இடங்களும் ரிஷபத்தின் இடமாக வைத்துக்கொண்டும் இராகம் சொல்லியிருக்கிறார்கள். அதாவது இரண்டு அலகுள்ள ரிஷபத்தோடு இரண்டு அலகுள்ள காந்தாரமும் நாலு அலகுள்ள காந்தாரமும் ஆறு அலகுள்ள காந்தாரமும் வெவ்வேறு இராகங்களாக மூன்று இராகங்கள் உண்டாகலாமே. அதுபோலவே நாலு அலகுள்ள ரிஷபத்தோடு நாலு அலகுள்ள காந்தாரமும் ஆறு அலகுள்ள காந்தாரமும் சேர்ந்து வெவ்வேறான இரண்டு இராகங்கள் உண்டாகலாம். மேலும் முன் முறைப்படி ஆறு அலகுள்ள ரிஷபமும் ஆறு அலகுள்ள காந்தாரமும் சேர்ந்து ஒரு இராகம் உண்டாகும். ஆக சுத்த ரிஷபத்தோடு மூன்று இராகங்களும் சதுர் சுருதி ரிஷபத்தோடு இரண்டு இராகங்களும் சட்சுருதியோடு ஒரு இராகமும் ஆக ஆறுவிதமான வெவ்வேறு இராகங்கள் உண்டாகும். அதுபோலவே தைவத நிஷாதங்களும் ஆறு பேதத்தையடைகின்றன.

சுத்த காந்தாரம் வழ்ங்கிவரும் இராகங்களிற் சதுர் சுருதி ரிஷபமே சுத்த காந்தாரமாக வழங்கி வருகிறது. சதுர்சுருதி ரிஷபம் வழங்கி வரும் இராகங்களில் சட்சுருதி ரிஷபத்தையே சாதாரண காந்தாரமென்று வழங்குகிறார்கள். இதில் சதுர் சுருதி ரிஷபத்தில் சுத்த காந்தாரமென்று பெயர் வைத்துக்கொண்டதும் சாதாரண காந்தாரம் வழங்குகிற இடத்தில் சட்சுருதி ரிஷபம் என்று வைத்துக்கொண்டதும் விக்ருதி பேதங்களாம். இது போலவே தைவதத்தின் நாலாவது சுருதி சுத்த நிஷாதமென்றும் கைசிக நிஷாதம் சட்சுருதி தைவதமென்றும் வழங்கி வருவது விக்ருதி பேதமாம். இவ்வழக்கத்தின்படியே 72 மேளக்கர்த்தாவும் படிக்கப்படுகின்றன. வீணையின் பன்னிரண்டு மெட்டுகளில் வழங்கி வரும் இப்பன்னிரண்டு சுரங்களே 72 மேளக்கர்த்தாவிலும் வழங்கி வருகின்றன. இதில் சந்தேகப்பட்டு பதினாறு சுருதிகள் வழங்கி வருகின்றனவென்று கைப்புரட்டும் வாய்ப்புரட்டும் செய்கிறவர்களின் புரளியைக் கண்டு அறிவுள்ளோர் மயங்கமாட்டார்.

ஆயப்பாலையாய் வரும் பன்னிரண்டு சுரங்களில் இரண்டொரு சுரங்களில் கமகமாய்ச் சேர்ந்து வரும் நுட்ப சுரங்கள் இன்னவையென்று அறியாதவர்களே இப்படிச் சந்தேகங்கொள்வார்கள். ஆயப்பாலை முறையில் செம்பாலை, படுமலைப்பாலை, செவ்வழிப்பாலை, அரும்பாலை, கோடிப்பாலை விளரிப்பாலை, என்னும் ஆறு தாய் இராகங்கள் உண்டாவது போலவே இவ்வெழுபத்திரண்டு மேளக்கர்த்தாக்களின் இராகங்களில் கிரகமாற்றும்பொழுது ஏராளமான அநேக இராகங்கள் உண்டாகும். அவ்விவரம் இதன் பின் பார்ப்போம்.

72 மேளக்கர்த்தாக்களின் சுரம் நிற்கும் முறையை பின் வரும் அட்டவணைகளில் தெளிவாக அறிந்துகொள்ளலாம்.

## 72 மேளக்கர்த்தாக்களில் சுத்த மத்திம சக்கரம் 6-உம் அவைகளில் வரும் 36 தாய் இராகங்களும்.

| | இராகங்கள். | | 2 ரி | 4 ரி | 6 ரி | | 2 ம | | | 2 த | 4 த | 6 த | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | ச | | க 2 | க 4 | க 6 | ம | | ப | | நி 2 | நி 4 | நி 6 |
| I | 1 | கனகாங்கி ... | ச | ரி | க | ... | ... | ம | ... | ப | த | நி | ... | ... |
| | 2 | ரத்னாங்கி ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | நி | ... |
| | 3 | கானமூர்த்தி ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | ... | நி |
| | 4 | வனஸ்பதி ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | நி | ... |
| | 5 | மானவதி ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | நி |
| | 6 | தானரூபி ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | நி |
| II | 7 | சேனாவதி ... | ச | ரி | ... | க | ... | ம | ... | ப | த | நி | ... | ... |
| | 8 | ஹனுமத்தோடி ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | நி | ... |
| | 9 | தேனுக ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | ... | நி |
| | 10 | நாடகப்ரிய ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | நி | ... |
| | 11 | கோகிலப்ரிய ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | நி |
| | 12 | ரூபாவதி ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | நி |
| III | 13 | காயகப்ரிய ... | ச | ரி | ... | ... | க | ம | ... | ப | த | நி | ... | ... |
| | 14 | வகுளாபரணம் ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | நி | ... |
| | 15 | மாயாமாளவகௌள | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | ... | நி |
| | 16 | சக்ரவாகம் ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | நி | ... |
| | 17 | சூர்யகாந்தம் ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | நி |
| | 18 | ஹாடகாம்பரி ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | நி |
| IV | 19 | ஜங்காரத்வனி ... | ச | ... | ரி | க | ... | ம | ... | ப | த | நி | ... | ... |
| | 20 | நடபைரவி ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | நி | ... |
| | 21 | கீரவாணி ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | ... | நி |
| | 22 | கரஹரப்ரிய ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | நி | ... |
| | 23 | கௌரீமனோஹரி ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | நி |
| | 24 | வருணப்ரிய ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | நி |
| V | 25 | மாரரஞ்சனி ... | ச | ... | ரி | ... | க | ம | ... | ப | த | நி | ... | ... |
| | 26 | சாருகேசி ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | நி | ... |
| | 27 | சரசாங்கி ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | ... | நி |
| | 28 | ஹரிகாம்போதி ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | நி | ... |
| | 29 | தீரசங்கராபரணம் | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | நி |
| | 30 | நாகானந்தி ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | நி |

### 72 மேளக்கர்த்தாக்களில் சுத்த மத்திம சக்கரம் 6-உம் அவைகளில் வரும் 36 தாய் இராகங்களும். ( தொடர்ச்சி )

| | | இராகங்கள். | | ச | ரி 2 | ரி 4 / க 2 | ரி 6 / க 4 | க 6 | ம 2 / ம | | ப | த 2 | த 4 / நி 2 | த 6 / நி 4 | 23 / நி 6 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| VI | 31 | யாகப்ரிய | ... | ச | ... | ... | ரி | க | ம | ... | ப | த | நி | ... | ... |
| | 32 | ராகவர்த்தனி | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | நி | ... |
| | 33 | காங்கேயபூஷணி | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | ... | நி |
| | 34 | வாகதீஸ்பரி | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | நி | ... |
| | 35 | சூலினி | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | நி |
| | 36 | சலநாட | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | நி |

### 72 மேளக்கர்த்தாக்களில் பிரதி மத்திம சக்கரம் 6-உம் அவைகளில் வரும் 36 தாய் இராகங்களும்.

| | | இராகங்கள். | | ச | ரி 2 | ரி 4 / க 2 | ரி 6 / க 4 | க 6 | | ம 1 / ம | ப | த 2 | த 4 / நி 2 | த 6 / நி 4 | நி 6 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| I | 37 | சாலக | ... | ச | ரி | க | ... | ... | ... | ம | ப | த | நி | ... | ... |
| | 38 | ஜலார்ணவம் | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | நி | ... |
| | 39 | ஜாலவராளி | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | ... | நி |
| | 40 | நவநீதம் | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | நி | ... |
| | 41 | பாவனி | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | நி |
| | 42 | ரகுப்ரிய | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | நி |
| II | 43 | கவாம்போதி | ... | ச | ரி | ... | க | ... | ... | ம | ப | த | நி | ... | ... |
| | 44 | பவப்ரிய | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | நி | ... |
| | 45 | சுபபந்துவராளி | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | ... | நி |
| | 46 | ஷட்விதமார்கிணி | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | நி | ... |
| | 47 | சுவர்ணாங்கி | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | நி |
| | 48 | திவ்யமணி | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | நி |
| III | 49 | தவளாம்பரி | ... | ச | ரி | ... | ... | க | ... | ம | ப | த | நி | ... | ... |
| | 50 | நாமநாராயணி | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | நி | ... |
| | 51 | காமவர்த்தனி | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | ... | நி |
| | 52 | ராமப்ரிய | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | நி | ... |
| | 53 | கமனப்ரிய | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | நி |
| | 54 | விஸ்வம்பரி | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | நி |

## 72 மேளக்கர்த்தாக்களில் பிரதி மத்திம சக்கரம் 6-உம் அவைகளில் வரும் 36 தாய் இராகங்களும். (தொடர்ச்சி)

| | | இராகங்கள். | ச | ரி 2 | ரி 4<br>க 2 | ரி 6<br>க 4 | க 6 | | ம 4<br>ம | ப | த 2 | த 4<br>நி 2 | த 6<br>நி 4 | நி 6 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| IV | 55 | ஸ்யாமளாங்கி ... | ச | ... | ரி | க | ... | ... | ம | ப | த | நி | ... | ... |
| | 56 | ஷண்முகப்ரிய ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | நி | ... |
| | 57 | சிம்மேந்திரமத்திமம் | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | ... | நி |
| | 58 | ஹேமவதி ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | நி | ... |
| | 59 | தர்மவதி ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | நி |
| | 60 | நீதிமதி ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | நி |
| V | 61 | காந்தாமணி ... | ச | ... | ரி | ... | க | ... | ம | ப | த | நி | ... | ... |
| | 62 | ரிஷபப்ரிய ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | நி | ... |
| | 63 | லதாங்கி ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | ... | நி |
| | 64 | வாசஸ்பதி ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | நி | ... |
| | 65 | மேசகல்யாணி ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | நி |
| | 66 | சித்ராம்பரி ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | நி |
| VI | 67 | சுசரித்ர ... | ச | ... | ... | ரி | க | ... | ம | ப | த | நி | ... | ... |
| | 68 | ஜோதிஸ்வரூபிணி ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | நி | ... |
| | 69 | தாதுவர்த்தனி ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | ... | நி |
| | 70 | நாசிகாபூஷணி ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | நி | ... |
| | 71 | கோசல ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | நி |
| | 72 | ரசிகப்ரிய ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | நி |



## 12. 72 மேளக்கர்த்தாக்களில் சுத்த மத்திம இராகங்கள் 36-உம் பிரதி மத்திம இராகங்கள் 36-உம் பக்கம் பக்கமாய்க் காட்டும் அட்டவணை

| | நெ | கர்த்தாக்களின் பெயர் | ச | ரி | | | க | | | ம | | ப | த | | | நி | | | நெ | கர்த்தாக்களின் பெயர். |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | 2 | 4 | 6 | 2 | 4 | 6 | 2 | 4 | | 2 | 4 | 6 | 2 | 4 | 6 | | |
| I | 1 | கனகாங்கி ... ... ... | ச | ரி | | | க | | | ம | ம | ப | த | | | நி | | | 37 | சாலக. |
| | 2 | ரத்னாங்கி ... ... ... | ச | ரி | | | க | | | ம | ம | ப | த | | | | நி | | 38 | ஜலார்ணவம். |
| | 3 | கானமூர்த்தி ... ... | ச | ரி | | | க | | | ம | ம | ப | த | | | | | நி | 39 | ஜாலவராளி. |
| | 4 | வனஸ்பதி ... ... ... | ச | ரி | | | க | | | ம | ம | ப | | த | | | நி | | 40 | நவநீதம். |
| | 5 | மானவதி ... ... ... | ச | ரி | | | க | | | ம | ம | ப | | த | | | | நி | 41 | பாவனி. |
| | 6 | தானரூபி ... ... ... | ச | ரி | | | க | | | ம | ம | ப | | | த | | | நி | 42 | ரகுப்ரிய. |
| II | 7 | சேனாவதி ... ... ... | ச | ரி | | | | க | | ம | ம | ப | த | | | நி | | | 43 | கவாம்போதி. |
| | 8 | ஹனுமத்தோடி ... ... | ச | ரி | | | | க | | ம | ம | ப | த | | | | நி | | 44 | பவப்ரிய. |
| | 9 | தேனுக ... ... ... | ச | ரி | | | | க | | ம | ம | ப | த | | | | | நி | 45 | சுபபந்துவராளி. |
| | 10 | நாடகப்ரிய ... ... ... | ச | ரி | | | | க | | ம | ம | ப | | த | | | நி | | 46 | ஷட்விதமார்க்கிணி. |
| | 11 | கோகிலப்ரிய ... ... | ச | ரி | | | | க | | ம | ம | ப | | த | | | | நி | 47 | சுவர்ணாங்கி. |
| | 12 | ரூபாவதி ... ... ... | ச | ரி | | | | க | | ம | ம | ப | | | த | | | நி | 48 | திவ்யமணி. |
| III | 13 | காயகப்ரிய ... ... ... | ச | ரி | | | | | க | ம | ம | ப | த | | | நி | | | 49 | தவளாம்பரி. |
| | 14 | வகுளாபரணம் ... ... | ச | ரி | | | | | க | ம | ம | ப | த | | | | நி | | 50 | நாமநாராயணி. |
| | 15 | மாயாமாளவகௌள ... | ச | ரி | | | | | க | ம | ம | ப | த | | | | | நி | 51 | காமவர்த்தனி. |
| | 16 | சக்ரவாகம் ... ... ... | ச | ரி | | | | | க | ம | ம | ப | | த் | | | நி | | 52 | ராமப்ரிய. |
| | 17 | சூர்யகாந்தம் ... ... | ச | ரி | | | | | க | ம | ம | ப | | த | | | | நி | 53 | கமனப்ரிய. |
| | 18 | ஹாடகாம்பரி ... ... | ச | ரி | | | | | க | ம | ம | ப | | | த | | | நி | 54 | விஸ்வம்பரி. |

| | எண். | கர்த்தாக்களின் பெயர். | ச | ரி | | | க | | | ம | | ப | த | | | நி | | | எண். | கர்த்தாக்களின் பெயர். |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | 2 | 4 | 6 | 2 | 4 | 6 | 2 | 4 | | 2 | 4 | 6 | 2 | 4 | 6 | | |
| IV | 19 | ஜங்காரத்வனி | ச | | ரி | | | க | | ம | ம | ப | த | | | நி | | | 55 | ஸ்யாமளாங்கி. |
| | 20 | நடபைரவி | ச | | ரி | | | க | | ம | ம | ப | த | | | | நி | | 56 | ஷண்முகப்ரிய. |
| | 21 | கீரவாணி | ச | | ரி | | | க | | ம | ம | ப | த | | | | | நி | 57 | சிம்மேந்திர மத்திமம். |
| | 22 | கரஹரப்ரிய | ச | | ரி | | | க | | ம | ம | ப | | த | | | நி | | 58 | ஹேமவதி. |
| | 23 | கௌரிமனோஹரி | ச | | ரி | | | க | | ம | ம | ப | | த | | | | நி | 59 | தர்மவதி. |
| | 24 | வருணப்ரிய | ச | | ரி | | | க | | ம | ம | ப | | | த | | | நி | 60 | நீதிமதி. |
| V | 25 | மாரரஞ்சனி | ச | | ரி | | | | க | ம | ம | ப | த | | | நி | | | 61 | காந்தாமணி. |
| | 26 | சாருகேசி | ச | | ரி | | | | க | ம | ம | ப | த | | | | நி | | 62 | ரிஷபப்ரிய. |
| | 27 | சரசாங்கி | ச | | ரி | | | | க | ம | ம | ப | த | | | | | நி | 63 | லதாங்கி. |
| | 28 | ஹரிகாம்போதி | ச | | ரி | | | | க | ம | ம | ப | | த | | | நி | | 64 | வாசஸ்பதி. |
| | 29 | தீரசங்கராபரணம் | ச | | ரி | | | | க | ம | ம | ப | | த | | | | நி | 65 | மேசகல்யாணி. |
| | 30 | நாகாநந்தி | ச | | ரி | | | | க | ம | ம | ப | | | த | | | நி | 66 | சித்ராம்பரி. |
| VI | 31 | யாகப்ரிய | ச | | | ரி | | | க | ம | ம | ப | த | | | நி | | | 67 | சுசரித்ர. |
| | 32 | ராகவர்த்தனி | ச | | | ரி | | | க | ம | ம | ப | த | | | | நி | | 68 | ஜோதிஸ்வரூபிணி. |
| | 33 | காங்கேயபூஷணி | ச | | | ரி | | | க | ம | ம | ப | த | | | | | நி | 69 | தாதுவர்த்தனி. |
| | 34 | வாகதீஸ்பரி | ச | | | ரி | | | க | ம | ம | ப | | த | | | நி | | 70 | நாசிகாபூஷணி. |
| | 35 | சூலினி | ச | | | ரி | | | க | ம | ம | ப | | த | | | | நி | 71 | கோசல. |
| | 36 | சலநாட | ச | | | ரி | | | க | ம | ம | ப | | | த | | | நி | 72 | ரசிகப்ரிய. |

## 13. 72 மேளக்கர்த்தாக்களின் பெயர்களும் அவைகளைமாற்றி வேங்கடமகி வழங்கி வந்த பெயர்களும்.

| எண். | முன் வழங்கிவந்த பெயர்கள். | வேங்கடமகி வழங்கிய பெயர்கள். | எண். | முன் வழங்கிவந்த பெயர்கள். | வேங்கடமகி வழங்கிய பெயர்கள். |
|---|---|---|---|---|---|
| 1 | கனகாங்கி | கனகாம்பரி | 37 | சாலகம் | சௌகந்தினி |
| 2 | ரத்னாங்கி | பேனத்துதி | 38 | ஜலார்நவம் | ஜகன்மோகனம் |
| 3 | கானமூர்த்தி | கான சாமவராளி | 39 | ஜாலவராளி | தாலி வராளி |
| 4 | வனஸ்பதி | பானுமதி | 40 | நவநீதம் | நபோமணி |
| 5 | மானவதி | மனோரஞ்சனி | 41 | பாவனி | கும்பினி |
| 6 | தானரூபி | தனுக்கீர்த்தி | 42 | ரகுப்ரிய | ரவிக்கிரியா |
| 7 | ஸேனாவதி | சேனாக்கிரணி | 43 | கவாம்போதி | கீர்வாணி |
| 8 | அனுமத்தோடி | ஜனத்தோடி | 44 | பவப்ரிய | பவானி |
| 9 | தேனுக | தொனி பின்ன சட்சம் | 45 | சுபபந்துவராளி | சிவபந்துவராளி |
| 10 | நாடகப்ரிய | நடாபரணம் | 46 | ஷட்விதமார்க்கிணி | ஸ்தவ ராஜமு |
| 11 | கோகிலப்ரிய | கோகிலாரவம் | 47 | சுவர்ணாங்கி | சௌவீரம் |
| 12 | ரூபாவதி | ரூபாவதி | 48 | திவ்யமணி | ஜீவந்தினி |
| 13 | காயகப்ரிய | கேயகெச்சக்கி | 49 | தவளாம்பரி | தபளாங்கம் |
| 14 | வகுளாபரணம் | வாடி வசந்த பைரவி | 50 | நாம நாராயணி | நாமதேசி |
| 15 | மாயாமாளவகௌள | மாயா மாளவ கௌளா | 51 | காமவர்த்தனி | காசிராமக்கிரியா |
| 16 | சக்ரவாகம் | தோய வேக வாகினி | 52 | ராமப்ரிய | ராம மனோகரி |
| 17 | சூரியகாந்தம் | சாயாவதி | 53 | கமனப்ரிய | கமகக்கிரியா |
| 18 | ஹாடகாம்பரி | ஜய சுத்த மாளவி | 54 | விஸ்வம்பரி | வம்சவதி |
| 19 | ஜுங்காரத்வனி | ஜுங்கார பிரம்மரி | 55 | ஸ்யாமளாங்கி | சாமளா |
| 20 | நடபைரவி | நாரி ரீதிகௌளா | 56 | ஷண்முகப்ரிய | சாமரா |
| 21 | கீரவாணி | கிரணவளி | 57 | ஸிம்மேந்த்ரமத்திமம் | சுமத்துதி |
| 22 | கரஹரப்ரிய | ஸ்ரீராகம் | 58 | ஹேமவதி | தேசிசிம்காரவம் |
| 23 | கௌரிமனோஹரி | கௌரி வேளாவளி | 59 | தர்மவதி | தாமவதி |
| 24 | வருணப்ரிய | வீரவசந்தம் | 60 | நீதிமதி | நிஷதம் |
| 25 | மாரரஞ்சனி | சராவளி | 61 | காந்தாமணி | குந்தளம் |
| 26 | சாருகேசி | தரங்கிணி | 62 | ரிஷபப்ரிய | ரெதிப்பிரிய |
| 27 | சரசாங்கி | சௌரசேனா | 63 | லதாங்கி | கீதப்பிரியா |
| 28 | ஹரிகாம்போதி | ஹரிகேதாரகௌளா | 64 | வாசஸ்பதி | பௌசாவதி |
| 29 | தீரசங்கராபரணம் | தீரசங்கராபரணம் | 65 | மேசகல்யாணி | சாந்தகல்யாணி |
| 30 | நாகாநந்தி | நாகாபரணம் | 66 | சித்ராம்பரி | சதுரங்கணி |
| 31 | யாகப்ரிய | கலாவதி | 67 | சுசரித்ர | சந்தான மஞ்சரி |
| 32 | ராகவர்த்தனி | ராக சூடாமணி | 68 | ஜ்யோதிஸ்வரூபிணி | ஜோதிராகம் |
| 33 | காங்கேயபூஷணி | கங்காதரங்கிணி | 69 | தாதுவர்த்தனி | தௌத பஞ்சமம் |
| 34 | வாகதீஸ்வரி | போக்தசயா நாடா | 70 | நாசிகாபூஷணி | நாசாமணி |
| 35 | சூலினி | சைலத்தேசாட்சி | 71 | கோசலம் | குசுமிகரம் |
| 36 | சலநாட | சல நாட்டா | 72 | ரசிகப்ரியா | ரசமஞ்சரி |

மேற்காட்டிய அட்டவணையைக் கவனிக்கும்பொழுது 1 முதல் 72 இலக்கங்களை அறியும்படியாக கடபயாதி முறைப்படி எழுத்துக்களுக்கு இலக்கம் குறித்து அதைக்கொண்டு இத்தனையாவது மேளமென்று தெரிந்துகொள்ளும்படி வார்த்தை அமைத்து இராகத்தின் பெயரும் இலக்கமும் சேர்ந்து வருமாறு சொல்லிவைத்த வடமொழியாளர் வழக்கப்படி 72 பெயர்வைத்து தாய் இராகங்களை வழங்கியிருக்கிறதாக அறிவோம். 1 முதல் 72 வரையுமுள்ள தாய் இராகங்கள் இத்தனையாவது இராகம் என்று அறிய இலக்கங்களுடன் அமைந்திருப்பது ஒருவாறு பன்னிரண்டு சுரங்களில் வரும் பிரஸ்தாரங்களில் இத்தனையாவது பிரஸ்தாரமென்று அறியக் கூடியதாயிருந்தாலும், பூர்வம் வழங்கிவந்த தமிழ் இராகங்களின் பெயர்கள் முற்றிலும் மாற்றப்பட்டு இனந்தெரியாமல் போயிற்றென்று நாம் அறியவேண்டும்.

இருந்தாலும் பூர்வதமிழ் இராகங்களின் சுரமும் அலகுமுறையும் சொல்லும் நூல்கள் இதுவரை நமக்குக் கிடைக்காததனால் அவைகளைப்பற்றித் திட்டமாய்ச் சொல்லக்கூடவில்லை. பூர்வ தமிழ்மக்கள் வழங்கிவந்த நாலு பாலைகளிலுள்ள இராகங்களின் நுட்பம் யாவும் சொல்ல முடியாமற் போனாலும் அவைகளை இனம் பிரித்துக் காட்டக்கூடிய ஆயப்பாலை முறையின் எல்லாப் பேதங்களும் 72 மேளக்கர்த்தாவின் முறைப்படியே இருக்கின்றனவென்றும் 72 மேளங்களின் பேதங்களும் உண்டாவதற்கு ஆயப்பாலையின் கிரகம் மாற்றும் முறையே காரணமாயிருக்கிறதென்றும் இதன்முன் பார்த்திருக்கிறோம். நூதனமாகப் பெயர் கொடுப்பதும் பழமையான பெயர்களை மாற்றுவதும் நூலின் உண்மை அறியாத புண்ணியவான்கள் செய்கிற வேலையென்று தெளிவாய்த் தெரிகிறது.

ஒரு சாஸ்திரத்தில் எல்லாருக்கும் பொதுவாக விளங்காத இடத்தை விளக்கிச் சொல்வதும் அந்த சாஸ்திரம் வளர்வதற்கு அனுகூலமான உண்மைகளை நூதனமாய்க் கண்டு அனுபோகத்திற்குக் கொண்டுவந்து நிலைத்தவைகளை விளக்கிச் சொல்வதும் நூலாசிரியர்களின் கடமை. இப்படியில்லாமல் கட்டுக்கதைகளைக் கற்பிப்பதும் காரணம் சொல்லுகிறேன் என்று தலையைச்சுற்றி மூக்கைப்பிடிப்பதும் வழங்கிவந்த பெயரை மாற்றிவைப்பதும் யாவரையும் கலங்கவைக்குமே யொழிய தெளியவைக்கமாட்டா. கனகாங்கி, ரத்னாங்கி என்ற 72 மேளக்கர்த்தாக்களின் மாறுதலான பெயர்களை எட்டையாபுரம் சமஸ்தானம் சுப்பராம தீக்ஷதர் செய்த சங்கீத சம்பிரதாய பிரதர்சினி என்ற புத்தகத்தில் காணலாம்.

அதோடு 72 மேளக்கர்த்தா இராகங்களிலிருந்து உண்டாகிய சாடவ, ஔடவ இராகங்களையே கர்த்தா இராகமாகச் சொல்லுகிறார். ஏன் அப்படிச் சொல்லியிருக்கிறார் என்பதற்குத் தகுதியான காரணம் சொல்லவில்லை. 'தாய் இராகமானது எப்போதும் சம்பூரண இராகமாகவே இருக்கவேண்டும்.' என்ற பொது விதிக்கு மாறுபட்டிருக்கிறதாகக் காண்கிறோம். கனகாங்கி ரத்னாங்கி என்ற முந்தின முறையைப்போல் தெளிவாயில்லாமல் மாறுபட்டிருப்பதால் தற்கால அனுபோகத்திற்கு வாராமல் போயிற்றென்று தெளிவாகக் காண்கிறோம்.

இதன்பின் தென்னிந்தியாவின் பழங் குடிகளாகிய தமிழ் மக்கள் பாடிக்கொண்டிருந்த நாலு பாலையில் வரும் இராகங்களையும் இனம் பிரிக்கமுடியாமல் 24 சுருதிகளில் குறித்துவிடலாம் என்று செய்த பிரமமேளத்தின் விவரத்தையும் அதைச் சேர்ந்த விஷ்ணுமேளம் ருத்ரமேளங்களையும் நாம் ஒருவாறு பார்ப்பது உபயோகமாயிருக்குமென்று நம்புகிறேன்.

## 14. பிர்ம மேளத்தில் சொல்லப்படும் விஷ்ணு மேளம்.

பூர்வ தமிழ்மக்கள் வட்டப்பாலையில் வரும் மருதம், குறிஞ்சி, நெய்தல், பாலை என்னும் நாலு யாழ் முறையில் கிரகமாற்றி அவை ஒவ்வொன்றிலும் அகநிலை, புறநிலை, அருகியல், பெருகியல் என்னும் சாதி முறைப்படிக் கமகமாய் யாழ் வாசித்தார்கள் என்றும் அதிலும் நுட்பமாக $\frac{1}{4}$, $\frac{1}{16}$ போன்ற நுட்ப சுருதிகளைச் சேர்த்துப் பாடினார்களென்றும் அவைகள் ஆயப்பாலை, வட்டப்பாலை, திரிகோணப்பாலை, சதுரப்பாலையென்று நாலு பெரும் பிரிவுகளாக வகுக்கப்பட்டிருந்தனவென்றும் பொற்கடகத்தில் விவரம் சொல்லியிருக்கிறோம். இம்முறையின் நுட்பம் அறியாமல் தற்காலத்தில் குழப்பம் இருப்பதுபோலவே பல நூற்றாண்டுகளுக்கு முன்னும் இருந்ததனால் 12 சுரங்களின் விக்ருதி பேதத்தால் உண்டான 72 மேளக்கர்த்தாவை ஒப்புக்கொண்டு அவற்றை ருத்ரமேளமாகவும் ஒற்றைப்பட்ட சுருதிகளினால் அதாவது 12 சுரங்களில் பாதியான சுரங்களினால் உண்டான 200 கர்த்தாக்களை விஷ்ணு மேளமாகவும் இவ்விரண்டும் கலந்துண்டாகும் 4624 மேளங்களைப் பிர்மமேளமாகவும் கனகையா கவிசாதுர்கம் என்பவர் சொல்லியிருக்கிறார். இந்த 4624 பேதங்களும் 24 சுருதியின் சம்பந்தத்தினாலுண்டானவை.

பன்னிரண்டு அரைச் சுரத்தினால் 72 மேளக்கர்த்தா உண்டான முறைப்படி 24 சுருதியினால் இப்பிர்ம மேளம் செய்யப்பட்டிருக்கிறது. ஆனால் ருத்ரமேளமென்று அழைக்கப்படும் எழுபத்திரண்டில் சுத்தமத்திமம், பிரதிமத்திமம் என்று இரண்டு பேதங்களுண்டானது போல சுத்தமத்திமம் முதல் மத்திமத்தின் நாலு பேதங்களும் சேர்ந்து நாலு பேதங்களாக வழங்கி வருகின்றது. இந்த 4624 கர்த்தா பேதங்களில் ருத்ரமேளமும் விஷ்ணு மேளமும் சுர முறைப்படி பிர்ம மேளத்தில் அடங்கியிருக்கின்றன.

மேலும் ருத்ர மேளம் மனிதரால் கானம் செய்யக் கூடியதென்றும் ருத்ர வீணையில் வாசிக்கக்கூடியதென்றும் விஷ்ணு மேளம் காற்றினால் ஊதி வாசிக்கக்கூடிய நாகசுரம் முதலியதளைக் கருவிகளைக்கொண்டு அசுரரால் வாசிக்கக்கூடியதென்றும் அதை அனந்தசயனன் அசுரருக்கென்று சொன்னாரென்றும் மற்றும் 24 சுருதிகளும் கலந்த 4624 மேளங்களும் பிர்ம வீணையில் கமகமாய் வாசிக்கக் கூடியவையென்றும் அங்கே சொல்லப்படுகிறது. பொற்கடகம் 865 ஆம் பக்கத்தில் வந்துள்ள பரிபாடலில் தென் மதுரையின் அருகில் ஓடும் வைகைப் பெருக்கின் விழாக் கொண்டாடுவதைக் கூறுமிடத்தில் 'தெய்வப்பிரமம் செய்குவோரும்' என்று சொல்லியிருப்பதைக் கவனிக்கும்பொழுது பிர்ம வீணையில் கானம் செய்ததாக எண்ண இடமிருக்கிறது. அதாவது 24 சுருதிமுறையில் கானம் செய்தார்களென்று தோன்றுகிறது. அக்கால வழக்கப்படி திரிகோணப்பாலை சதுரப்பாலை முறையின் நுட்ப சுருதிகளில் கானம் செய்வோருக்கு இது எளிதாயிருக்கலாமே. அவ்விரு முறையையும் அறிவதற்குரிய சாஸ்திரமில்லாமற் போனபின் நாலு பாலைகளும் பிர்ம மேளத்தில் அடங்கி விடுமென்று 24 சுருதிகளடங்கிய பிர்ம மேளம் சொன்னது கொண்டாடக்கூடியதே. என்றாலும் பிர்மமேள அட்டவணையைப் போல ஒன்று இருந்ததாகத் தெரியவில்லை. ஆனால் 24 சுருதிகளில் வீணையில் வாசிப்பதை பிர்ம வீணையென்றுசொன்னார்கள் என்பதாக ஊகிக்க இடமிருக்கிறது.

இந்திய சங்கீதத்தில் வழங்கி வரும் சுரம் சுருதிகளை அறியவேண்டுமென்று பலமுகமாய் விசாரித்து தற்கால வழக்கத்திலிருக்கும் கீர்த்தனைகளைப் பாடிப்பார்த்து வருகையில், சுர சஞ்சார பேதத்தினால் ஒரு ஸ்தாயியில் 24 சுருதிகள் இருக்க வேண்டுமென்று கண்டு அம்முறைப்படி 24 சுருதியடங்கிய மேளகர்த்தா ஒன்று தயார்செய்து இதில் எல்லா இராகங்களும் சுருதிகளும் அடங்கிவிடுமென்று ஒருவாறு நான் திருப்தியடைந்தேன். அதன்பின் சிலகாலம்

பொறுத்து அரிகேசவ நல்லூர் மகா-ா-ா-ஸ்ரீ முத்தையா பாகவதர் அவர்கள் பிர்மமேளம் செய்யும் விவரமடங்கிய புத்தகம் ஒன்று கொண்டுவந்ததைக்கண்டு மிகுந்த தைரியமடைந்தேன்.

பின்னும் சிலகாலம் பொறுத்து இப்புத்தகத்தை அனுசரித்து ஒவ்வொரு மேளத்திற்கும் விவரம் சொல்லும் மேளாதிகார லக்ஷணம் என்னும் ஒரு புத்தகம் தஞ்சாவூர் அரமனை சரஸ்வதிமாலிலிருக்கக் கண்டேன். அதில் 1022 இராகங்களுக்குப் பெயர்சொல்லப் படுவதாலும் அவைகளின் இடையில் 72 மேளக்கர்த்தாவில் சில காணப்படுவதாலும் அம்மேளக்கர்த்தாக்களில் சில 24 சுருதி முறையில் வரும் இராகங்களாகக் குறிக்கப்பட்டிருப்பதாலும் அவைகளையும் இங்கே காட்டவேண்டியது அவசியமாயிற்று. 24 சுருதி முறைப்படி சில இராகங்கள் வருவதனால் இம்முறை பூர்வகாலத்தி லிருந்ததென்றும் 12 சுர முறையிலும் 24 சுருதி முறையிலும் பல குழப்பங்கள் உண்டாகி வாதாட்டமிருந்ததென்றும் அவற்றில் பல முறைகளைத்தள்ளி 12 சுர முறையையும் 24 சுருதி முறையையும் நிச்சயம் பண்ணுவதற்கென்று இவைகள் உண்டாகி யிருக்கின்றனவென்றும் நாம் நினைக்க இடம் தருகிறது

24 சுருதியினால் செய்யப்பட்ட பிர்ம மேளம் கிடைத்தபின் சங்கீதத்திலுள்ள சில சந்தேகங்கள் தீர்ந்துவிட்டனவென்று நினைத்திருந்தாலும் அவற்றிலும் நுட்பமான சுருதிகள் பல கீர்த்தனங்களிலும் பண்களிலும் வருகின்றனவென்று கண்டபின் பல எண்ணங்களும் சந்தேகங்களும் என் மனதில் தோன்றின.

பூர்வ தமிழ்மக்கள் வழங்கிவந்த ஆயப்பாலை, வட்டப்பாலை, திரிகோணப்பாலை, சதுரப்பாலை என்ற நாலு பாலைகளையும் அவைகளின் விவரத்தையும் கண்டபின் பிர்மமேளம் சுரம் சுருதிகளினுடைய விவரம் அறிவதற்கு போதாதென்றும் இவைகளிற் சொல்லப்படும் சுருதி முறைப்படி இராகங்கள் உண்டாக்குவதும் பாடுவதும் கூடிய காரியமல்லவென்றும் பல நாள் ஆராய்ச்சியினால் அறிந்தேன்.

தாய் இராகங்களும் கிளை இராகங்களும் உண்டாவதற்கு செம்பாலைப்பண் முறை அல்லது தீரசங்கராபரண முறையிற் சொல்லும் பன்னிரண்டு சுரங்களே ஆதாரமானவை. இப் பன்னிரண்டு சுரங்களே நம் பூர்வத்தோர் பாடி வந்த ஆறுதாய் இராகங்களையும் 36 பூர்வ இராகங்களையும் 32 இராகங்களையும் 72 மேளக்கர்த்தாவையும் அவைகளில் ஜன்னியமான பல இராகங்களையும் பிறப்பிக்கக் கூடியவை. இவைகளில் விஸ்தரிகைக்கிளையைப் போல ச-ப முறையாய் வரும் 2 சுரங்களில் 1, $\frac{3}{4}$, $\frac{1}{2}$, $\frac{1}{4}$ போன்ற சுருதிகளைக் கூட்டியும் குறைத்தும் கமகமாய்ப் பிடித்துப் பல இராகபேதங்களை உண்டாக்கலாம். ஆகையால் பிர்ம மேளத்தையும் நீக்கி ருத்ரமேளமென்று சொல்லப்படும் 72 மேளக்கர்த்தாவில் தற்கால வழக்க முறைப்படியே இராகம் சொல்ல வேண்டியதாயிற்று. ஆயினும் பிர்மமேளத்தின் விவரம் தெரிந்துகொள்வது நமக்கு நல்லதென்று நினைக்கிறேன்.

---

## விஷ்ணுமேளம் 200.

(கால் கால் சுரங்களினல் பாடப்படுவது.)

சுத்த மத்திம சக்ரம் 10-க்கு மேளம் 100 சுரம் 14.

| | 1 | 2 | 4 | 6 | 8 | 10 | 11 | 13 | 15 | 16 | 18 | 20 | 22 | 24 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| இலக்கம். | ச | ரி 1 | ரி 3 | ரி 5 | ரி 7 | | | | | த 1 | த 3 | த 5 | த 7 | |
| | | | க 1 | க 3 | க 5 | க 7 | ம 3 | ம 5 | ப | | நி 1 | நி 3 | நி 5 | நி 7 |
| 1 | ச | ரி | க | ... | ... | ... | ம | ... | ப | த | நி | ... | ... | ... |
| 2 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | நி | ... | ... |
| 3 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | ... | நி | ... |
| 4 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | ... | ... | நி |
| 5 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | நி | ... | ... |
| 6 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | நி | ... |
| 7 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | ... | நி |
| 8 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | நி | ... |
| 9 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | நி |
| 10 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | நி |
| 11 | ச | ரி | ... | க | ... | ... | ம | ... | ப | த | நி | ... | ... | ... |
| 12 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | நி | ... | ... |
| 13 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | ... | நி | ... |
| 14 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | ... | ... | நி |
| 15 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | நி | ... | ... |
| 16 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | நி | ... |
| 17 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | ... | நி |
| 18 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | நி | ... |
| 19 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | நி |
| 20 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | நி |
| 21 | ச | ரி | ... | ... | க | ... | ம | ... | ப | த | நி | ... | ... | ... |
| 22 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | நி | ... | ... |
| 23 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | ... | நி | ... |
| 24 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | ... | ... | நி |
| 25 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | நி | ... | ... |
| 26 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | நி | ... |
| 27 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | ... | நி |
| 28 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | நி | ... |
| 29 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | ... | நி |
| 30 | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | த | நி |

72 மேளக்கர்த்தா அல்லது 72 தாய் இராகங்களும் அவற்றில் பிறந்த கிளை இராகங்களும்.—இன அகராதி—(தொடர்ச்சி)

| பொது நம்பர். | நம்பர். | ஜன்னியராகம். | ஆரோகணம். | அவரோகணம். | மேளம். |
|---|---|---|---|---|---|
| 1329 | 16 | தீபரம் ... ... ... | ச ரி க ம ப த நி ச | ச நி த நி ப ம க ரி ச | 10 |
| 1330 | 17 | சௌராஷ்டிரம் ... ... | ச ரி க ம ப த நி ச | ச நி தா ப ம க ரி ச | 15 |
| 1331 | 18 | கன்னடசௌராஷ்டிரம் ... | ச ரி ம க ம த ப த நி ச | ச நி த ப ம க ரி ச | 10 |
| 1332 | 19 | ஹம்ஸதீபரம் ... ... | ச ரி க ம ப நி ப ச | ச நி ப த நி ப ம க ரி ச | 42 |
| 1333 | 20 | சமணபாஸ்கரம் ... ... | ச ரி க ம ப த ப நி ச | ச த ப ம க ச | 29 |
| 1334 | 21 | சபாஸ்கரம் ... ... | ச ரி ம ப நி ச | ச நி ப த ப ம க ரி ச | 15 |
| 1335 | 22 | சசிபாஸ்கரம் ... .. | ச ரி க ப நி ச | ச நி ப க ரி ச | 51 |
| 1336 | 23 | ஜடாசேகரம் ... ... | ச ரி க ம ப த நி ச | ச நி த ப ம நி த ம க ரி ம க ச | 28 |
| 1337 | 24 | ஜலோதரம் ... ... | ச ரி க ம ப த நி ச | ச நி த நி ப க ம க ரி ச | 63 |
| 1338 | 25 | தௌரேஜக்ரம் ... ... | ச ரி க ம த நி ச | ச நி த ம க ரி ச | 29 |
| 1339 | 26 | படமயூரம் ... ... | ச க ரி க ம நி த நி ச | ச நி ப ம க ரி ச | 22 |
| 1340 | 27 | வளவகந்தரம் ... ... | ச ரி க ம நி ச | ச நி த ப ம க ரி ச | 29 |
| 1341 | 28 | சல்லீரம்... ... ... | ச ரி க ரி ம ப த நி ச | ச நி ப த ப ம க ரி ச | 47 |

ராரி.

| பொது நம்பர். | நம்பர். | ஜன்னியராகம். | ஆரோகணம். | அவரோகணம். | மேளம். |
|---|---|---|---|---|---|
| 1342 | 1 | கோத்ராரி ... ... | ச ம ப த ச | ச நி த ப ம க ரி ச | 63 |
| 1343 | 2 | விஜயகோத்ராரி ... ... | ச ரி க ம ப த நி ச | ச நி த ப ம க ரி ச | 62 |

ருத்ரி.

| பொது நம்பர். | நம்பர். | ஜன்னியராகம். | ஆரோகணம். | அவரோகணம். | மேளம். |
|---|---|---|---|---|---|
| 1344 | 1 | தேசிகருத்ரி ... ... | ச ம ரி க ம ப நி ச | ச நி ப த ம க ரி ச | 9 |
| 1345 | 2 | பிரதாபருத்ரி ... ... | ச ம க ம ப த நி ச | ச நி ப ம க ம ரி ச | 28 |
| 1346 | 3 | சுகாத்ரி ... ... ... | ச ம ப த நி ச | ச த ப ம க ரி ச | 4 |

ரூபி.

| பொது நம்பர். | நம்பர். | ஜன்னியராகம். | ஆரோகணம். | அவரோகணம். | மேளம். |
|---|---|---|---|---|---|
| 1347 | 1 | தானரூபி... ... ... | ச ரி க ம ப த நி ச | ச நி த ப ம க ரி ச | 6 |
| 1348 | 2 | பஹுரூபி ... ... ... | ச க ம த ப த நி ச | ச நி ப ம க ச | 28 |
| 1349 | 3 | சாமரூபி ... ... ... | ச க ம ப ம த நி ப ச | ச நி த ப ம க ரி ச | 52 |
| 1350 | 4 | சுக்ஷ்மரூபி ... ... | ச ப ம ரி க ம ப ச | ச நி த ப ம ச | 28 |

ரேக.

| பொது நம்பர். | நம்பர். | ஜன்னியராகம். | ஆரோகணம். | அவரோகணம். | மேளம். |
|---|---|---|---|---|---|
| 1351 | 1 | மதனரேக... ... ... | ச க ம ப ம நி ச | ச நி த ப ம ச | 29 |
| 1352 | 2 | சாத்விகரேக .. ... | ச ரி ம ப நி ச | ச நி த ப ம க ரி ம க ச | 29 |

லதை.

| பொது நம்பர். | நம்பர். | ஜன்னியராகம். | ஆரோகணம். | அவரோகணம். | மேளம். |
|---|---|---|---|---|---|
| 1353 | 1 | அங்கலதை... ... ... | ச க ரி க ம ப நி த ச | ச நி த ம ரி ச | 28 |
| 1354 | 2 | சம்பாலதை... ... ... | ச க ம த நி ச | ச நி த ப ம ரி ச | 19 |
| 1355 | 3 | ஜுராலதை ... ... ... | ச ரி க ம ப த ச | ச நி த ப க ரி ச | 29 |

## 72 மேளக்கர்த்தா அல்லது 72 தாய் இராகங்களும் அவற்றில் பிறந்த கிளை இராகங்களும்.—இன அகராதி—(தொடர்ச்சி)

### லம்.

| பொது நம்பர். | நம்பர். | ஜன்னியராகம். | ஆரோகணம். | அவரோகணம். | மேளம். |
|---|---|---|---|---|---|
| 1356 | 1 | கோலாகலம் … … | ச ப ம க ம ப த நி ச | ச நி த ப ம க ரி ச | 29 |
| 1357 | 2 | கர்ப்பசார்த்தூலம் … | ச ரி க ம நி ச | ச நி ப த ப ம க ரி ச | 51 |
| 1358 | 3 | தாமபலம் … … | ச ரி க ம ப த நி ச | ச நி த ப க ரி ச | 65 |
| 1359 | 4 | கல்லோலம் … … | ச ப த நி ச | ச நி த நி ப ம க ச | 18 |
| 1360 | 5 | குசுமகல்லோலம் … … | ச ப ம ரி க ம ப ச | ச த ப ம க ம ரி ச | 32 |
| 1361 | 6 | ககனகுதூகலம் … … | ச ரி ம தா நி த ப ச | ச நி த ப ம க ரி ச | 29 |
| 1362 | 7 | பானுகோகிலம் … … | ச ம ப த நி ச | ச த நி ப ம க ச | 12 |
| 1363 | 8 | மத்யகோகிலம் … … | ச ரி த ப நி | த ப ச ரி ச நி | 28 |
| 1364 | 9 | பிரதாபகோகிலம் … | ச ப ம ப த நி ச | ச நி ப ம க ச | 30 |
| 1365 | 10 | பிரமரகோகிலம் … … | ச ரி ம ப நி த நி ச | ச நி த ப ம ரி ச | 57 |

### லலித.

| பொது நம்பர். | நம்பர். | ஜன்னியராகம். | ஆரோகணம். | அவரோகணம். | மேளம். |
|---|---|---|---|---|---|
| 1366 | 1 | பஞ்சமலலித … … | ச ரி க ம ப த நி ச | ச நி ப ம ரி க ம ரி ச | 15 |
| 1367 | 2 | புன்னாகலலித … … | ச ம க ம ப த நி ச | ச நி த ப ம க ம க ரி ச | 28 |
| 1368 | 3 | புஷ்பலலித … … | ச க ம த நி ச | ச த ப ம ரி ச | 51 |
| 1369 | 4 | வாக்விலலித … … | ச ரி ம ப த ச | ச நி ப த ப ம ரி க ரி ச | 15 |
| 1370 | 5 | ஹிரண்யலலித … … | ச ரி க ரி ம ப த நி ச | ச த ப ம க ரி ச | 8 |
| 1371 | 6 | சாரங்கலலித … … | ச ரி க ம ரி ம ப நி ச | ச நி த ப ம ரி ச | 3 |
| 1372 | 7 | பூர்ணலலித … … | ச ரி க ம ப ச | ச நி த ப ம க ரி ச | 19 |
| 1373 | 8 | மாருவலலித … … | ப த நி ச ரி க ம ப | ப ம க ரி ச நி ப | 42 |
| 1374 | 9 | சுத்தலலித … … | ச ப ம த நி ச | ச நி ச த ப ம க ரி ச | 11 |
| 1375 | 10 | லலித … … … | ச ரி க ம த நி ச | ச நி த ம க ரி ச | 17 |
| *1376 | 11 | அருணஜ்வலித … … | ச ரி க ம த நி ச | ச நி த ப ம க ரி ச | 59 |

### லீல.

| பொது நம்பர். | நம்பர். | ஜன்னியராகம். | ஆரோகணம். | அவரோகணம். | மேளம். |
|---|---|---|---|---|---|
| 1377 | 1 | ஆனந்தலீல … … | ச ரி க ம ப நி ச | ச நி த ப ம க ரி ச | 33 |
| 1378 | 2 | குமாரலீல … … | ச ம ப த நி ப நி ச | ச நி த ம க ரி ச | 20 |
| 1379 | 3 | கர்ப்பலீல … … | ச ம க ம ப நி த நி ச | ச நி த ப ம க ம க ரி ச | 46 |
| 1380 | 4 | தர்ப்பகலீல … … | ச ரி ம ப த நி ச | ச த ப ம க ரி ச | 29 |
| 1381 | 5 | பவ்வலீல … … … | ச க ம த நி ச | ச நி த ப ம க ச | 28 |
| 1382 | 6 | பத்ரசாரங்கலீல … … | ச ரி க ம ப த ப நி ச | ச நி த ப ம ரி ச | 22 |
| 1383 | 7 | போகலீல … … | ச ரி க ப த நி ச | ச நி த ம க ரி ச | 27 |
| 1384 | 8 | யோகலீல … … | ச ரி க ரி ம ப நி த நி ப த ச | ச நி த ப ம க ரி ச | 15 |
| 1385 | 9 | ரங்கலீல … … … | ச ரி க ம ப த நி ச | ச நி த ப ம த ப த ம க ரி ச | 22 |
| 1386 | 10 | ரகுலீல … … … | ச ம ரி ப ம க ம ப ம ரி ம ப ச | ச நி த நி ப ம க ம ரி ம க ரி ச | 42 |
| 1387 | 11 | ரமாலீல … … … | ச நி க ம த நி ப ச | ச நி த ம ப ம க ச | 15 |
| 1388 | 12 | ரவளிகாலீல … … | ச நி ச ரி க ம ப த நி | த ப ம க ரி ச நி ச | 22 |
| 1389 | 13 | வசந்தலீல … … | ச ரி ம ப த நி ச | ச நி த ப க ரி ச | 16 |
| 1390 | 14 | சம்பிரமலீல … … | ச ரி ம ப த ச | ச நி த ப ம க ரி ச | 21 |

72 மேளக்கர்த்தா அல்லது 72 தாய் இராகங்களும் அவற்றில் பிறந்த கிளை இராகங்களும்.—இன அகராதி—(தொடர்ச்சி)

| மொத்த நம்பர். | நம்பர். | ஜன்னியராகம். | ஆரோகணம். | அவரோகணம். | மேளம். |
|---|---|---|---|---|---|
| 1391 | 15 | சிம்ஹலீல ... ... | ச ரி க ம த நி ச | ச நி த ப ம ப ம க ரி ச | 15 |
| 1392 | 16 | குணலீல... ... ... | ச ரி ப நி த நி ச | ச நி த ப ம க ரி க ச | 29 |
| 1393 | 17 | வீரலீல ... ... ... | ச க ம ப த நி ச | ச நி த ம க ரி க ச | 45 |
| | | **லோல** | | | |
| 1394 | 1 | கல்லோல ... ... | ச ப த நி ச | ச நி த நி ப ம க ச | 18 |
| 1395 | 2 | காலோல... ... ... | ச ரி க ம ப நி ச | ச நி ப த ப ம க ம ரி ச | 29 |
| | | **வசந்தம்** | | | |
| 1396 | 1 | கனகவசந்தம் ... ... | ச க ம ப நி த ச | ச நி த ப ம க ரி ச | 20 |
| 1397 | 2 | கமலிகாவசந்தம் ... ... | ச ரி க ரி ம ப த நி ச | ச நி த ம க ரி ச | 37 |
| 1398 | 3 | கல்யாணவசந்தம்... ... | ச க ம த நி ச | ச நி த ப ம க ரி ச | 21 |
| 1399 | 4 | கம்பீரவசந்தம் ... ... | சமகமரிகமபநிதநிபதநிச | ச த ப ம ரி ச | 8 |
| 1400 | 5 | கானவசந்தம் ... ... | ச ரி க ம ப நி த ச | ச நி த ப ம க ரி ச | 22 |
| 1401 | 6 | கோபிகாவசந்தம்... ... | ச க ம ப த நி ச | ச நி த ப ம க ச | 20 |
| 1402 | 7 | கௌரிவசந்தம் ... ... | ச ரி ம ப த நி ச | ச நி த ப ம ரி க ரி ச | 22 |
| 1403 | 8 | ஜாஜீவசந்தம் ... .. | ச ரி க ம ப த நி ச | ச த ப ம ரி க ச | 29 |
| 1404 | 9 | ஜீவிகாவசந்தம் ... ... | ச ரி ம ப த ச | ச நி ப ம ரி ச | 22 |
| 1405 | 10 | சந்திவசந்தம் ... ... | ச ரி ம த நி ச | ச த நி த ப ம க ம ரி ச | 51 |
| 1406 | 11 | தீபிகாவசந்தம் ... ... | ச க ம ப த ப நி ச | ச த ப ம ரி ச | 20 |
| 1407 | 12 | நிர்வாணவசந்தம்... ... | ச ரி க ப த ச | ச நி த ப ம க ரி ச | 57 |
| 1408 | 13 | பவனவசந்தம் ... ... | ச ம க ம ப த நி ச | ச நி ப நி ப ம ரி ம க ச ரி ச | 28 |
| 1409 | 14 | புஷ்பவசந்தம் ... ... | ச க ம ப த நி ச | ச நி த ம க ரி ச | 2 |
| 1410 | 15 | பதரீவசந்தம் ... ... | ச ரி க ம நி ச | ச நி த ப த நி த ம க ரி க ம க ச | 63 |
| 1411 | 16 | பாலிகாவசந்தம் ... ... | ச ரி க ம ப த நி ச | ச நி த நி ப ம ப த நி ம க ரி ச | 15 |
| 1412 | 17 | போகவசந்தம் ... ... | ச ரி க ம த நி ச | ச நி த ம க ரி ச | 51 |
| 1413 | 18 | மயூரவசந்தம் ... ... | ச ரி க ம த நி த ச | ச த ப ம ரி ச | 15 |
| 1414 | 19 | மல்லிகாவசந்தம் ... ... | ச க ம ப நி ச | ச நி த ப ம க ரி ச | 15 |
| 1415 | 20 | மாஞ்சிவசந்தம் ... ... | ச ரி க ம ப த நி ச | ச நி த ப ம க ம ரி ம க ச | 20 |
| 1416 | 21 | மாயாவசந்தம் .. ... | ச ரி க ம ப த நி ச | ச நி ப த நி த ப ம ரி ம க ரி க ச | 53 |
| 1417 | 22 | மார்த்தாண்டவசந்தம் ... | ச ரி க ம ப த நி ச | ச நி த ப ம க ம ரி ச | 52 |
| 1418 | 23 | ரேணவசந்தம் ... ... | ச ரி ம த நி ச | ச நி த ம க ரி ச | 28 |
| 1419 | 24 | வீரவசந்தம் .. ... | ச ரி க ம ப ச | ச நி த ப ம க ரி ச | 24 |
| 1420 | 25 | ஸ்யாமளவசந்தம்... ... | ச நி த நி ச ரி க ம ப த | ப ம க ரி ச நி த நி ச | 20 |
| 1421 | 26 | சுத்தவசந்தம் ... ... | ச ரி க ம ப நி ச | ச த நி ப ம க ரி ச | 29 |
| 1422 | 27 | சாமவசந்தம் ... ... | ச ரி க ம ப நி ச | ச நி த ப ம க ரி ச | 8 |
| 1423 | 28 | பிரதாபவசந்தம் ... .. | ச ம ரி க ம ப நி ச | ச நி ப ம ரி ச | 12 |
| 1424 | 29 | ராகவசந்தம் ... ... | ச ரி ம ப நி த ச | ச நி த ம ப ம க ரி ச | 14 |
| 1425 | 30 | ஹிந்தோளவசந்தம் ... | ச க ம ப த நி த ச | ச நி த ப ம க த ம க ச | 20 |
| 1426 | 31 | ஹெஜ்ஜோளவசந்தம் ... | ச ரி க ம ப ம த நி ச | ச த ப ம க ரி ச | 25 |
| 1427 | 32 | ஹைவசந்தம் ... ... | ச க ம ப த நி ச | ச நி ப ம க ச | 43 |

## 72 மேளக்கர்த்தா அல்லது 72 தாய் இராகங்களும் அவற்றில் பிறந்த கிளை இராகங்களும்.—இன அகராதி—(தொடர்ச்சி)

| பொது நம்பர். | நம்பர். | ஜன்னியராகம். | ஆரோகணம். | அவரோகணம். | மேளம். |
|---|---|---|---|---|---|
| 1428 | 33 | கமலவசந்தம் ... ... | ச ரி ச ம ப த நி ச | ச நி த ப ம க ரி ச | 37 |
| 1429 | 34 | கலிகவசந்தம் ... ... | ச க ம ப த நி ச | ச நி ப ம ரி ச | 43 |
| 1430 | 35 | மாருவவசந்தம் ... ... | ச ம க ம ப த நி ச | ச நி ப த ம க ரி ச | 45 |
| 1431 | 36 | விஜயவசந்தம் ... ... | ச ம ப த நி ச | ச நி ப ம க ச | 54 |
| 1432 | 37 | வசந்தம் ... ... ... | ச க ம த நி ச | ச நி த ம க ரி ச | 15 |

### வதி.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1433 | 1 | களாவதி... ... ... | ச ரி க ம ப த நி ப ச | ச நி த நி ப ம க ரி ச | 16 |
| 1434 | 2 | கேசராவதி ... ... | ச ரி ம ப த நி ச | ச த ப க ரி ச | 17 |
| 1435 | 3 | தர்மவதி... ... ... | ச ரி க ம ப த நி ச | ச நி த ப ம க ரி ச | 59 |
| 1436 | 4 | பிரபாவதி ... ... | ச ரி ம ப த நி ச | ச நி த ம ப ம ரி க ரி ச | 41 |
| 1437 | 5 | மத்யமாவதி ... ... | ச ரி ம ப நி ச | ச நி ப ம ரி ச | 22 |
| 1438 | 6 | மானவதி... ... ... | ச ரி க ம ப த நி ச | ச நி த ப ம க ரி ச | 5 |
| 1439 | 7 | ஷோணவதி ... ... | ச ரி க ம த நி ப த நி ச | ச நி ம க ரி ச | 22 |
| 1440 | 8 | சரஸ்வதி... ... ... | ச ரி ம ப த ச | ச நி த ப ம ச | 64 |
| 1441 | 9 | சரஸவதி... ... ... | ச ரி ம ப த ச | ச நி த ம க ரி ச | 64 |
| 1442 | 10 | சர்ப்பவதி ... ... | ச ரி ம ப த நி த ச | ச நி த ப ம க ம ரி ச | 67 |
| 1443 | 11 | சர்வமானவதி ... ... | ச ம க ம ப நி த நி ப த ச | ச நி த நி ப க ம க ரி க ச | 66 |
| 1444 | 12 | சேனவதி ... ... | ச ரி க ம ப த நி ச | ச நி த ப ம க ரி ச | 7 |
| 1445 | 13 | ஹேமாவதி ... ... | ச ரி க ம ப த நி ச | ச நி த ப ம க ரி ச | 58 |
| 1446 | 14 | ரூபாவதி... ... ... | ச ரி க ம ப த நி ச | ச நி த ப ம க ரி ச | 12 |
| 1447 | 15 | ரேகாவதி ... ... | ச ரி க ம ப நி த ச | ச நி த ப ம க ரி ச | 12 |
| 1448 | 16 | சத்யவதி... ... ... | ச ரி ம ப த நி த ச | ச நி த ப ம க ம ரி ச | 67 |
| 1449 | 17 | விஜயசரஸ்வதி ... ... | ச ரி ம ப த நி ச | ச நி ப ம க ரி ச | 57 |
| 1450 | 18 | அமராவதி ... ... | ரி க ப நி ச ரி க ம ப த நி ச | ச ப க ச நி த ப ம க ரி ச நி | 72 |

### வம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1451 | 1 | இந்துகண்டாரவம் ... | ச க ம ப த ப நி | தா ப ம க ரி ச த் | 20 |
| 1452 | 2 | கோகிலாரவம் ... ... | ச ரி க ரி ம ப த நி ச | ச நி த ப ம க ரி ச | 11 |
| 1453 | 3 | கந்தர்வம்... ... ... | ம ப த நி ச ரி க | ரி ச நி ப ம ப த நி ச | 42 |
| 1454 | 4 | கண்டாரவம் ... ... | ச க ம ப நி ச | ச நி த ப ம க ரி ச | 2 |
| 1455 | 5 | சாபகண்டாரவம் ... ... | ச க ம ப நி | த ப க ரி ச நி | 20 |
| 1456 | 6 | தரபல்லவம் ... ... | ச ரி ம க ம ப நி ச | ச நி த ப ம க ம ரி க ரி ச | 65 |
| 1457 | 7 | பாடலார்ணவம் ... ... | ச க ரி க ம ப நி த நி ச | ச நி ப ம ரி ச | 20 |
| 1458 | 8 | பாடீரவம் ... ... | ச ரி க ம ப த நி ச | சநிதநிபதபமகமகரிமகச | 53 |
| 1459 | 9 | பைரவம்... ... ... | ச ரி க ம ப த நி ச | ச த ப ம க ரி ச | 17 |
| 1460 | 10 | போகிபைரவம் ... ... | ச ரி க ம ப நி த நி ச | ச த ப ம ரி க ரி ச | 28 |
| 1461 | 11 | ருத்ரகண்டாரவம் ... | ச ரி க ரி ம ப ம த நி த ப ச | ச நி த ம க ச | 20 |
| 1462 | 12 | வீரகண்டாரவம் ... ... | ச ம ப த நி ச | ச நி த ப ம க ரி க ம ச | 20 |
| 1463 | 13 | வேணுகாரவம் ... ... | ச ரி ம க ம ப நி ச | ச நி த ப ம க ம ரி ச | 20 |
| 1464 | 14 | சங்காரவம் ... ... | ச க ரி க ம ப த நி ச | ச நி ப ம க ரி ச | 58 |

72 மேளக்கர்த்தா அல்லது 72 தாய் இராகங்களும் அவற்றில் பிறந்த ஜன்னிய இராகங்களும். இன அகராதி (தொடர்ச்சி)

| மொத்த எண். | எண். | ஜன்னியராகம். | ஆரோகணம். | அவரோகணம். | மேளம். |
|---|---|---|---|---|---|
| 1465 | 15 | சார்த்தூலாரவம் ... | ... ச ரி ம ப த ச | ச நி த நி ப ம க ரி ச | 8 |
| 1466 | 16 | சுத்தகந்தர்வம் ... | ... ச ரி க ம ப த நி ச | ச த ப ம ரி ச | 17 |
| 1467 | 17 | சுத்தகண்டாரவம் | ... ச ரி க ம ப நி த ச | ச நி ப ம க ரி ச | 17 |
| 1468 | 18 | சிம்ஹாரவம் ... | ... ச ரி ம ப நி ச | ச நி ப ம நி க ரி ச | 58 |
| 1469 | 19 | சுகசைந்தவம் ... | ... ச ரி ம க ம ப நி த நி ச | ச நி த ப ம க ரி ச | 22 |
| 1470 | 20 | சேஷாரவம் ... | ... ச ம க ம ப த நி ச | ச நி த ப ம க ரி ச | 20 |
| 1471 | 21 | ஹேமார்ணவம் ... | ... ச க ம ப த நி ச | ச நி த ம க ரி ச | 51 |
| 1472 | 22 | அதிரார்ணவம் ... | ... ச ரி க ம ப த ச | ச நி த ப ம க ச | 65 |
| 1473 | 23 | ஹம்ஸகந்தர்வம் ... | ... ச ரி க ம ப ச | ச நி த நி ப ம ரி ச | 30 |
| 1474 | 24 | காசகந்தர்வம் ... | ... ச ரி ம ப த நி ச | ச த நி ப ம ரி ச | 31 |
| 1475 | 25 | லலிதகந்தர்வம் ... | ... ச ரி க ம ப த நி ச | ச நி ப க ரி ச | 30 |
| 1476 | 26 | கோகிலகந்தர்வம் ... | ... ச க ம த ச | ச த ப ம க ரி க ச | 31 |
| 1477 | 27 | லலிதசிம்ஹாரவம் ... | ... ச ரி க ம ப ச | ச நி ப ம க ரி ச | 59 |
| 1478 | 28 | கனகசிம்ஹாரவம் ... | ... ச க ம ப நி ச | ச நி த ப ம ரி ச | 61 |
| 1479 | 29 | குந்தசிம்ஹாரவம் ... | ... ச ரி ம ப ம த நி ச | ச த ப ம க ரி ச | 69 |
| 1480 | 30 | சுத்தசிம்ஹாரவம் ... | ... ச ரி ம க ம ப த நி ச | ச த நி த ப ம ரி ச | 67 |

## வராளி.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1481 | 1 | கனகவராளி ... | ... ச ரி ம ப நி ச | ச நி த நி ப ம க ரி ச | 22 |
| 1482 | 2 | குந்தலவராளி ... | ... ச ம ப த நி த ச | ச நி த ப ம ச | 28 |
| 1483 | 3 | கோகிலவராளி ... | ... ச ரி ம ப த ச | ச நி த ம ப ம க ரி க ச | 28 |
| 1484 | 4 | சாணவராளி ... | ... ச ரி க ம த நி த ச | ச த ம க ரி ச | 20 |
| 1485 | 5 | சித்ரவராளி ... | ... ச ரி க ரி ம ப த நி ச | ச நி ம க ரி ச | 20 |
| 1486 | 6 | ஜீவவராளி ... | ... ச க ரி க ம த நி த ச | ச நி த ப ம க ம ரி க ம ரி ச | 15 |
| 1487 | 7 | பூர்வவராளி ... | ... ச ரி க ம ப த நி ச | ச நி த ப ம க ரி ச | 39 |
| 1488 | 8 | நாகவராளி ... | ... நி ச ரி க ம ப த | ப ம க ரி ச நி | 8 |
| 1489 | 9 | நாகஸ்வராளி ... | ... ச க ம ப த ச | ச த ப ம க ச | 28 |
| 1490 | 10 | ராமவராளி ... | ... ச ரி க ம ப த ச | ச நி த நி ப ம க ரி ச | 4 |
| 1491 | 11 | பிரதாபவராளி ... | ... ச ரி ம ப ச | ச த ப ம க ரி ச | 28 |
| 1492 | 12 | பந்துவராளி ... | ... ச ரி க ம ப த நி ச | ச நி த ப ம த ம க ரி ச | 45 |
| 1493 | 13 | புன்னாகவராளி ... | ... ச ரி க ம ப த நி | நி த ப ம க ரி ச நி | 8 |
| 1494 | 14 | ரசவராளி ... | ... ச ரி க ம ப த நி ச | ச நி த ம க ச ரி ச | 8 |
| 1495 | 15 | விக்கிரமவராளி ... | ... ச க ம ப நி ச | ச நி த ப ம க ரி ச | 47 |
| 1496 | 16 | சுபபந்துவராளி ... | ... ச ரி க ம ப த நி ச | ச நி த ப ம க ரி ச | 45 |
| 1497 | 17 | சுபவராளி... ... | ... ச க ம ப த நி ச | ச நி ப த ப ம க ரி ம க ச | 45 |
| 1498 | 18 | சோகவராளி ... | ... ச க ம நி | த ப ம க ரி ச | 9 |
| 1499 | 19 | சமவராளி... ... | ... ச ரி ம ப த நி ச | ச நி த ப ம க ரி ச | 3 |
| 1500 | 20 | சிம்ஹவராளி ... | ... ச ரி க ம ப ம த நி ச | ச த ப ம க ம ரி ச | 26 |
| 1501 | 21 | சரவராளி... ... | ... ச ம ப த நி | ச நி த ப ம ச | 13 |
| 1502 | 22 | ஹாடகவராளி ... | ... ச ரி ம ப த ச | ச நி த ப ம க ரி க ச | 28 |
| 1503 | 23 | பேகவராளி ... | ... ச ரி க ம ப நி ச | ச நி ப ம க ரி ச | 14 |
| 1504 | 24 | வராளி ... ... | ... ச க ரி க ம ப த நி ச | ச நி த ப ம க ரி ச | 39 |

# கருணாமிர்த சாகரம்.

## இரண்டாவது புத்தகம்.

### நான்காம் பாகம்.

**72** மேளக்கர்த்தாக்களில் வழங்கிவரும் ஜன்னிய இராகங்களிலும் இன்னும் புதிதாக
உண்டாகும் இராகங்களிலும் ஆரோகண அவரோகண சுரங்களைத் தெரிந்து
கீதம் கீர்த்தனம் முதலியன செய்யும் முறை.

--o+o--

கடவுள் துணை.




# கருணாமிர்த சாகரம்.

## இரண்டாவது புத்தகம்.

### நான்காவது பாகம்.

**இராகங்களின் ஆரோகண அவரோகணங்களைத் தெரிந்து அதில் இராக சஞ்சாரம் செய்யவும் கீதம் கீர்த்தனம் முதலியன உண்டாக்கவும் அனுகூலமான விதிகள்.**

சுரப் பிரஸ்தாரங்களினால் சம்பூர்ணம் சாடவம் ஔடவம் என்னும் வழிகளில் எத்தனை இராகங்கள் கிடைக்குமென்றும், உலகத்தில் நாளிது வரையும் வழங்கி வந்த கர்த்தா இராகங்கள் இன்னவை யென்றும், 72 மேளக்கர்த்தாக்களைப் பற்றியும், அவற்றில் வரும் ஜன்னிய இராகங்களைப் பற்றியும் எழுதினேன்.

இனி இராகம் உண்டாக்குவதற் குரிய முறைகளில் கவனிக்கவேண்டிய சில ஆதார விதிகளையும், இராகங்கள் செய்யும் முறையையும் கவனிக்கவேண்டும்.

ஒரு இராகத்தின் ஆரோகண அவரோகணத்தை வைத்துக்கொண்டு அதற்கு இசை முறை வைப்பு (பொருத்த சுரங்கள்), இசை கூடா நரம்பு (பகைச் சுரம்), ஆளத்தி செய்யுமாறு (ஆலாபனம்), ஜீவசுரம் (இராகத்தின் முக்கிய சுரம்), இசை பொருந்தும் முறையிற் பண்ணமைப்பு (கீதம் கீர்த்தனம் முதலியன செய்தல்), ஆகிய ஐந்து முக்கிய காரியங்களையும் காண்போம்.

சிறப்புற்றோங்கிய தென் தமிழ் நாட்டில் இயல் இசை நாடக மென்னும் முத்தமிழும் அதைச் சேர்ந்த சகல கலைகளும் மேன்மைபெற்று வழங்கி வந்த காலத்தில், இசைத் தமிழ் அல்லது சங்கீதமும் அதற்குரிய சுரம், சுருதிகள், இராகங்கள், தாளங்கள், அபிநயம் முதலிய அங்கங்களும் மிகுந்த தேர்ச்சிபெற்று வழங்கி வந்தவாகக் காணப்படுகின்றன. அதோடு தற்காலத்தில் சங்கீத விஷய

மாய் உலகத்தவர் எவரும் இன்றும் கண்டுகொள்ளாத நுட்ப சுருதிகளையும் இராகம் உண்டாக்கும் முறையையும் உடையதாயிருக்கிறதென்று நாம் துணிந்து சொல்லப் பல குறிப்புக்கள் இருக்கின்றன. பூர்வ தென்தமிழ் நாட்டார் வழங்கிவந்த இசைத் தமிழில் சுரம் சுருதிகளையும், அவைகளை அவர்கள் எப்படி உபயோகித்தார்களென்னும் முறையையும் அறிவதற்கு விளக்கிக்காட்ட, பொற்கடகம் என்னும் முதல் புத்தகத்தில் சுருக்கமாகச் சொன்னேன். அதில் இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழைப் பற்றியும், இசைத் தமிழாகிய சங்கீதத்தைப் பற்றியும், சங்கீதத்தில் வழங்கிவந்த 24, 48, 96 போன்ற நுட்ப சுருதிகளைப் பற்றியும், பின்னுள்ளோர் அதன் நுட்ப அறிவு இழந்து, சுரம், சுருதிகளைப்பற்றிச் சந்தேகங்கொண்டு, சுருதிகள் 22, 53 என்றும், சுருதிகள் அனந்தமென்றும் வாதாடும் பல முறைகளையும் கணக்கினால் அவை தவறென் றெடுத்துக்காட்டி, பூர்வ தென்தமிழ்நாட்டார் வழங்கிவந்த ஆயப்பாலை, வட்டப்பாலை, திரிகோணப்பாலை, சதுரப்பாலை என்னும் நால்வகைப் பாலைகளின் முறைப்படி எப்படிப் பாடினார்களென்பது பற்றியும் மிகத் தெளிவுறச் சொல்லியிருக்கிறேன். அது போலவே சுரம், சுருதிகளைக்கொண்டு கீதம், கீர்த்தனங்கள் முதலிய உருப்படிகள் எழுதுவதற்கு முக்கியமான விதிவகைகளையும் சொல்லவேண்டியது அவசியம் என்று எண்ணுகிறேன்.

பூர்வ தென் தமிழ் நாட்டார் வழங்கிவந்த பன்னீராயிரம் ஆதி இசைகளும் அல்லது இராகங்களும் வழக்கத்தி லில்லாமற் போனாலும், முக்கியமான இராகங்கள் நாளிது வரையும் வழங்கி வருகின்றன. ஆனால் அவைகளில் உருப்படிகள் பலவும் சிலரால் பேணப்பட்டு அதற்குரிய சில அங்கங்களோடு நாளிது வரையும் நிலைத்திருந்தாலும், முக்கிய அம்சமாகிய இராகங்களும் இராகங்களில் உருப்படிகள் உண்டாக்கும் முறையும் பல ஆயிர வருஷங்களுக்கு முன்பே மறைந்து போயிற்றென்று சொல்ல ஏது விருக்கிறது. இன்னும் உலகத்தவர் அறிந்துகொள்ளாத பல கலைகள் குற்றுயிராய் அனுபவ மிழந்து வழங்கி வருகின்றன. ஒவ்வொன்றும் மிகுந்த பிரயோஜன முடையதாயிருந்தாலும், மிகுந்த விரிவாகச் செய்வதற்குக் கைமுறை காட்டுவா ரில்லாமல் மறைந்து போயிருக்கிறதென்று நாம் விசனப்பட வேண்டியதா யிருக்கிறது.

சகல சித்தர்களும் ஆடும் வல்லபந்தரும் ரசமணியின் பெருமையைத் தற்காலத்தில் சொல்லவும்—அதைச் சேர்ந்த கற்பசித்தி, யோகசித்தி, வாதசித்தி முதலியவைகளைச் சொல்லவும், நினைக்கவும், கேட்கவும் இயலாத இக்காலத்தில்—அதைப்போன்ற மற்றும் கலைகளை நாம் சொல்லிப் பிரயோஜனமென்ன? அவைகள் குருபரம்பரையாய் முனிவர்களாலும், மகான்களாலும் காலாகாலத்தில் உலகத்தவருக்குக் காட்டப்பட்டதே யொழிய, அனுபவத்திற்கு வரும்படி கைமுறை காட்டப்படவில்லை. இதுபோலவே இசைத் தமிழின் உயிர் போன்ற இராகஞ்செய்யும் முறையும் இரகசியமாய்ப் பேணப்பட்டு காளடைவில் மறைந்து போயிற்றென்று சொல்லவேண்டும்.

பல வருஷங்களாகச் சங்கீத சாஸ்திரத்தை விசாரித்துவந்த நான் அதில் வழங்கிவரும் நுட்ப சுருதிகள் இன்னவென்றும், சுரங்களைப் பொருந்தும் முறையில் வைத்து இராகம், கீதம், கீர்த்தனங்கள் உண்டாக்கும் முறையும் தெரியாதவரையில் சங்கீதம் நிலைநிற்காமல் அழிந்துபோமென்றும், அவைகளைக் கண்டுபிடிக்காத வரையில் சங்கீத சாஸ்திரத்திற்கே இறுதி வருமென்றும் அறிந்தேன். அவைகளை மற்றும் தேர்ந்த சங்கீத வித்வான்களிடத்தில் பிரஸ்தாபித்தபோது அவர்கள் "இவருக்கு சங்கீதப் பைத்தியம் பிடித்தது" என்று ஏளனம் பண்ணினார்கள். அநேகர் என் அபிப்பிராயத்தை ஒப்புக் கொண்டாலும் தங்கள் கூடாமையை வெளியிட வெட்கிப் பரிகாசம் செய்தார்கள். சங்கீத சாஸ்திரம் என்றும் நிலைத்திருக்கும் வழியில் அதில் வழங்கி வரும் சுரம், சுருதிகளை அறியவாவது, அவைகளைப் பொருந்தும் முறையில் வைத்து இராகங்கள் உண்டாக்கும் முறையைக் காணவாவது, அவர்கள் விரும்பவுமில்லை; அவ்விருப்பம் மனதிற்கு வரவுமில்லை. அப்படியிருந்தாலும் இராகங்கள் கீர்த்தனங்

கள் உண்டாக்கும் முறை மிக மிக முக்கியமானதென்று தைரியங்கொண்டு இதை உலகத்திற்குச் சொல்ல முன்வந்தேன். இதை முக்கியமானதென்றும், இம் முறையொன்றில்லாமல் சங்கீத சாஸ்திரமே நிலைபெற்றிருக்கமாட்டாதென்றும், நான் அறிவது போலவே மற்றும் அறிவாளிகள் யாவரும் காண்பார்கள். அதோடு இகபர விஷயங்கள் யாவற்றிலும் ஆனந்தத்தைத் தரும்படியான சங்கீதம் யாவரும் தெரிந்துகொள்ளவேண்டிய ஒரு சாஸ்திரமாகும் என்று நான் திடங்கொண்டு சொல்லத் துணிந்தேன்.

இதன் முன்னுள்ளோர் மிகுந்த கஷ்டத்தோடு செய்துவைத்த பல கீதம், ஜதிஸ்வரம், சவுக்க வர்ணம், தான வர்ணம், பத வர்ணம், சாதாரண வர்ணம், பதம், கீர்த்தனம் முதலானவைகளும் தெய்வ அருளால் உண்டாக்கி வந்த இன்னும் பல உருப்படிகளும் உலகத்தில் உலாவிக் கொண்டிருக்கும் இக்காலத்தில், சங்கீதத்திற்கு உயிர்நிலை போன்ற ஒரு முறை பூர்வ முறைக்கு ஒருவாறு ஒத்திருக்கவேண்டுமே யொழிய விரோதகமா யிருக்கமாட்டாது. மேடு பள்ளம் நிரவாத பூமியில் வண்டிகள் ஓடுவதும், மேடு பள்ளம் நிரவி வண்டியின் பாரம் அழுந்தாத பாதையில் வண்டிகள் ஓடுவதும் எப்படி ஒன்றற்கொன்று இலகுவாயிருக்குமோ, அப்படிப்போல் இராகமுண்டாக்கும் சிறந்த விதிமுறைகள் ஒரு இராகம் உண்டாக்கும் விஷயத்தில் மிகுந்த பிரயோஜனமாயிருக்கும்.

பிரம்ம இரகசியம்போல் பேணப்பட்டுவந்த இம் முறை தெரிந்துகொள்ளும்பொழுது, சிறகுகள் முளைத்த பட்சிகள் ஆகாயத்தில் மிகுந்த உல்லாசமாய் உலாவுவது போலவும், ஆகாய விமானம் பெற்றவன் வானில் எளிதாய் உல்லாசமாகச் சஞ்சரிப்பது போலவும், சுஞானமுள்ள பலர் பல புதிது புதிதான இராகங்களையும், கீர்த்தனங்களையும் எளிதில் மகிழ்வாய்ப் படித்து மனதை ஆனந்தப்படுத்துவதை நாம் காணலாம். எவ்விதத்திலும் மேன்மை பொருந்தியதென்று கொண்டாடும் சங்கீத சாஸ்திரம் இந்தியாவில் மிகுந்த மேன்மை பொருந்தியதென்று நாம் பெருமையாய்ச் சொல்லிக்கொள்ளக்கூடியது; உலகத்திலுள்ள சங்கீத சாஸ்திரிகள் எவரும் கண்டுபிடிக்காதது; உலகத்திலுள்ள எவரும் சங்கீதத்தில் இம்முறையே உபயோகிக்கக்கூடியது; பிற்காலத்தில் வரும் எவ்வித தேர்ச்சிக்கும் மேலானது; பூர்வ தென் தமிழ்நாட்டார் வழங்கிவந்தது; வேறு எந்த பாஷையிலும், எந்த தேசத்திலும் வழங்கப்படாதது; தமிழ் மக்களால் இசைத் தமிழ் என்று பெருமையாய்ப் பேசிக்கொள்ளப்படுவது; தெய்வம் அதில் மிகுந்த பிரியமாயிருக்கிறதென்றும், அதனால் அநேக அடியார்களுக்கு அனுக்கிரகம் கிடைத்திருக்கிறதென்றும் சொல்லப்பெறும் தகுதியுள்ளது.

இப்படிப்பட்ட மேலான ஒரு விஷயத்தைச் சொல்ல எல்லாம் வல்ல இறைவன் அருளை முன்னிட்டு சிலவற்றைச் சொல்லத் துணிந்தேன். முன்னும் பின்னும் அறியாத நான் சொல்லியிருக்கும் முறைகளை ஆராய்ந்து நன்மையானவைகளை அனுபவத்திற்குக் கொண்டுவர அறிவுடைய பெரியோரை வணக்கமாய்க் கேட்டுக்கொள்ளுகிறேன். இம்முறை உலகத்தவர் யாவருக்கும் பிரயோஜனமா யிருக்கும்படி செய்யத் திருவருளைப் பிரார்த்திக்கின்றேன்.

இராகங்கள் உண்டாக்கும் இம்மேலான முறையைப் பலநாள் உழைப்பினால் தெய்வ உதவியைக் கொண்டு கண்டுபிடித்தேன் என்று நான் பெருமையாய்ச் சொல்லிக்கொள்ளக் கூடுமென்றாலும், இவைகள் யாவும் பூர்வமாய்த் தென் தமிழ்நாட்டார் வழங்கிவந்திருக்கிறார்களென்று பூர்வ நூல்களின் சிற்சில மேற்கோள்களைக்கொண்டு நான் அறியும்பொழுது பல்லாயிர வருஷங்களுக்கு முன்னால் மிகுந்த தேர்ச்சிபெற்று வழங்கி வந்த தமிழ் மக்களுக்கே இப்புகழ்ச்சி யுடையதென்று மனமார ஒப்புக்கொள்ளுகிறேன்.

இசைத் தமிழைப் பற்றிய பூர்வநூல்கள் இல்லாமற் போனாலும் அவைகளின் முக்கியமான அம்சங்களும் பெயர்களும் நூல் எழுதியவர்களுடைய பெயர்களும் தற்காலத்திலுள்ள தமிழ் மொழிப் புலவர்கள் ஞாபகத்தி லில்லாமற் போகவில்லை. இயல் இசை நாடக மென்னும் முத்தமிழிலும்

தேர்ச்சிபெற்று வழங்க வேண்டிய தமிழ் மக்கள் இசைத்தமிழும் நாடகத்தமிழும் மிகக் கடினமான தென்று தம் அனுபவத்திற்குக் கொண்டுவராமல் விட்டுவிட்டதன் நிமித்தம் இசைத் தமிழ் அதிக விளக்கம்பெறாமல் மறைந்தது. இது காரணத்தினால் இசைத் தமிழைப் பற்றிய இரகசியங்களும் இலக்கண விதிகளும் மறைந்து இசைத் தமிழில் சில கதைகளும், புராணங்களும், நீதி நூல்களும் மாத்திரம் உலகத்தில் பழக்கத்திற்கு வந்தன. இசைத் தமிழைப் பற்றி என்ன நூல்கள் செய்யப் பட்டிருக்கின்றனவென்றும் அந்நூல்களில் இன்னது சொல்லப்பட்டிருக்கிறதென்றும் தமிழ் மக்களில் சில புலவர் மாத்திரம் சொல்லிக்கொள்வார்களே யொழிய மற்றப்படி அனுபவத்திற்குச் செய்து காட்டக்கூடியவர்களல்லர். இயல் இசை நாடகமென்னும் முத்தமிழில் ஒன்றையாவது ஒருவர் பூர்ண மாகக் கற்று அதில் பூர்ண தேர்ச்சியுள்ளவரென்று சொல்ல இயலாத நிலையிலிருக்க, முத்தமிழிலும் தேர்ந்திருக்கிறோமென்ற சொல் வழக்கத்தில் மாத்திரம் வழங்கி வருகிறது.

நெடுநாள் பழக்கத்தி லிருந்த ஒன்று கால கதியினால் மறக்கப்பட்டு அனுபவ மில்லாமற் போனால் அது முற்றிலும் புதிதுபோல் திரும்ப வழக்கத்திற்கு வரல் வேண்டும்.

தமிழ் மக்களால் மிகச் சுலபமாகப் படிக்கப்படும் வெண்பாக்கள் மிகுந்த கணக்குடையவாய்—மிகுந்த கவனம் வைத்துச் செய்யக்கூடியவாய்—தகுந்த வித்வான்களால் மாத்திரம் பாடக்கூடியவா யிருக்கின்றன. அவைகளும், பாடும்பழக்கம் இருந்தாலொழிய மற்றப்படி முற்றிலும் மறக்கப்பட்டுத் திரும்பப் புதிதாக நம் பழக்கத்திற்கு வருவதை அனுபவத்தால் காண்கிறோம். அப்படியே இசைத் தமிழிலுள்ள இரகசியங்களும் வழக்கத்திற்கு வராமல் மறைந்து போகக் கூடியவைதாமே. இவைகளில் வெளிப்படையான சில உருப்படிகள் மாத்திரம் கடற்கரையில் ஒதுங்கிய சிப்பியின் ஓடுகள் போல் யாவர்கண்ணுக்கும் அகப்பட்டனவே யொழிய அருமையான முத்துக்கள் போன்றவை மறைந்து போயின.

இவைகளில் இசை பொருந்தும் முறை வைப்பு, பொருந்தா முறை, ஆளத்தி முறை வைப்பு (ஆலாபனம் செய்தல்), ஜீவ சுரம் (அமுத வைப்பு, பாடலமுதம்), பண்முறை வைப்பு (கீதம் அமைத்தல்), என்னும் ஐந்து முக்கிய முறைகளும் தமிழ் மக்களால் மறக்கப்பட்டுப் போயின. இவ்வைந்து முறைகளும் மறைந்தபின் சங்கீதத்திற்குப் புதிய உருப்படிகள் செய்யும் அனுகூலமில்லா மற் போனதோடு பழைய முறைகளும் தேசிகமாய்ப் பலராலும் மாற்றப்பட்டு 'தமிழர்களுக்கு சங்கீதம் ஏது' என்று சொல்லும்படியான நிலைக்கு வந்தது. இது மாத்திரமா! இரவல் வாங்கின இடத்தையே ஏது மறியாதவர்களென்று ஏளனம் செய்யும்படி யாயிற்று.

இசைத் தமிழின் மேன்மையை யறியாத பலர் அது முறைமையுடைய தல்லவென்றும், மற்றும் தேசத்தார் அதில் பொருத்தமும் கணக்கும் இல்லையென்று கலக்க முற்றாலும், அவைகளின் இரகசியமறிந்து சந்தேகம் தீர்த்துக்கொள்ள இயலாதவர்களாயும், சிறு உருப்படிகளைக் கேட்டு ஆனந்தித்து சந்தோஷப்படக் கூடியவர்களாயு மிருக்கிறார்களென்பது பிரத்தியட்சமா யிருக்கிறது. மேலும் இந்தியாவிலுள்ள சங்கீத வித்வான்கள் தங்கள் மனம்போன போக்கில் ஒரு இராகத்திற்குப் பொருந்தாத பல பிழைகளைக் கலந்து புதிது புதிதாய்ச் சேர்த்துக் கொண்டும் பாடிக்கொண்டு மிருப்பார்களானால், மற்றவர் ஏளனம் செய்யாமல் என்ன செய்வார்? மற்றவர்கள் சந்தேகத்தைத் தீர்க்கக்கூடிய சுருதிஞானமும் இவர்கள் அறியார்கள்; சுரங்களை வழுவின்றிச் சேர்த்து இராகம் உண்டாக்கு முறையையும் அறியார்கள். வீடு கட்டக்கூடிய தளவாடங்களும் கட்டும் முறையும் தெரியாத ஜீவப்பிராணிகள் குழிதானே தோண்டிக் கொள்ளவேண்டும். தெய்விக சக்தி வாய்ந்த மகான்களிருந்த இப்பரத கண்டத்தில் மிக மேன்மையாய் எண்ணப்பட்ட இசைத் தமிழ்—அல்லது சங்கீதத்தின் அடிப்படைகூட—இல்லாமல் அழிந்துபோவதைக் குறித்து மிக வருத்தப்படுகிறேன்.

அடிப்படையைத் தோண்டிக் கண்டுபிடித்து மறுபடி கட்ட நினைப்பது மிக அசாத்தியமான காரிய மென்று நான் நினைத்தாலும், மற்றவர் ஏளனம் செய்தாலும், அதை அனுசரிப்பது கடினமாயிருக் கிறதென்று விட்டுவிட்டாலும், அறிவுள்ளோர் கவனத்திற்கு வருமென்றே இராகம் செய்யும் முறை களை இங்கு எழுதுகிறேன்.

சங்கீதத்திற் குரிய முக்கிய அம்சங்கள் தற்காலத்தி லுள்ளவர்க்கு முற்றிலும் மறைந்து போனாலும், தங்களை மிகுந்த பாண்டித்திய முடையவர்க ளென்று தங்களுக்கே பொருள் தெரியாத சில சூத்திரங்களையும் வார்த்தைகளையும் பாடம்பண்ணி, வந்தவர்களை மிரட்டிவிடுகிற வித்துவான்களை நாம் காணலாம். இப்படிப்பட்ட புண்ணியவான்கள் உண்மையான காரியங்களையும் மறைத்துத் தங்கள் பொய்யே மெய்யாகும்படி செய்துகொண்டு வருகிறார்கள். தங்கள் அறியாமையை மறைக்கும்படி மற்ற வர்கள் அறிந்த உண்மைகளைத் தாங்கள் புதிதாய் அறிந்ததாகவும் செய்ததாகவும் பிரசங்கம் பண்ணு வார்கள்; புத்தகமும் போடுவார்கள். இதை நாம் ஒவ்வொருநாளும் பார்க்கிறோம். உலக உபகாரத் தின்பொருட்டு அல்ல; தங்கள் சுயநலத்தின் நிமித்தமே சில புத்தகங்கள் பிரசுரம் செய்து தங்களைப் பெருமையாகச் சொல்லிக்கொள்வார்கள். இப்பேர்ப்பட்டவர்கள் நான் சொல்லும் இம்முறையை குறைசொல்வார்க ளென்றாலும் நான் அதற்காக வருத்தப்படவில்லை. நீராவியினால் இயந்திரங்கள் ஓட்டப்படும் துவக்கத்தில் அதனால் எத்தனையோ கெடுதல்கள் உண்டாகும் என்று ஏளனம் செய்த ஜனங்களே நீராவி இயந்திரமின்றி உலகத்தில் எந்தக் காரியமும் சாதிக்கப்பட முடியாதென்று கொண் டாடுவதை நாம் பார்க்கிறோம்; அவர்கள் மாத்திரமல்ல, உலகத்தார் யாவரும் கொண்டாடும்படியாக உயர்ந்த நிலைக்கும் வந்திருக்கிறது. இதுபோலவே இராகங்கள் உண்டாக்கும் முறையும் இந்தியாவில் உள்ளோர் யாவரும் கைக்கொண்டு தங்கள் தங்கள் சங்கீதத்தை விருத்தி செய்துகொள்ளும்படியான அறிவைக் கொடுக்கத்தக்க மேலானது.

இம்முறையைப் பூர்வமுறைப்படி சொல்லச் சாஸ்திரப் பிரமாணம் முற்றிலும் கிடைப்பது அரிதாயிருந்தாலும் சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகள் சொல்லிய சில முக்கிய குறிப்புக்களைக் கொண்டும், என் சொந்த ஆராய்ச்சியின் முடிவைக்கொண்டும் சொல்லத் துணிந்தேன். இவைகள் ஒவ் வொன்றும் அனுபவத்திற்கு வரக்கூடியவைகளே. அனுபவத்திற்கு வராத கற்பனைகளை இங்கு ஒன்றும் சொல்லவில்லை. நம் தேசத்தவரும் மற்றும் உலகத்தாரும் கண்டு தங்கள் அனுபவத் திற்குக் கொண்டுவருவதற்காகவே மிகத் தெளிவாகச் சொல்லியிருக்கிறேன். அறிவுடையோர் கவனித்து ஆனந்தமடைவார் என்பது நிச்சயம்.

தென்னிந்தியாவின் பூர்வ தமிழ்மக்கள் சங்கீதத்தில் மிகுந்த தேர்ச்சிபெற் றிருந்தார்கள் என்றும், சங்கீதத்திற் குரிய முக்கிய விஷயங்களை உலகத்தார் அறிந்துகொள்வதற்கு வெகு காலம் முன்னரே அறிந்திருந்தார்க ளென்றும், இயல், இசை, நாடகம் என்று வழங்கி வந்த தமிழ்மொழியே முன்மொழியாய் இருந்திருக்க வேண்டுமென்றும் அறிவார்கள். இராகம் எழுத உதவியா யிருக்கும் குறிப்புக்களைக் கருணாமிர்தசாகரம் முதற் புத்தகமாகிய போற்கடகத்தில் தெளிவுறச் சொல்லி யிருக்கிறேன்.

## இராக இலட்சணங்களைக் கண்டுகொள்வதற்கு அனுகூலமாயிருக்கும் சில ஆதார விதிகள்.

பொன்னெனச் சிறந்து விளங்கும் இப்புது விதியை நான் சொல்லுமுன் இவைகளில் சொல்லப்படும் விஷயம் இன்னவென்று கூறுதல் வேண்டும்.

1. சுரங்கள் ஒன்றோ டொன்று பொருந்து முறை.
2. சுரங்கள் ஒன்றோ டொன்று பொருந்தா முறை.

3. சுரங்கள் ஒன்றோடொன்று பொருந்துமுறையில் ஜீவ சுரம் (அமுதசுரவைப்பு பாடலமுதம்) முதலானவைகள் கண்டுபிடிக்கும் முறை.

4. ஜீவசுரம் கண்டுபிடித்த பின் ஆளத்தி செய்யு முறை அல்லது ஆலாபனம் செய்யு முறை.

5. பண்ணமைக்கு முறை.

பூர்வ தமிழ்மக்கள் இசைத் தமிழில் வழங்கிவந்த சுரப்பொருத்த முறைகளே நமக்கு இங்கே அதிக உபயோகமானவை. குரல் இளி (ச. ப முறை) கிரமத்திலே சுரங்கள் எல்லாம் கண்டு பிடித்தார்கள் என்பது தெரிகிறது. அதாவது, ஷட்ஜ பஞ்சம முறையாக “வண்ணப்பட்டடை யாழ் மேல் வைத்தாங்கு” என்பதினால் ஷட்ஜத்திற்கு பஞ்சமம், அதன்பின் பஞ்சமத்தை ஷட்ஜமாக வைத்துக்கொண்டு அதற்குப் பஞ்சமம், இப்படி முறையே ஷட்ஜ பஞ்சம முறையாகச் சுரங்கள்யாவும் கண்டுபிடித்தார்கள். அதில் கண்டுபிடிக்கும் வாக்கியமும் “ஏற்றிய குரலிளி என்றிரு நரம்பின்-ஒப்பக்கேட்கும் உணர்வினனாகி” என்பதினால் சுருதி சேர்க்கும் வித்வான் யாழிலும் குழலிலும் தண்ணுமையிலும் (மிருதங்கம்) மற்றும் வாத்தியக் கருவிகளிலும் சுருதி அணுவளவும் பிசகாமல் சேர்த்துக்கொண்டு பாடக்கூடிய வல்லபனா யிருந்தானென்று அறிகிறோம்.

அப்படியே நாளிது வரையிலும் அனுபவத்தி லிருக்கிறது. சுருதி சேராத வாத்தியத்தைச் சங்கீதம் படிப்போர் துணையாகக் கொள்வதில்லை. “பண்ணமையா யாழின்கீழ்ப் பாடல் பெரிதின்னா” என்பதினால் சுருதி சேராத வாத்தியத்தை ஒரு பெரிய துன்பம் விளைவிப்பதாக நினைத்தார்கள். அதுபோலவே அபசுரம் பேசும் கருவிகளாலும் வித்வான்கள் பாடும் அபசுரங்களாலும் சில அனர்த்தங்களும் கெட்ட பலனும் உண்டாவது நிச்சயம் என்று காட்ட மானிட உருவாயிருந்த கற்சிலைகளும் உருண்டு விழுந்து கை வேறு கால் வேறாக உடைந்தன வென்று பாரம்பரையாய்ச் சொல்லிக்கொள்ளப் படுகிறது. அது தவிர அபசுரமானது ஓசையின் இனிமையைக் கெடுத்து, தெளிந்த மனதையும் கலக்கி விகாரப்படுத்தும். வீணையையாவது தம்புருவையாவது சரியாகச் சுருதி சேர்த்து மீட்டுவோமானால் அவ்வினிய ஓசை யொன்றே மனதைச் சாந்தப்படுத்தி நிஷ்டை கூடுவிக்கும் நிலைக்குக் கொண்டுவரும் என்பது உண்மை. இவ்வனுபவம் தெரிந்த பூர்வ தமிழ்மக்கள் ஷட்ஜ பஞ்சமம் ஓசையில் ஒன்று சேர்ந்து பேதப்படாமல் இனிமையா யிருப்பதைக் காதினால் தெளிவாகக் கேட்டு உணரக்கூடிய உணர்ச்சி யுடையவர்களாய் இருக்கவேண்டு மென்று வற்புறுத்திச் சொல்லுகிறார்கள். ஷட்ஜ பஞ்சம முறையாய்ப் பன்னிரண்டு சுரங்கள் பிறப்பதைத் தெளிவுற அறிவதே சங்கீத சாஸ்திரத்திற்கு ஆதாரமாம். இவைகளில் 7-வது 7-வதாக (ஷட்ஜ பஞ்சமமாக) 5-வது 5-வதாக (ஷட்ஜ மத்திமமாக) சுரங்கள் பிறப்பதைச் சங்கீத வித்வான்கள் யாவரும் நன்கறிவார்கள்.

“வரன்முறை மருங்கின் ஐந்தினு மேழினும்
உழைமுத லாகவும் உழையீ றாகவும்
குரல்முத லாகவும் குரலீ றாகவும்”

என்பதினால் ஒரு ஸ்தாயியில் வரும் 12 சுரங்களும் சம அளவுள்ள ஓசையுடையவைகளாய் வருகின்றன என்று காண்கிறோம்.

பூர்வ தமிழ்மக்கள் ஒரு இராசி வட்டத்தை (ஸ்தாயி) பன்னிரு கூறாகப் பிரித்து ச–ப, ச–ம, முறையாகப் பன்னிரண்டு சுரங்கள் கண்டுபிடித்து அம்முறையை ஆயப்பாலை யென்றும், அதில் பன்னிரண்டாவது இராசியில் நின்ற ரிஷபத்தையும், நான்காவது இராசியில் நின்ற காந்தாரத்தையும், ஐந்தாவது ராசியில் நின்ற மத்திமத்தையும், ஏழாவது ராசியில் நின்ற பஞ்சமத்தையும்,

ஒன்பதாவது ராசியில் நின்ற தைவதத்தையும், பதினொன்றாவது ராசியில் நின்ற நிஷாதத்தையும், பன்னிரண்டாவது ராசியில் நின்ற ஷட்ஜத்தையும் சேர்த்து ஏழு சுரங்களில் ஒரு ஆரோகண அவரோகணம் உண்டாக்கி செம்பாலைப் பண் (தீரசங்கராபரணம்) என்றும் வழங்கி வந்திருக்கிறார்கள். செம்பாலைப் பண்ணின் முறையில் தொட்ட சுரத்திற்கு அடுத்த சுரம் இரண்டு ராசியுடையதாகவும், அதற்கடுத்த சுரம் இரண்டு ராசியுடையதாகவும், நான்காவது சுரம் ஒரு ராசி இடைவெளி யுள்ளதாகவும், ஐந்தாவது சுரம் இரண்டு ராசி இடைவெளி யுள்ளதாகவும், ஆறாவது சுரம் இரண்டு ராசி இடைவெளி யுள்ளதாகவும், ஏழாவது சுரம் இரண்டு ராசி இடைவெளி யுள்ளதாகவும் வருமென்றும், இதையே நாம் தற்காலத்தில் சதுர்சுருதி ரிஷபம், அந்தர காந்தாரம், சுத்த மத்திமம், பஞ்சமம், சதுர்சுருதி தைவதம், காகலி நிஷாதம், தார ஷட்ஜம் உள்ள தீர சங்கராபரணம் என்றும் வழங்குகிறோம். இவைகள் முறையே 2, 2, 2, 1, 2, 2, 1 இந்த ராசியில் நிற்கின்றன. ஒரு இராசியில் நின்ற சுரம் ஒரு இராசிக்கு இரண்டு அலகாக அல்லது இரண்டு சுருதியாகக் கணக்கிடப்பட்டு முற்காலத்தில் வழக்கத்தி லிருந்ததாகவும், தற்காலத்தில் 72 மேளகர்த்தா முறையில் வழங்கிவருகிறதாகவும், ஒரு ஸ்தாயியை 12 சம அளவாகப் பிரித்து அவைகளில் 7 சுரங்கள் வரவேண்டிய இடத்தையும் அவைகளைக் கிரகம் மாற்றும்பொழுது உண்டாகும் அளவிறந்த இராக பேதங்களையும், அதோடு கிரகங்கள் நட்பு ஆட்சி உச்சம் திரிகோணம் நீசம் பகை முதலிய இடங்களுடைய பலன் வெவ்வேறாவதுபோலச் சங்கீதத்தில் வழங்கிவரும் 7 சுரங்களும் இணை, கிளை, நட்பு, பகை என்ற இடங்களின் பேதம் பெற்றும் வழங்கிவருகின்றன.

ஒரு ஸ்தாயியில் ஒன்று இரண்டாய் ஆரம்பித்த சுரங்கள் பன்னிரண்டாம் இடமாகிய மேரு ஸ்தானத்தில் லயத்தை அடைகிறது. இப்படியே எந்த இராசியைத் தொட்டாலும் அதற்குப் பன்னிரண்டாம் இடம் மோட்சஸ்தானம் என்று நாம் அறியவேண்டும்.

மோட்ச ஸ்தானத்தில் நிற்கும் சுரத்தின்மேல் ஏழாமிடத்தில் இணைச் சுரம் நிற்கும்; இந்த ஏழாமிடத்திற்குமேல் வரும் ஏழாமிடமும், அதற்கு களத்திர ஸ்தானம்.

ஷட்ஜத்தின்மேல் ஆறாவது இடம் சத்துரு ஸ்தானமாம். இதிலுள்ள உழையின் நாலாவது அலகும், துத்தத்தின் இரண்டாவது அலகும், குரல் இளியோடு பொருந்தாமல் துன்பம் தருவதால் இதைச் சத்துரு ஸ்தானம் என்பர். ஷட்ஜத்திற்குப் பகையாயுள்ள அல்லது தொட்ட சுரத்திற்கு ஆறாவதாயுள்ள சுரங்கள் பண்ணோடு சேராமல் துன்பம் செய்யும்.

மேருவில் நின்ற குரலுக்கு ஐந்தாம் ராசியில் நின்ற சுரங்கள் புத்திர ஸ்தானத்தில் நிற்கிறதாகக் காண்போம். ஐந்தாமிடத்தைப் புத்திர ஸ்தானம் என்று சொல்வதுபோல் அவ்விடத்தில் நின்ற சுரத்தை கிளைச்சுரம் என்பர். மரத்தினின்று கிளைகள் உண்டாவது போல ஷட்ஜத்தினின்று வேறு ஷட்ஜம் பிறப்பதினால் இதனைக் கிளைச்சுரமென்றும் புத்திர சுரமென்றும் சொல்வது மிகப் பொருத்தமானதே.

மேருவுக்குமேல் நாலாமிடத்தில் நட்புச் சுரம் நிற்கும் என்கிறார். இந்நட்புச் சுரத்தைக் கவனிப்போமானால் நாலாமிடத்தை மாதுர் ஸ்தானம் என்றும் வித்தியா ஸ்தானமென்றும் வாகன ஸ்தானம் என்றும் சொல்வது வழக்கம். அப்படியே மேருவில் தோன்றிய ஷட்ஜத்திற்கு மாதுர் ஸ்தானம்போல் கைக்கிளை நிற்கிறது. இதன் கீழுள்ள மூன்றாவது ஸ்தானம் வீரிய ஸ்தானம் என்றும் சகோதர ஸ்தானம் என்றும் சொல்லப்படுகிறது. ஷட்ஜத்திற்கு மூன்றாமிடத்தில் வரும் கைக்கிளையைப் பகையென்றார். இரண்டாமிடத்தைத் தன் குடும்ப நேத்திர ஸ்தானம் என்று சோதிட முறையில் சொல்வதுபோல் இந்தச் சுரம் ஷட்ஜத்திற்கு நேத்திரம்போ லிருக்கிறது. பன்னிரண்டாமிடத்திற்குப் பக்கத்திலுள்ள முதலாமிடமும் அதிக முக்கிய மில்லாத பொது ஸ்தானம்போல் தோன்றுகிறது.

ஏழாமிடத்திற்கு மேலுள்ள எட்டாமிடம் மரண ஸ்தானம். மேருவினின்ற ஷட்ஜத்திற்கு எட்டாம் இடத்திலுள்ள விளரி பொருந்தாதாம். ஒன்பதாம் இடத்தைக்கொண்டு பிதுர் குரு அருள் செல்வம் முதலானவைகள் சொல்லலாமென்ற முறைப்படி ஷட்ஜத்திற்கு ஒன்பதாம் இடத்திலுள்ள 4 அலகு விளரி பிதுர் ஸ்தானம் போல் விளங்குகிறது.

பத்தாமிடத்தைக்கொண்டு கர்மம் ஜீவனம் முதலானவைகள் சொல்வதுபோல் ஷட்ஜத்திற்கு மேலுள்ள பத்தாமிடத்தில் 2 அலகுள்ள நிஷாதம் இருக்கிறது.

பதினோராமிடம் முதலாமிடத்தைப் போலவே ஆயஸ்தானமாய் நிற்கிறது. இதை லாப ஸ்தானமென்று சொல்லுகிறோம்.

மூன்றும் ராசியாகிய சிம்மமும், 6-ம் ராசியாகிய விருச்சிகமும், எட்டாம் ராசியாகிய மகரமும், 10-ம் ராசியாகிய மீனமும் பகைக்ஷேத்திரங்களாகச் சொல்லப்படுகின்றன. இதுபோலவே 3, 6, 8, 10-ல் வரும் சுரங்கள் பகைபெற்று நிற்பதையும் காணலாம். சுபர்கள் 4, 7 என்ற கேந்திரங்களிலும் 5, 9 என்கிற திரிகோணங்களிலும் நின்றால் உத்தமம்.

எல்லாக்கிரகங்களும் 5, 9-க்கு அதிபரானால் அவர் பாவியா யிருந்தாலும் சுபராயிருந்தாலும் நல்ல பலனைக் கொடுப்பர். 3, 6, 8-க்கு அதிபராக வரும் கிரகங்கள் துன்பப்பலனைக் கொடுப்பன. எல்லாக் கிரகங்களும் தாங்கள் நிற்கு மிடத்திற்கு 7-ம் இடத்தைப் பார்க்கும்.

எப்படி ஒரு மனிதன் 2-தன் குடும்பத்தோடும், 4-மாதாவோடும், 5-மக்களோடும், 7-மனையாளோடும், 9-தந்தையோடும், 11-தன லாபத்தோடும், 12-தன் வீட்டாரோடும் பொருந்தி நிற்பானோ அப்படியே ஆரம்ப சுரம் தனக்குப் பின்வரும் ரி-க-ம-ப-த-நி என்னும் சுரங்களோடு பொருந்தி நிற்பதாகக் காண்போம்.

எப்படியெனில் 12-ம் இடத்தில் நின்ற ஷட்ஜம் 2-ம் இடத்திலுள்ள 4 அலகுள்ள இடபத்தோடும், 4-ம் இடத்தில் 4 அலகுள்ள காந்தாரத்தோடும், 5-ம் இடத்தில் 2 அலகுள்ள மத்திமத்தோடும், 7-ம் இடத்தில் பஞ்சமத் தோடும், 9-ம் இடத்தில் 4 அலகுள்ள தைவதத்தோடும், 11-ம் இடத்திலுள்ள 4 அலகுள்ள நிஷாதத்தோடும் பொருந்தி நிற்கக் காண்கிறோம்.

குரலே குரலாக ஆரம்பிக்கும்போது உண்டாகும் செம்பாலைப் பண்ணின் 7 சுரங்களை 2, 4, 5, 7, 9, 11, 12 முதலிய ராசிகளில் நிற்கும் சுரங்களாகக் காண்போம். 1, 3, 6, 8, 10 முதலிய இடங்களில் வரும் சுரங்கள் செம்பாலைப் பண் அல்லது தீரசங்கராபரணத்திற்குப் பகைச் சுரங்கள் என்றும் அவைகள் முற்றிலும் விலக்கப்படவேண்டும் என்றும் சொல்லியிருக்கிறார்கள். ஒரு இராசிச் சக்கரத்தில் 2, 4, 5, 7, 9, 11, 12 முதலிய இடங்கள் சுபஸ்தானங்கள் என்றும், 3, 6, 8, 10 முதலிய இடங்கள் பகைஸ்தானங்கள் என்றும் சோதிட சாஸ்திரத்தில் சொல்லியிருப்பதுபோல் சங்கீத சாஸ்திரத்திலும் சொல்லியிருக்கிறார்கள்.

அந்தந்த இராகங்களின் சுர இடைவெளிகள் செம்பாலைப்பண் அல்லது தீரசங்கராபரண ராகத்தின் சுர இடைவெளிகளாக வருவதினால் சங்கராபரணத்தின் இடைவெளிப் பொருத்தம் மற்ற எல்லா இராகங்களில் வரும் சுரங்களுக்கும் பொருத்தமாகும். கிரகம் மாற்றும்பொழுது சுரஸ்தானங்களும் மாறுவதினால் இராகங்கள் மாறுமே யொழிய செம்பாலைப் பண்ணுக்குரிய பொதுவிதி அணுவளவேனும் மாறாது.

கர்நாடக ராகம் ஒவ்வொன்றும் சிறந்த இலக்கண முடையதாக இருப்பதால் அவ்விராகங்கள் விசேஷ ரசமும் அமைப்பும் உடையனவாய்க் காணப்படுகின்றன. இவ்வமைப்பிற்கு இசைத் தமிழிற் சிறந்த நம் முன்னோர் அமைத்து வழங்கிவந்த சில விதிவிலக்குகளே காரணமாகும். சிலப்பதிகாரத்திலும் கல்லாடத்திலும் இவ்விஷயத்தைப்பற்றிச் சில வரிகள் சொல்லப்பட்டிருக்கின்றன :—

" இணைகிளை பகைநட்பென்றிந் நான்கி
னிசைபுணர் குறிநிலை யெய்த நோக்கி "

இணை கிளை பகை நட்பென்று சொல்லப்பட்ட நான்கினும் இணை - இரண்டு நரம்பு, என்னை ?

" இணை யெனப்படுவது கிழு மேலு
மணையத் தோன்று மளவின வென்ப"

கிளை - ஐந்து நரம்பு; என்னை ?

" கிளையெனப் படுவ கிளக்குங் காலை
குரலே இளியே துத்தம் விளரி
கைக்கிளை யெனவைந் தாகு மென்ப"

வரன்முறையாவது முன் கூறின வகையே ஐந்தா நரம்பா முறைமையின் இளிகுரலாக ஏழு நரம்பும் வாசித்தானென்க. குரல் குரலாகவும் குரல் தாரமாகவும் வாசித்தானென்ற வரலாறு :—

" பகை ஆறும் மூன்றும்,
நின்ற நரம்பிற் காறு மூன்றும்
சென்று பெற நிற்பது கூடமாகும்"

கூடமெனினும் பகையெனினும் ஒக்கும். நட்பு நாலாம் நரம்பு ; கிளை ஐந்தாம் நரம்பென்றும் பகை ஆறும் நரம்பென்றும் பிரதி பேதமுண்டு.

இவைகள் சிலப்பதிகாரத்தில் சொல்லப்படுகின்றன. மேலும் கல்லாடத்திலும் இசை இலக்கணத்தைப் பற்றிச் சொல்லியிருப்பதைக் காணலாம்.

" உறவிணை நட்புக்கிளை வியப்பெய்த
முகின்முழ வதிரவேழிசை முகக்க"

(ப-ரை) உறவு - பகை நரம்பின்றி யுறவா நரம்பும் - இணை - இணையா நரம்பும், நட்பு - நட்பா நரம்பும், கிளை - கிளையா நரம்பும், வியப்பு எய்த - அதிசயம் பெற, ஏழிசை முகக்கும் - இசையேழும் பொருந்தும்.

(வி-ரை) " ஏழாம் நரம்பிணை நாலு நட்பாகு,
மைந்துகிளை யாறு மூன்றும் பகையே "
என்றாரிசை மரபுடையார்.

பூர்வகாலத்தில் கர்நாடக சங்கீதத்தில் இராகங்கள் பாடும்பொழுது இணை, கிளை, பகை, நட்பு, சுரங்களின் பொருத்தம் ஆராய்ந்து ச - க, ச - ம, ச - ப போல் ஓசையில் பொருந்திவரும் முக்கிய அம்சங்களைக் கவனித்துப் பாடினார்களென்றும் காண்கிறோம். இவைகளைப்பற்றி போற் கடகத்தில் தெளிவாகச் சொல்லியிருக்கிறேன்.

இகபர விஷயங்கள் யாவற்றிலும் ஆனந்தத்தைத் தரும்படியான சங்கீதம் யாவரும் தெரிந்து கொள்ளவேண்டிய சாஸ்திரங்கள் எல்லாவற்றிலும் மேலான சாஸ்திரம். தமிழ் நாட்டார்தங்கள் மனோ பாவப்படி பெரிதாகவும் சிறிதாகவும் ஸ்புடக் கணக்கினால் புதிது புதிதாகக் கீதம், கீர்த்தனங்கள், பதங்கள், வர்ணங்கள் முதலானவைகள் உண்டுபண்ணி இராகங்களின் போக்கை யறிந்து சாகித்தியங்கள் செய்து அதைப் பாடி ஆனந்தித்து அதனால் அதிகப் பிரயோஜனமும் நன்மையும் அடையத் திருவருளைப் பிரார்த்திக்கிறேன்.

ஒரு இராகத்தில் கீதம், கீர்த்தனம் எழுதுகிறதற்கு முன்னதாக அந்த இராகம் எந்த மேளக்கர்த்தா அல்லது எந்த மேளக்கர்த்தாவில் ஜன்யமானதென்று தெரிந்து அதன் ஆரோகண அவரோகணத்தை அறிந்து, அவ்விராகத்தின் சுருதியையும் குறித்துக்கொண்டு, ஸ்புடம் செய்து கொள்ள வேண்டும். சுருதிகளை யாவரும் எளிதில் தெரிந்துகொள்ள பின்வரும் அட்டவணைகளைக் கொடுத்திருக்கிறேன்.

## பிரம்மவீணை என்ற பிரம்ம மேளத்தில் காணப்படும் சுரங்களின் பெயரும் விக்ருதி சுரங்களின் பெயரும்.

| செம்பாலைப் பண்ணின் சுரங்கள். | ஆயப்பாலை சுரங்கள். | தற்காலம் வழங்கும் பெயர். | வட்டப்பாலை சுரங்கள். | பிரம்ம மேளத்தின் சுருதிகளின் பெயர் |
|---|---|---|---|---|
| | | | 1 | பிரதி சுத்த ரிஷபம். ரி$^{1}$ |
| | 1 | சுத்த ரிஷபம் ரி$^{2}$ | 2<br>3 | பிரதி சதுர்ச்ருதி ரிஷபம் ரி$^{3}$ அல்லது பிரதி சுத்த காந்தாரம். க$^{1}$ |
| ரி$^{4}$ | 2 | சதுர்ச்ருதி ரிஷபம் ரி$^{4}$ ,அல்லது சுத்த காந்தாரம். க$^{2}$ | 4<br>5 | பிரதி சட்சுருதி ரிஷபம் ரி$^{5}$ அல்லது பிரதி சாதாரண காந்தாரம். க$^{3}$ |
| | 3 | சட்சுருதி ரிஷபம் ரி$^{6}$ அல்லது சாதாரண காந்தாரம். க$^{4}$ | 6<br>7 | சுத காந்தார ரிஷபம் ரி$^{7}$ அல்லது பிரதி அந்தர காந்தாரம். க$^{5}$ |
| க$^{6}$ | 4 | அந்தர காந்தாரம். க$^{6}$ | 8<br>9 | சுத மத்திமம் ம$^{1}$ அல்லது சுத மத்திம காந்தாரம். க$^{7}$ |
| ம$^{2}$ | 5 | சுத்த மத்திமம். ம$^{2}$ | 10<br>11 | அப்பிரதி மத்திமம். ம$^{3}$ |
| | 6 | பிரதிமத்திமம். ம$^{4}$ | 12<br>13 | சுத பஞ்சம மத்திமம் ம$^{5}$ அல்லது சுத பஞ்சமம். |
| ப | 7 | பஞ்சமம். | 14<br>15 | பிரதி சுத்த தைவதம் த$^{1}$ |
| | 8 | சுத்த தைவதம். த$^{2}$ | 16<br>17 | பிரதி சதுர் சுருதி தைவதம் த$^{3}$ அல்லது பிரதி சுத்த நிஷாதம் நி$^{1}$ |
| த$^{4}$ | 9 | சதுர்சுருதி தைவதம் த$^{4}$ அல்லது சுத்த நிஷாதம். நி$^{2}$ | 18<br>19 | பிரதி சட்சுருதி தைவதம் த$^{5}$ அல்லது பிரதிகைசிக நிஷாதம். நி$^{3}$ |
| | 10 | சட்சுருதி தைவதம் த$^{6}$ அல்லது கைசிக நிஷாதம். நி$^{4}$ | 20<br>21 | சுத நிஷாத தைவதம் த$^{7}$ அல்லது பிரதி காகலி நிஷாதம். நி$^{5}$ |
| நி$^{6}$ | 11 | காகலி நிஷாதம். நி$^{6}$ | 22<br>23 | சுத சட்ஜ நிஷாதம் நி$^{7}$ அல்லது சுத சட்ஜம் |
| ச | 12 | சேத சட்ஜம். | 24 | |

## வட்டப்பாலையின் 24 அலகுகளின் பெயரும் விக்ருதி சுரங்களின் பெயரும்.

| செம்பாலைப் பண்ணின் சுரங்கள். | ஆயப்பாலை சுரங்கள். | தற்காலம் வழங்கும் பெயர். | வட்டப்பாலையின் சுரங்கள். | 24 சுருதிகளின் பெயர். | அலகுகளின் பெயர். |
|---|---|---|---|---|---|
| | | | 1 | ஏக சுருதி ரிஷபம் ரி$^{1}$ | 1 அலகு ரி துத்தம் |
| | 1 | சுத்த ரிஷபம் ரி$^{2}$ | 2 | | 2 அலகு ரி ,, |
| | | | 3 | திஸ்சருதி ரிஷபம் ரி$^{3}$ அல்லது ஏகஸ்ருதி காந்தாரம் க$^{1}$ | 3 அலகு ரி அல்லது 1 அலகு க கைக்கிளை |
| ரி$^{4}$ | 2 | சதுர்சுருதி ரிஷபம் ரி$^{4}$ அல்லது சுத்த காந்தாரம் க$^{2}$ | 4 | | 4 அலகு ரி அல்லது 2 அலகு க ,, |
| | | | 5 | பஞ்ச சுருதி ரிஷபம் ரி$^{5}$ அல்லது திஸ் சுருதி காந்தாரம் க$^{3}$ | 5 அலகு ரி அல்லது 3 அலகு க ,, |
| | 3 | சட்சுருதி ரிஷபம் ரி$^{6}$ அல்லது சாதாரண காந்தாரம் க$^{4}$ | 6 | | 6 அலகு ரி அல்லது 4 அலகு க ,, |
| | | | 7 | சுதகாந்தார ரிஷபம் ரி$^{7}$ அல்லது பஞ்ச சுருதி காந்தாரம் க$^{5}$ | 7 அலகு ரி அல்லது 5 அலகு க ,, |
| க$^{6}$ | 4 | அந்தர காந்தாரம் க$^{6}$ | 8 | | 6 அலகு க |
| | | | 9 | சுதமத்திமம் ம$^{1}$ அல்லது சுதமத்திம காந்தாரம் க$^{7}$ | 7 அலகு க அல்லது 1 அலகு ம [உழை |
| ம$^{2}$ | 5 | சுத்தமத்திமம் ம$^{2}$ | 10 | | 2 அலகு ம |
| | | | 11 | திஸ்சுருதி மத்திமம் ம$^{3}$ | 3 அலகு ம |
| | 6 | பிரதி மத்திமம் ம$^{4}$ | 12 | | 4 அலகு ம |
| | | | 13 | சுத பஞ்சம மத்திமம் ம$^{5}$ அல்லது சுத பஞ்சமம் | 5 அலகு ம அல்லது 1 அலகு ப |
| ப | 7 | பஞ்சமம் அல்லது நேதபஞ்சமம் | 14 | | ப அல்லது இளி |
| | | | 15 | ஏக சுருதி தைவதம் த$^{1}$ | 1 அலகு த விளரி |
| | 8 | சுத்த தைவதம் த$^{2}$ | 16 | | 2 அலகு த |
| | | | 17 | திஸ்சுருதி தைவதம் த$^{3}$ அல்லது ஏக சுருதி நிஷாதம் நி$^{1}$ | 3 அலகு த அல்லது 1 அலகு நி தாரம் |
| த$^{4}$ | 9 | சதுர் சுருதி தைவதம் த$^{4}$ அல்லது சுத்த நிஷாதம் நி$^{2}$ | 18 | | 4 அலகு த அல்லது 2 அலகு நி |
| | | | 19 | பஞ்ச சுருதிதைவதம் த$^{5}$ அல்லது திஸ் சுருதி நிஷாதம் நி$^{3}$ | 5 அலகு த அல்லது 3 அலகு நி |
| | 10 | சட்சுருதி தைவதம் த$^{6}$ அல்லது கைசிக நிஷாதம் நி$^{4}$ | 20 | | 6 அலகு த அல்லது 4 அலகு நி |
| | | | 21 | சுத நிஷாத தைவதம் த$^{7}$ அல்லது பஞ்ச சுருதி நிஷாதம் நி$^{5}$ | 7 அலகு த அல்லது 5 அலகு நி |
| நி$^{6}$ | 11 | காகலி நிஷாதம் நி$^{6}$ | 22 | | 6 அலகு நி |
| | | | 23 | சுத சட்ஜ நிஷாதம் நி$^{7}$ அல்லது சுத சட்ஜம் | 7 அலகு நி அல்லது 1 அலகு ச |
| | 12 | சட்ஜம் அல்லது நேத சட்ஜம் | 24 | | ச அல்லது குரல் |

மேற்கண்ட அட்டவணையைத் திருநெல்வேலி மணியாச்சி ஜமீன் மானேஜராயிருந்த மகா-ள-ள-ஸ்ரீ வேங்கடசுப்பையரிடமிருந்து அரிகேசவநல்லூர் ஸ்ரீ முத்தையா பாகவதர் அவர்களால் கிடைக்கப் பெற்றேன்.

இதைப்போலொத்த இரண்டு சுவடிகளும் தஞ்சாவூரி லிருக்கின்றன. இப் புத்தகங்களில் சொல்லப்படும் பிரம்ம மேளத்தின் 4624 ராகங்களில் ஆயிரத்துச் சொச்சம் ராகங்களுக்கு இலட்சண சூத்திரங்கள் சொல்லிவரும் 'மேளாதிகார லக்ஷணம்' என்னும் புத்தகத்தையும் தஞ்சாவூர் அரண்மனை சரஸ்வதி மஹாலில் இன்றும் காணலாம்.

மேற்காட்டிய அட்டவணைகளை நாம் நன்கு கவனித்தால் செம்பாலைப்பண் அல்லது தீர சங்கராபரணத்தில் வரும் சுரங்களும், ஆயப்பாலையின் பன்னிரு சுரங்களும், அவைகளின் பெயர்களும், விக்ருதி சுரங்களின் பெயர்களும், அவைகள் நிற்கும் இடங்களும், வட்டப்பாலையில் வழங்கி வந்த 24 அலகுகளின் பெயர்களும், விக்ருதி ஸ்வரங்களின் பெயர்களும், அவைகள் நிற்கும் இடங்களும் நன்றாகத் தெரிந்துகொள்ளலாம்.

## ஸ்புடம் செய்யும் விதம் அல்லது இசை இலக்கணத்தைக் கொண்டு ஒரு இராகத்தை ஸ்புடமிடுதல்.

1. சப்த சுரங்களில் ஷட்ஜத்திற்கு—ரி, க, ம, ப, போல் ஓசையில் பொருந்தி வரும் சுரங்களுக்குப் பொருத்தமுள்ள சுரங்கள் என்று பெயர்.

2. இவைகளுக்கு முறையே உத்தமம், மத்திமம், அதமம் என்று பெயர் வரும்.

3. இவைகள் பெரும்பாலும் தொடங்கின சுரத்திற்கு இரண்டாவது மூன்றாவது நான்காவது ஐந்தாவது சுரங்களாக வரும்.

4. முதலாவது ஏழாவது சக்கரங்களில் ஆரோகணத்தில் ப த நி ச ரி க, அவரோகணத்தில் க ரி ச நி த ப என்பதுபோல் சில இடங்களில் ஆறாவது சுரமும் பொருத்தமாக வரும். உதாரணம்-முதலாவது தாய் இராகமாகிய கனகாங்கி இராகத்தில் ப த நி ச ரி க என்ற இடத்தில் இரண்டு அலகு க, 4 அலகு ரி யினிடத்தில் வருவதால் அவை பொருத்தமாகும்.

5. துவக்கும் சுரத்திற்கும் முடிக்கும் சுரத்திற்கும் பொருத்தமில்லாத தொகுதிகள் இன்னவென்றும், பொருத்தமுள்ள தொகுதிகள் இன்னவென்றும் சுருதியின்படி கண்டெழுதுவதற்கு ஸ்புடம் என்று பெயர்.

6. பொருத்தமுள்ள ஒரு தொகுதியில் துவக்கும் சுரத்திற்கு வாதி என்றும், முடிக்கும் சுரத்திற்கு சம்வாதி என்றும், அடுத்திருக்கும் சுரத்திற்கு அநுவாதி என்றும், இம் மூன்று சுரத்திற்கும் பொருந்தாத சுரத்திற்கு விவாதி சுரமென்றும் பெயர்.

7. ஒரு தொடரில் சம்வாதி சுரம் நெடிலாகவே இருக்கும். அவரோகணத்தில் அதே தொடரில் வாதி சம்வாதி யாகும்போது அதுவும் நெடிலாகும். ச ரி கா - க ரி சா.

8. எடுத்துக்கொண்ட ஒரு இராகத்தில் ஆரோகண அவரோகணங்களில் பொருத்தமுள்ள தொகுதிகளை முறையே எழுதிக் கொள்ளவேண்டும். அதில் சம்வாதி சுரத்தையும் வாதி சுரத்தையும் அடுத்த தொகுதியில் வரப்போகிற தொகுதியின் முதல் சுரத்தையும் விட்டு மீதியாய் நிற்கிற சுரத்தை இணைக்கும் சுரமாகச் சேர்த்து எழுதல்வேண்டும். இவை பெரும்பாலும் சம்பூர்ண இராகங்களில் வழங்கும். (உ-ம்) ச ரி க மா - ரி க ம பா ; ச ரி க மா - க - ரி க ம பா.

9. மேலும் சில வர்ஜிய வக்கிர இராகங்களில் சம்வாதிக்கு வாதியும் வாதிக்கு சம்வாதியும் இணைக்கும் சுரமாக வரும். ச மா - ச மா - ப த சில சமயத்தில் வாதிக்குக் கீழுள்ள சுரத்தையும் சம்வாதிக்கு மேலுள்ள சுரத்தையும் சேர்க்கவேண்டி வரும்.

10. சப்த சுரங்களுக்கும் ஆரோகண அவரோகணங்களில் தனித்தனி ஒரு சுரத்திற்கு மூன்று தொகுதியாக ஒரு ஸ்தாயியில் இருபத்தொன்று தொகுதிகள் வரவேண்டியன. மேளக்கர்த்தாவின் சுருதி பேதத்தினால் இவையெல்லாம் வாரா. வரும் இராகங்கள் பாடச் சுலபமாகும்.

11. வாராதவைகள் இன்னவென்பதும், வாதி சம்வாதிப் பொருத்தத்தின்படி சுருதிகளைத் தெரிந்து ஸ்புடம் பண்ணிக்கொண்டு பொருத்தமுள்ள தொடர்களும் ஜீவசுரமும் தெரிந்து ஒரு இராகத்தைப் பாடல் வேண்டும். அப்படித் தெரிந்து பாடினால் இராகம் பிழையாகாது, காதுக்கும் இனிமையா யிருக்கும்.

12. ஒவ்வொரு தொடரிலும் சம்வாதி சுரங்களே நெடிலாக வந்து இராகத்திற்கு இனிமையைக் கொடுக்கும். ஆகையினால் ஒரு இராகத்தைப் படிக்கிற காலத்தில் எடுத்துக்கொண்ட தொடரில் வாதி சம்வாதிப் பொருத்தம் திட்டமாய்த் தெரிந்துகொண்டு சம்வாதியை நெடிலாக்கினால் இராகத்தின் மூர்ச்சை தவறாது.

13. ஒரு இராகத்தைப் பாடும்பொழுது மத்திமம்வரை யுள்ள பாகத்திற்குப் பூர்வபாகமென்றும், மத்திமத்திற்கு மேற்பட்ட பாகத்திற்கு உத்தரபாகமென்றும் பெயர்.

14. பூர்வ பாகத்திலாவது உத்தர பாகத்திலாவது வக்கிரமாவது வர்ஜியமாவது வருமானால் அப்படிப் பேதப்பட்ட தொகுதி இராகத்தைத் திட்டமாய்க் காட்டக்கூடிய இடமாகும். ஆகையால் அந்த இடத்தை அடிக்கடி போஷித்துப் பாடவேண்டும்.

## வர்ஜியம்.

1. ஒரு இராகத்தின் ஆரோகணத்திலாவது அவரோகணத்திலாவது ஒரு சுரம் வர்ஜியமானால் அச்சுரம் வாதியாகவாவது சம்வாதியாகவாவது அனுவாதியாகவாவது வரமாட்டாது.

2. வர்ஜியமுள்ள ஒரு தொடரில் இணைக்கும் சுரங்க ளில்லாதிருக்குமானால் வாதி சுரமே இணைக்கும் சுரமாக வரும். ச மா - ச மா - ப த.

3. ஆரோகணத்தில் வர்ஜிய மிருக்கும்பொழுது இணைக்கும் சுரம் அவரோகணத்தில் வர்ஜியமான சுரமாய் வருமானால் அப்படிப் பொருந்தாத தொடர்கள் பொருத்தமுள்ள தொடர்களிலிருந்து நீக்கப்படல் வேண்டும்.

4. ஆரோகணத் தொடரில் இணைக்கும் சுரம் வரும்பொழுது அனுவாதி சுரம் அவரோகணமாகும். அந்தச் சுரம் அவரோகணத்தில் வர்ஜியமா யிருக்குமானால் அத்தொடரை அவரோகணத் தொடரிலிருந்து நீக்கல் வேண்டும்.

5. இதுபோலவே அவரோகணத் தொடரில் இணைக்கும் சுரம் வரும்பொழுது சம்வாதி சுரம் ஆரோகணமாகும். அந்தச் சுரம் ஆரோகணத்தில் வர்ஜியமா யிருக்குமானால் அத்தொடரை ஆரோகணத் தொடர்களிலிருந்து நீக்கல் வேண்டும்.

## வக்கிரம்.

1. சப்த சுரங்களும் முறைப்படியே ஆரோகணம் அவரோகணங்களி லிருக்கவேண்டும். இது தவறி, முன் வரவேண்டியது பின்னாகவும், பின் வரவேண்டியது முன்னாகவும் ஒன்று அல்லது இரண்டு மூன்று சுரங்களாயாவது ஓரிடத்திலாவது அல்லது இரண்டு மூன்று இடங்களிலாவது வரும். இதற்கு வக்கிரம் என்று பெயர்.

2. இதில் தன்னிலைக்கு முன்னால் போவதற்கு அதிசாரமென்றும் பின்னால் போவதற்கு வக்கிரம் என்றும் பெயர்.

3. ஆரோகணத்திலும் அவரோகணத்திலும் வக்கிரமாய் வரும் சுரங்களைக் குறித்துக் கொண்டு அவைகளை ஸ்புடக் கணக்கினால் சேர்க்காமல், இவைகளுக்கு முன் பின்னாயுள்ள சுரங்களின் தொடர்களி லிருக்கிறபடியே சேர்த்துப் பாடல் வேண்டும்.

4. இந்த வக்கிர சுரங்களுக்கு முன்னும் பின்னுமுள்ள சுரங்களின் பாத்தியத்தைத்தவிர வேறு எவ்வித பாத்தியமும் கிடையாது. வாதியாகவாவது சம்வாதியாகவாவது வரமாட்டா.

5. வாதி சம்வாதி சுரங்கள் நெடிலாக வருவதினால் அந்தச் சுரங்களுக்கு அடுத்து வரும் வக்கிர சுரங்களை அனுவாதி சுரமாகச் சேர்த்தால் அவைகள் ஆரோகண அவரோகணக் கதியில் பேதப்படும். ச ம ரி க ம பா இதில் ரி க ம வக்கிரம். ச ம என்ற தொடருக்குச் ச ம - ரி க ம - ப என்றால் ரி க ம ஆரோகணம்போல் தோன்றும் ப சேர்வதால்.

6. ரத்னாங்கி இரண்டாவது மேளக்கர்த்தா இராகத்தில் ஜன்யமான வசந்த பூபாளத்தில் ச ரி க ப - ம த - ம க ரி ச, இவைபோல் வரும். முதல் தொடர்ச்சியில் இராகத்தின் ஆரோகண அவரோகண மூர்ச்சனை சம்பூர்ணமாகிவிடும்.

## கீதம் எழுத வேண்டிய சில முக்கிய குறிப்புக்கள்.

1. ஒரு இராகத்தின் ஆரோகண அவரோகண சுரத்தை ஸ்புடம் பண்ணி அதில் வரும் வாதி சம்வாதிப் பொருத்த முள்ள சுரங்களை ஒன்றன் பின் ஒன்றாய் இலக்கம் போட்டு எழுதிக் கொள்ளவேண்டும். பொருத்தமில்லாத தொடர்களை நீக்கவேண்டும்.

2. இராகத்தின் பூர்வ பாகத்திலாவது அதாவது மத்திமத்திற்கு முன்னுள்ள சுரங்களிலாவது ச ரி க, உத்தர பாகத்தில் பின்னுள்ள சுரங்களிலாவது ப த நி, மத்திமத்திலாவது சுருதி பேதங்கள் ஏற்படும்.

3. சுருதி பேதம் நீங்கலாக வக்கிர வர்ஜியங்கள் பூர்வ உத்திர மத்திம பாகங்களிலும் ஏற்படும்.

4. பூர்வ உத்தர மத்திம பாகங்களின் சுருதி பேதங்களினாலும் வக்கிர வர்ஜிய பேதங்களினாலுமே இராகங்கள் சப்த சுரங்களினின்று ஏராளமா யுண்டாகின்றன.

5. இராகத்தின் சுருதிபேத முள்ள தொடர் எந்தத் தொகுதியில் அடங்கி யிருக்கிறதோ அதுவே அந்த இராகத்தின் முக்கிய தொடராகும். அத்தொடரினாலேயே அந்த இராகம் பூர்ணமாய் மற்ற இராகங்களிலிருந்து பேதப்படும். இப்படிப் பேதப்படும் தொடர்கள் பூர்வ உத்தர பாகத்திலும் வரும். அப்படி வரும் இராகங்களில் இரண்டு தொடரையும் விடாமல் பாடவேண்டும்.

6. ஒரு இராகத்தின் பூர்வ பாகத்திலாவது, உத்தர பாகத்திலாவது உண்டாகிற பேதம் இன்னதென்று திட்டமாய் முதன் முதல் தெரிந்துகொள்ளல் வேண்டும்.

7. சுருதி பேதங்கள் மாத்திரமுடைய இராகங்கள் தாய் இராகங்களென்றும், அல்லது கர்த்தா இராகங்கள் என்றும், வக்கிர வர்ஜிய ராகங்கள் ஜன்னிய ராகங்கள் என்றும் சொல்லப்படும்.

8. ஜன்னிய இராகங்கள் எப்பொழுதும் தாய் ராகத்தின் சுருதி பேதத்தையே யுடையவாய் இருக்கும். ஆரோகணத்திலாவது அவரோகணத்திலாவது பூர்வ உத்தர மத்திம பாகங்களிலாவது தாய் ராகத்தின் சாயலையே காட்டிவரவேண்டும்.

9. எந்தத் தொடரினால் ராகத்தின் பேதம் திட்டமாய்த் தெரியுமோ அந்தத் தொடரையே ஆரம்பத் தொடராக எடுத்துக்கொள்ள வேண்டும். பூர்வ பாகத்தில் எவ்விதபேதமு மில்லாமல் உத்தர பாகத்தில் பேதம் வருமானால் பேதம் வரும் தொடரையே முதல் தொடராக எடுத்துக்கொள்ள வேண்டும். நேத சுருதியாகிய ஷட்ஜத்தையும் பஞ்சமத்தையும் இத்தொடர்களோடு சேர்த்துக் கொள்வதே கிரமம்.

10. பூர்வ பாகத்தில் சுருதி பேதமுள்ள சுரத்திற்கு உத்தர பாகத்தில் பொருத்தமுள்ள சுரம் வருமானாலும், உத்தர பாகத்தில் சுருதிபேதமுள்ள சுரத்திற்குப் பொருத்தமுள்ள சுரம் பூர்வ பாகத்தில் வருமானாலும், இந்த இரண்டு சுரங்களையும் கொஞ்சம் கார்வையுடன் பாடவேண்டும். இது பிரம்ம மேளத்தின் சக்கரத்தி லடங்குமே யொழிய உத்தர மேளத்தின் சக்கரத்தில் எழுதிக்காட்ட வராது. ஜன்னிய இராகங்களில் அநேகம் இப்பேதத்தை யுடையவா யிருக்கின்றன. இப்பேதம் தெரிந்துகொள்ளாமற் போனால் சந்தேகம் ஏற்படும்.

11. ஸ்புடத் தொடர்களில் வாதியாகவும் சம்வாதியாகவும் எந்தச்சுரம் எத்தனைதரம் அதிகம் வருகிறதென்று எண்ணிப் பார்க்கும்பொழுது அதிகம் வருகிற சுரமே ஜீவசுரமாகும். அதற்கு இணை கிளையாக வரும் சுரமே அமுதவைப்பாகும். வட்டப்பாலை இராகங்களில் சுரங்கள் ஒரு அலகு குறைந்து அல்லது ஒரு அலகு கூடி, பாட்டின் இனிமையான இடமாக விளங்குவது பாடலமுதம்.

12. ஜீவசுரத்தை எப்போதும் எந்த இடத்திலும் நெடிலாகவே வழங்கவேண்டும். நேத சுருதியில் முடிக்க நேரிடுங்காலத்திலும் ஜீவ சுரத்தை அளவுகடந்து நீட்டி முடிக்கவேண்டும். நேத சுருதி தவிர மற்ற இடங்களில் கூடுதலாய் அதாவது கமகமாய்ப் படிக்கவேண்டும்.

13. இராகத்தில் ஸ்புடம் பண்ணின தொடர்களில் கீதம் செய்யும்போது கவனிக்க வேண்டிய குறிப்பு :—முதன்முதல் இராகம் ஸ்பிரிக்கும் சுரப் பொருத்தமுள்ள தொடரில் ஒன்றை ஆரம்பத் தொடராக எடுக்கவேண்டும். அதிலிருந்து தார ஸ்தாயிவரை போய் மத்திய ஸ்தாயியில் முடிக்க வேண்டும். அதன்பின் முதலில் எடுத்துக்கொண்ட தொடர் போக மீதியா யிருக்கும் தொடர்களில் ஜீவசுரத் தொடர்களைக்கொண்டு ஆரம்பித்து, மத்திய தார ஸ்தாயிகளுக்குப்போய் மந்த்ர ஸ்தாயியில் உள்ள தொடர்களைச் சேர்த்துக்கொண்டு, மத்திய ஸ்தாயியில் முடிக்கவேண்டும். இதன்மேல் மூன்றாவதாக, முதலிலும் இரண்டிலும் சேராத தொடர்களில் இராகம் ஸ்பிரிக்கும் ஜீவ சுரமுள்ள ஒரு தொடரை எடுத்துக்கொண்டு, மீதியாயிருக்கும் தொடர்களை மத்திய ஸ்தாயியிலிருந்து மந்த்ர ஸ்தாயிக்குப் போய், தொடர்களிருக்குமானால் தார ஸ்தாயிக்குப்போய் மத்திய ஸ்தாயியில் முடிக்க வேண்டும்.

14. மத்திய ஸ்தாயியிலுள்ள ஒரு தொடர் தார ஸ்தாயியிலும் மந்த்ர ஸ்தாயியிலும் ஆரோகண அவரோகணங்கள் இரட்டித்து வரும். அப்படி வரும்பொழுது பெரும்பான்மை ஒன்றை நீக்கியும், எடுத்துக்கொண்ட தொடரின் போக்கை முடிக்கவும், தாளத்தில் அக்ஷரங்களை நிரவவும் அவசியம் நேரிடும்பொழுது சேர்த்துக்கொள்ளலாம். அப்படிச் சேர்க்கும் தொடர் இராகம் ஸ்பிரிக்கும் தொடராக இருக்கவேண்டும்.

15. இப்படிச் செய்யும்பொழுது ஸ்புடம் செய்த தொடர்கள் பெரும்பாலும் மூன்று கண்டிகையில் அடங்கி நிற்கும். அதிக வக்கிர வர்ஜியம் ஏற்படும் சில இராகங்கள் இரண்டு கண்டிகையில் முடியும். இதில் முதல் கண்டிகையும் கடைசிக் கண்டிகையும் சிறுத்தும் நடுக்கண்டிகை பெருத்தும் இருக்கும்.

16. இஷ்டமான தாளங்களில் இத்தொடர்களை அடக்கும்பொழுது சம்வாதியாக வரும் சுரங்களை ஒரு அட்சரகாலம் நீட்டியும், இணைக்கும் சுரங்களில் ஒன்றை அல்லது இரண்டைக்

குறைத்தும் முடிக்கும் சுரத்தை $\frac{1}{4}$, $\frac{1}{2}$, $\frac{3}{4}$ ஆவர்த்தம் வரை நீட்டியும் கொள்ளலாம். அவசியமானால், அதாவது விடக்கூடாத சுரமா யிருக்குமானால், இரண்டாம் காலத்தில் குறுக்கிக்கொள்ளவேண்டும்.

17. ஒரு இராகத்தை ஸ்புடம் பண்ணும்பொழுது கிடைக்கும் தொடர்கள் இத்தனை யென்றும், இணைக்கும் விதம் இன்னதென்றும், சஞ்சாரக் கிரமம் இன்னதென்றும் அறிந்து பாடம் செய்துகொள்ள ஏதுவாயிருப்பதே கீதத்தின் பிரயோஜனம். ஆகையால் இரட்டித்து வரும் தொடர்களைத் தவிர மற்றத் தொடர்களை விடாமலிருப்பது நல்லது. வரக்கூடாத தொடர்களைச் சேர்க்கக் கூடாது.

18. வாதி சம்வாதிப் பொருத்தப்படி கிடைக்கவேண்டிய துண்டுகள் இன்னவென்று அறிவதற்கு ஒரு இராகத்திற் குரிய சுரத்தில் மந்த்ர ஸ்தாயி பஞ்சமம் முதல் தார ஸ்தாயி பஞ்சமம் வரையும் பார்த்துக்கொண்டு, தார ஸ்தாயி பஞ்சமம் முதல் மந்த்ர ஸ்தாயி பஞ்சமம் வரையும் பார்த்துக்கொள்ள வேண்டும். ஏதோ சில சமயங்களில் பஞ்சமம் வாராதிருக்குமானால் ஆரோகண அவரோகணங்களில் மந்திர ஸ்தாயியிலிருந்து தார ஸ்தாயி மத்திமம் வரையிலும் பார்த்துக்கொள்ளலாம். இது ஒரு இராகத்திற்கு இத்தனை பாத்தியங்க ளிருப்பனவென்று அறிவதற்குச் சேர்க்கும் தொகுதிகள் இணைக்கும் தொகுதிகள் இம் முறைப்படி தான் வரவேண்டுமென்பதையும் அறிவதற்கே தார ஸ்தாயியின் மேல் பாகத்திலும் மந்த்ர ஸ்தாயியின் கீழ்பாகத்திலும் எப்படி இராக சஞ்சாரம் செய்யலா மென்பதை மத்திய ஸ்தாயியின் சஞ்சாரத்தால் தெரிந்துகொள்ளலாம். மத்திய ஸ்தாயிக்குரிய கிரமமே மற்ற மூன்று ஸ்தாயிகளிலும் வரும்.

19. கீதங்கள் பொதுவாக மூன்று கண்டிகையாகவும், அபூர்வமாக இரண்டு கண்டிகையாகவும் வரும். இவைகளில் முதல் கண்டிகை மத்திய ஸ்தாயியின் ஷட்ஜத்திலும் அல்லது தார ஸ்தாயியின் ஷட்ஜத்திலும் ஆரம்பிக்கலாம். அடுத்த கண்டிகை இராகத்திற்கு ஜீவசுரமாய் ஏற்படும் சுரத்திற்கு வாதி சுரமாயிருப்பது உத்தமம். இது தவிர இராகத்தின் வக்கிர வர்ஜிய பேதம் தெரிவிக்கும் ஒரு தொகுதி கீதத்தின் ஆரம்பத்தில் வருவது நல்லது. க ப நி த நி - க ப நி - க ம த - க ப த ச - ச ம - ச ம ப த—இவைபோல்.

20. எப்போதும் சம்வாதியாக வரும் சுரங்கள் நெடிலாகவே இருக்கவேண்டும். தாளத்தில் மாத்திரை கூடிவருவதாகத் தெரியுமானாலும் வாதி சம்வாதிக்கு நடுவிலுள்ள அனுவாதி சுரங்களில் ஒன்றை இரண்டை விட்டுவிடலாமே யொழிய சம்வாதிச் சுரத்தின் நெடிலைக் குறைக்கவே கூடாது. அவசியமான இடங்களில் ஒன்று இரண்டு வருவது குற்றமில்லை.

21. இராக சஞ்சாரத்தில் அதிக பாத்தியமுடைய ஜீவசுரம் இரண்டு மாத்திரையாயன்றி நான்காகவும், கீதம் முடியுமிடங்கள் ஆறு எட்டாகவும் வரலாம். வாதி சம்வாதியாக வரும் சுரங்களை எண்ணி அதிகப் பாத்தியதை குறிக்கவேண்டும். அப்படிக் குறித்தபின் அதிகப் பாத்தியம் எந்தச் சுரங்களுக்கு வருமோ அந்தச் சுரங்களைக்கொண்டு முடியும் இரண்டு மூன்று தொடர்களில் இராகத்தின் வக்கிர வர்ஜிய பேதங்களைக்காட்டும் தொடர்களை முதல் தொடராக எடுத்துக்கொள்ளவேண்டும். ரிமதா - மதா என்ற இரண்டு தொடர்களில் தோடி இராகத்தின் அம்சத்தைக் காட்ட க ம த போதுமானது. கபநி என்ற தொடர் ஹம்ஸத்தொனி இராகத்தைப் பூர்ணமாய்க் காட்டுவதுபோல் ஜன்னிய இராகங்களில் வக்கிர வர்ஜிய சுரங்களுக்கு முந்தின சுரத்தை வாதியாகக்கொண்டு அதற்குப் பொருத்தமுள்ள சுரத்தைக்கொண்டு சம்வாதியாக வரும் தொடர் முக்கியமானது. இதில் இராகத்தின் முக்கிய சொரூபம் காணப்படுவதால் இது முதல் முதல் வருவது நல்லது. ஒரு இராகத்தின் சஞ்சாரத் தொடர்களெல்லாம் அதாவது ஸ்புடத்தொடர்கள் பெரும்பாலும் வரும்படியாகச் சஞ்சாரம் செய்து எழுதவேண்டும்.

## கீர்த்தனம் எழுதவேண்டிய முக்கிய குறிப்புக்கள்.

1. கீர்த்தனம் எழுது முன்னதாக கீதம் எழுதவேண்டிய குறிப்புக்களில் எழுதியபடி அதைக் கவனித்து நாம் எழுதவேண்டிய இராகம் எந்த மேளக்கர்த்தா அல்லது எந்தத் தாய் இராகத்தில் ஜன்னியமான இராகம் என்றும் அதின் ஆரோகண அவரோகண சுரங்கள் இன்னவென்றும் தெரிந்து ஸ்புடம் செய்து, அதில் வாதி சம்வாதிப் பொருத்தமும், ஜீவசுரங்களும், அமுதவைப்பும் இன்னவென்றும், வக்கிர வர்ஜிய இராகங்களில் இராகச்சாயையைக் காட்டும் முக்கியமான தொடர்களின்னவென்றும் அறிந்துகொள்ளவேண்டும்.

2. பொதுவாக கீர்த்தனங்கள் பல்லவி, அநுபல்லவி, சரணம், என்ற மூன்று கண்டிகையில் அடங்கி நிற்கின்றன.

3. அநேகமாய்க் கீர்த்தனங்களின் முதல் கண்டிகை அல்லது பல்லவி மத்திய ஸ்தாயியின் சஞ்சாரமாகவும், இரண்டாவது கண்டிகையான அநுபல்லவி மத்திய ஸ்தாயியில் தொடங்கி தார ஸ்தாயியின் சஞ்சாரமாயும், மூன்றாவது கண்டிகை அல்லது சரணம் முன் பாகத்தில் மத்தியஸ்தாயியில் தொடங்கி மந்த்ரஸ்தாயியின் சஞ்சாரமாகவு மிருக்கும். சரணத்தின் பின்பாகம் அநுபல்லவியையே பாடி முடிக்கவேண்டும்.

4. மற்றும் சில கீர்த்தனங்களில் பல்லவியில் தார ஸ்தாயியில் தொடங்கி மத்திய ஸ்தாயியின் சஞ்சாரமாகவும், சில பல்லவிகள் மத்திய ஸ்தாயியில் ஆரம்பித்து மந்த்ர ஸ்தாயியின் சஞ்சாரமாகவும் வரலாம். தார ஸ்தாயியின் சஞ்சாரமில்லாத சில இராகங்கள் தவிர மற்ற எல்லா இராகங்களிலும் அநேகமாய் அநுபல்லவி தார ஸ்தாயியின் சஞ்சாரத்தையும், சரணம் மத்திய மந்த்ர ஸ்தாயியையும் காட்டி நிற்கிறது. சில கீர்த்தனங்களுக்குப் பல்லவியும் அநுபல்லவியும் சேர்ந்து சரணமாக வரலாம்.

5. கீர்த்தனம் எழுதுகிறவர்கள் ஒரு இராகத்தில் ஸ்புடம் பண்ணின வாதி சம்வாதிப் பொருத்தமுள்ள தொடர்களையும் ஜீவசுரத் தொடர்களையும் கவனித்து, முதல் முதல் ஜீவசுரப் பொருத்தமுள்ள தொடரில் ஒன்றைப் பல்லவிக்கு ஆரம்பத் தொடராக எடுத்தால் அதன் அமைப்பு நன்றாயிருக்கும். ஒரு இராகத்தில் வக்கிர வர்ஜியத் தொடர்கள் முக்கியமான தொடராயிருக்குமானால் அதையும் ஆரம்பத் தொடராக எடுத்துக்கொள்ளலாம். பல்லவியில் இராகத்தின் ஆரோகண அவரோகண சஞ்சாரத்தைத் தெளிவாய்க் காட்டவேண்டும்.

6. இராக சஞ்சாரத்தைக் கவனித்து, அதாவது இராகங்களின் ராகபாவத்தைக் கவனித்துக் கீர்த்தனங்களின் சாகித்யப் போக்கை யனுசரித்து, மத்திய ஸ்தாயியில் ஜீவசுரத்தைக் காட்டும் தொடரில் ஆரம்பித்து வக்கிர வர்ஜிய இராகங்களைத் தெளிவாய்க் காட்டக்கூடிய முக்கியமான தொடரில் ஆரம்பித்து அவரவர்கள் மனோதர்மப்படி மத்திய மந்த்ர ஸ்தாயிகளில் வெகு அழகாகச் சஞ்சாரம் செய்துகொள்ளலாம். ராகபாவத்தையும் சாகித்ய ரஸபாவங்களையும் அறிந்து அதாவது ஆனந்தம், இரக்கம், உருக்கம், கம்பீரம், நடனம், முதலான நடைகளைக் கவனித்துச் சாகித்திய அர்த்தம் கெடாமல் கார்வையாக வரவேண்டிய இடத்தில் கார்வையாகவும், ஜீவசுரத்தையும், அமுதவைப்பையும், பாடலமுதத்தையும் கவனித்துச் சில இடங்களில் துரிதகாலத்தில் ஜண்டவரிசை, ரவைஜாதி பலுக்குப்பொடி வரிசைகளையும் சேர்த்து இராக சஞ்சாரத்தை வெகு அழகாக விதவிதமான சங்கதிகள் போட்டு, கீர்த்தனங்களின் பல்லவியை விரிவாகவும் விஸ்தாரமாகவும் செய்யலாம்.

7. அநுபல்லவியை ஆரம்பிக்கும்போதும் தார ஸ்தாயியிலாவது மத்திய ஸ்தாயியிலாவது ஜீவ சுரப் பொருத்தமுள்ள ஒரு தொடரை ஆரம்பித்து தார ஸ்தாயியிலும் மத்திய ஸ்தாயியிலும் சஞ்சாரம் செய்து, தார ஸ்தாயியின் சட்ஜத்தில் கார்வை கொடுத்து, அதற்குமேல்

அநேக சங்கதிகள் அமைத்துப் பெரிதாகவோ சிறிதாகவோ விஸ்தாரம் செய்து கொள்ளவேண்டும். சங்கதிகள் போடுவதினால் இராக சஞ்சாரம் மட்டுமல்ல சாகித்ய ரசபாவங்களும் அர்த்தங்களும் கெடாமல் ஒழுங்காக இருக்கவேண்டும். சாகித்யத்தில் நெடிலான எழுத்துக்கள் வருமிடத்தில் சுரங்களையும் நெடிலாகக் கொடுத்துக் குற்றெழுத்துக்கள் வருமிடத்தில் சுரங்களையும் அதற்கேற்றவாறு கவனித்து எழுதவேண்டும்.

8. சரணத்தின் முற்பாகம் கார்வையாக சாகித்ய ரசபாவத்தைக் கவனித்து மந்த்ர மத்திம ஸ்தாயியிலும் ஜீவசுரப் பொருத்தமான தொடர்களை வைத்து சஞ்சாரம் செய்துகொண்டு சரணத்தின் பின்பாகம் அநுபல்லவியைப் போல் முடித்துக்கொள்ள வேண்டும்.

9. சில கீர்த்தனங்களின் சரணத்தில் பின்பாகம் அநுபல்லவியைப் போல் வராமல் மந்த்ர, மத்திய ஸ்தாயியில் சஞ்சாரம் செய்து கொள்ளலாம்.

10. அதே மாதிரி வித்தியாசமான அநேக சரணங்கள் ஒரு கீர்த்தனைக்கு இரண்டோ மூன்றோ சாகித்யத்திற் கேற்றவாறு எத்தனை வேண்டுமானாலும் செய்துகொள்ளலாம்.

11. இன்னும் சில கீர்த்தனங்களில் சரணத்தின் முன்பாகம் மந்த்ர மத்திய ஸ்தாயியில் கார்வையாகச் சவுக்க காலத்தில் பாடி பின்பாகம் இரண்டாம் காலத்தில் அல்லது துரித காலத்தில் பாடக் கூடியதாக சாகித்யமெழுதி அதற்கேற்றபடி நடையை மாற்றி எழுதலாம்.

12. சிறு கீர்த்தனங்களாக எழுத விரும்பினால் இராக சஞ்சாரத்தை மாத்திரம் காட்டி ஆரோகண அவரோகணங்களில் வரும் சுரங்களையும் விடாமல் எழுதவேண்டும். அதிக விஸ்தாரமாக இராக சஞ்சாரம் செய்யக் கூடாத சில வக்ர வர்ஜிய இராகங்களில் கீர்த்தனைகள் சிறிதாகவே அமையும்.

13. சில இராகங்களில் கீர்த்தனங்களுக்கு எத்துக்கடை சுரம் பாடினால் அழகாயிருக்கும். அப்படிப்பட்ட கீர்த்தனங்களுக்கு ஸ்புடம் செய்த தொடர்களில் இணை, கிளை, நட்புப் பொருத்த சுரங்களின் தொடர்களைச் சேர்த்துத் தாளங்களின் நடையைக் கவனித்து அங்கங்கே நடைகளை மாற்றி எழுதினால் மிக அழகாயிருக்கும்.

14. கீர்த்தனங்கள் எழுதும்போது அவரவர்க்கு இஷ்டமான தாளங்களில் அமைத்துக் கொள்ளலாம். சில கீர்த்தனங்களின் சாகித்யங்கள் திஸ்ர நடைக்கும், சில சதுரச்ர நடைக்கும், சில கண்ட ஜாதிக்கும், சில மிஸ்ர ஜாதிக்கும் பொருத்தமாயிருக்கும். நம் அநுபவத்திற்கு எளிதாக வரும் சில தாளங்களை மாத்திரம் இங்கே எழுதியிருக்கிறேன்.

15. ஒரு திஸ்ரம் 3 மாத்திரையாகவும், 1 சதுரச்ரம் 4 மாத்திரையாகவும், 1 கண்டம் 5 மாத்திரையாகவும், 1 மிச்ரம் 7 மாத்திரையாகவும், 1 சங்கீர்ணம் 9 மாத்திரையாகவும், இந்தக் களையை இரண்டாகப் பெருக்கினால் 2 திஸ்ரம் 6 மாத்திரையாகவும், 2 சதுரச்ரம் 8 மாத்திரையாகவும், 2 கண்டம் 10 மாத்திரையாகவும், 2 மிச்ரம் 14 மாத்திரையாகவும், 2 சங்கீர்ணம் 18 மாத்திரையாகவும் வரும். சாதாரணமாக நம் வழக்கத்திலிருக்கும் தாளங்கள் இவைகளுக்குள்ளேயே நிற்கின்றன. திஸ்ர ஜாதி ஏகதாளத்தை 3-ஆகவும், திஸ்ர ஜாதி ரூபகத்தை 5-ஆகவும், திஸ்ர ஜாதி திரிபுடையை 7-ஆகவும், சதுரச்ர ஏகதாளத்தை 4 அட்சர காலமாகவும், சதுரச்ர ஜாதி ரூபகத்தை 6-ஆகவும், சதுரச்ர ஜாதி திரிபுடை அல்லது ஆதி தாளத்தை 8 அட்சரமாகவும், ஜம்பை மட்டிய தாளங்களை 10 அல்லது 5, 5 ஆகவும், அடைதாளத்தை 14 அல்லது 5, 5, 2, 2 ஆகவும் கணக்கிட்டு வழங்கி வருகிறோம்.




## சப்த தாள அலங்காரங்களின் சூத்திரம்.

சப்தசு ரத்தில் ஜனிக்குநா தத்தை
நிச்சய நிலேயில் நியத்திட வேன்றே
அக்ஷர காலத் தடக்கினர் பெரியோர்.

சாற்றிய வேழுதா ளத்தின் நிலேயை
சதுர்ஸ்வர லகுவைச் சார்ந்திமே முறையாய்ச்
சால்பழு தங்கம் சாற்றிடக் கேண்மோ.

ஈரிரண் டேக தாளமோர் லகுவே
இருமூன் றுரூபக மேனில்துரி தலகுவாம்
ஏழேனும் ஜம்பை லகுவீர் துரிதம்
எட்டாம் திரிபுடை லகுவிரு துரிதமாம்.

ஈரஞ்சு மட்டியம் லகுதுரி தலகுவாம்
ஈரேழு அடமிரு லகுதுரித விணயாம்
ஈரேழு துருவம் லகுதுரித லகுவிணே
என்றழ காக இலங்கிடு மாதோ.

துருவம் மட்டியம் ரூபகம் ஜம்பை
திருபுடை யுடனே அடமு மேகமாய்
அறுகோ ணத்தின் நவேலம் முறையே
வருதா ளத்தின் வர்க்கமே ழாமே.

ஒவ்வொரு தாளமும் ஜாதிகள் ஐந்திலும் அதாவது திஸ்ரம் (3 அட்சரகாலம்), சதுரச்ரம் (4 அட்சரகாலம்), கண்டம் (5 அட்சரகாலம்), மிஸ்ரம் (7 அட்சரகாலம்), சங்கீர்ணம் (9 அட்சரகாலம்) ஆகியவைகளில் வரும்பொழுது $7 \times 5 = 35$ தாளங்களாகும்.

(1) த்ருவம் = 1011 (ஒரு லகு, ஒரு த்ருதம், 2 லகு)
(2) மட்டியம் = 101 (ஒரு லகு, ஒரு த்ருதம், ஒரு லகு)
(3) ரூபகம் = 01 (ஒரு த்ருதம், ஒரு லகு)
(4) ஜம்பை = 100 (ஒரு லகு, ஒரு அனுத்திருதம், ஒரு த்ருதம்)
(5) திருபுடை = 100 (ஒரு லகு, இரண்டு த்ருதம்)
(6) அடதாளம் = 1100 (இரண்டு லகு, இரண்டு த்ருதம்)
(7) ஏகதாளம் = 1 (ஒரு லகு).

35 தாளங்களும், அங்கங்களும் அக்ஷரகாலமும்.

| ஜாதி | தாளம் | துருவம் | மட்டியம் | ரூபகம் | ஜம்பை | திருபுடை | அட | ஏக |
|---|---|---|---|---|---|---|---|---|
| | அங்கம் | 1011 | 101 | 01 | 100 | 100 | 1100 | 1 |
| சதுரச்ரம் | அட்சரங்கள். | 14 | 10 | 6 | 7 | 8 | 12 | 4 |
| திஸ்ரம் | | 11 | 8 | 5 | 6 | 7 | 10 | 3 |
| மிஸ்ரம் | | 23 | 16 | 9 | 10 | 11 | 18 | 7 |
| கண்டம் | | 17 | 12 | 7 | 8 | 9 | 14 | 5 |
| சங்கீர்ணம் | | 29 | 20 | 11 | 12 | 13 | 22 | 9 |

16. எல்லாவிதமான தாளங்களையும் கீர்த்தனங்களில் அமைத்து எழுதிப்பாட அதிக சிரமமாகும். கஷ்டமான தாளங்களில் அமைத்துப் பாடும்பொழுது தாளக் கணக்கையே அதிகம் கவனிக்க வேண்டியதாகும். கீர்த்தனங்களின் ராகபாவத்தையும் சாகித்ய ரசபாவத்தையும் கவனித்துப் பாட வேண்டியது அவசியமாதலால் நம் அனுபவத்திற்கு எளிதாக இருக்கக்கூடிய 3, 4, 5, 6, 7, 8 ஆகிய தாளங்களை வைத்துப் பாடுவது சுலபமாயிருக்கும்.

17. கீர்த்தனங்களை சமத்தில் அதாவது சம எடுப்பில் ஆரம்பித்தால் நடை சுலபமாயிருக்கும். சமத்தில் ஆரம்பிக்காமல் விஷமத்திலும் ஆரம்பிக்கலாம். பாட்டு எடுப்பிற்குப் பின் தாளம் ஆரம்பிப்பதற்கு அதீதம் என்றும், தாளம் ஆரம்பித்த பிறகு பாட்டை எடுப்பது அனாகதம் என்றும் பெயர்.

18. தாள ஆரம்பமுதல் முடிவு வரையிலும் சமத்தில் வராமல் முன் பின்னாக வருவது விஷமமாகும். நம் தென்னிந்திய சங்கீதத்தில் தாளத்தின் அங்கங்களையும் அவைகளின் பிரஸ்தாரங்களையும், அவைகளுக்கு ஏற்பட்ட சொற்கட்டுகளையும் கவனித்தால் மிக மேன்மையான தென்று தெரியவரும். தாள ஞான பாண்டித்யத்தைப் பல்லவி பாடுவதிலும், நடன கலையிலும் அறியலாம்.

## ஆளத்தி அல்லது ஆலாபனம் பாடும் முறை.

இராகத்தின் ஆரோகண அவரோகண சுரங்கள் இன்னவையென்று முதல் முதல் தெரிந்து, அவற்றின் இணை, கிளை, பகை, நட்புச் சுரப் பொருத்தங்கள் கண்டு, இராக சஞ்சாரத் தொடர்களும், ஜீவ சுரங்கள் முதலியனவும் இன்னவென்று தெரிந்து ஆளத்தி செய்தல் வேண்டும். ஒரு இராகத்தை ஆளத்தி அல்லது ஆலாபனம் செய்யும்பொழுது ம் என்றும், தென்னு தெனு என்றும் ஆளத்தி செய்யப்படுகிறது. பாவோடு ஆளத்தி செய்யும்போது அந்தப்பாவின் எழுத்தோசைகளோடு இசைந்து ஆளத்தி செய்யப்படுகிறது. பண்கள் பாடுகின்றபோதும் அப்பண்களின் இடல்பிற் கேற்பத் தாள ஒழுங்குகளோடு ஆளத்தி நிகழும்.

சிலப்பதிகாரம் அரங்கேற்றுக் காதை

"மகரத்தி னொற்றுற் சுருதி விரவும்
பகருங் குறினெடில் பாரித்து—நிகரிலாத்
தென்னு தெனுவென்று பாடுவரே லாளத்தி
மன்னு விச் சொல்லின் வகை."

மேற்கண்ட சூத்திரத்தில் "மகரத்தினொற்றுற் சுருதி விரவும்" என்பதைக் கொண்டு முதலில் பாட ஆரம்பிக்கும் பொழுது மகரத்தி னொற்றுலே நாதத்தை இம் என்று உச்சரித்து அதன் பின் நெடில் குறில் எழுத்துக்கள் உச்சரிக்கப்படும் என்பது சொல்லப்படுகிறது. இராகம் பாட ஆரம்பிக்கும்பொழுது தான் எடுத்துக்கொண்ட இராகத்திற்கு ஜீவசுரமாய் விளங்கும் முக்கிய தொடரை ஆதார ஷட்ஜ சுரத்திலிருந்து இம் என்று கமகமாய்ப் பிடித்து அதன் பின் த அ அ அம் என்றாவது ந அ அ அம் என்றாவது தனம் தானம் என்றாவது மந்த்ர ஸ்தாயியில் பாடுவது வழக்கம். தானம் த அ அனம் என்று திரும்பத் திரும்பத் தானம் பாடும்பொழுது தனம் தா, அனந்தம் தா ஆனந்தம் தா தானம் தா என்று பாடுவதாகத் தோன்றும். தெய்வத்தினிடத்தில் பொருள் அன்னம் ஆனந்தம் தர வேண்டுதல் செய்வதாகும்.

கீழே வரும் செய்யுள் ஆளத்தியின் இலக்கணத்தை இன்னும் நன்கு விளக்குகிறது.

"குன்றுக் குறிலைந்துங் கோடா நெடிலைந்து
நின்றூர்ந்த மந்நதாந் தவ்வோடு—நன்றாக
நீளத்தா லேழு நிதானித்தா னின்றியங்க
வாளத்தி யாமென் றறி."

மேற்கண்ட சில வரிகளில் ஆளத்தி செய்யும்பொழுது அ, இ, உ, எ, ஒ குறில் ஐந்தும், அவற்றின் நெடிலும், மவ்வும், நவ்வும், தவ்வும் என்ற மூன்று மெய்யெழுத்துக்களும் ஆக 13 எழுத்துக்கள் வரவேண்டுமென்றும், மற்றவை வரமாட்டாவென்றும் சொல்வர். தற்காலத்தில் இசைப்புலவர்களில் சிலர் தரனா என்றும், தொரனா என்றும், ததரினு என்றும் ராகத்தை ஆலாபனம் செய்கிறார்கள். இச்சொற்கள் செவிக்கு அவ்வளவு இனிமை கொடுக்கா. இராகத்தோடு சொல்லப்படும் வார்த்தைகளின் முடிந்த எழுத்துக்கள் அ, இ, உ, எ, ஒ என்ற குறிலாலும், அவற்றின் நெடிலாலும், நாளிது வரையும் அகாரமாய் இராகச்சாயை தோன்றும்படி பாடிக் கொண்டிருக்கிறோமென்பதையும், சரளி வரிசைகளையும் இவ்வெழுத்துக்களில் பழகுகிறோமென்பதையும், தம், நம், இம் என்ற பதங்களையே இராகம் ஆலாபிக்கும்பொழுது உபயோகித்துக் கொண்டிருக்கிறோமென்பதையும் நாம் நன்றாய் அறிவோம்.

இராகங்களின் மத்திம காலமாகிய தானம் வாசிக்கும்பொழுது, தனம், தானம், த அ அ ன அ அ, ம் ம் ம், என்றே இன்றைக்கும் நாம் பாவிப்பதையும், மெய்யெழுத்துக்கள் பதினெட்டுள்ளும், மவ்வும், நவ்வும், தவ்வும், ஆகிய மூன்று எழுத்தினமுமின்றி மற்ற எழுத்துக்கள் ஆளத்திக்கு வரப்பெறு என்பதையும் "இன்றூர்ந்த மங்கதாம் தவ்வொடு நன்றாகா" என்னும் சூத்திரத்தையும் கவனிக்கையில் நன்கு விளங்கும்.

ஆளத்தியானது மூன்று வகைப்படும். அவை நிறவாளத்தி, பண்ணாளத்தி, காட்டாளத்தி எனப்படும். நிறவாளத்தி நிறங்குலையாமல் பாரணையுடன் நிகழும். பாரணையாவது நெடிலாய் அகண்டமான ஓசையுடன் கூத்துடன் நிகழ்வதாம். இது, வெறும் இராகத்தை மட்டும் ஆலாபனம் செய்வதைக் குறிக்கும். பண்ணாளத்தியாவது பண்ணையே கருதி வைக்கப்படும். இது பாவோடு பொருந்தினதாய், அவற்றின் பொருளை மனக் கருத்திற் கொத்தவாறு இன்னிசை பிறக்கச் செய்வது கீதம், கீர்த்தனம், பதம் இவை பண்ணாளத்தியைச் சார்ந்தனவாகும். காட்டாளத்தி அச்சுடன் நிகழும். அச்சாவது, அகாரமாகத் தாளத்துடன் நிகழ்வதாம். தானம், பல்லவி, நிரவல் முதலியவை காட்டாளத்தியைச் சார்ந்தனவாகும்.

மேலும் ஆளத்தி செய்யும்பொழுது எந்தப் பண்ணை அதாவது வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, தேவாரம், திருப்புகழ், முதலிய அநேக வித பாக்களின் அடிகளுக்கும், பொருளுக்கும் ஏற்றவிதமாய் இராகத்தைத் தெரிந்துகொள்ள வேண்டும்.

ஒரு இராகத்தின் சஞ்சாரம் தெரிந்து ஆளத்தி பாடிப் பார்த்து அவ்விராகம் என்ன ரச முடையதாய் இருப்பதென்பதை நன்கறிந்து அதற்கேற்ற விதமாய் நாத சொரூபியாகிய தெய்வத் தின் குணநிசயங்களையும், வணக்கம், துதி, தோத்திரம், வேண்டுதல் முதலானவைகளையும் வைத்து நம் மனமார பக்தி ரசமான பாக்கள், கவிகள் முதலிய சாகித்யங்கள் எழுதிப் புதிதான கீதம், கீர்த் தனம் செய்து கானமூர்த்தியைத் துதித்து, கானம் செய்யும்போது அதில் அடையும் ஆனந்தமும், மனோரம்மியமும் எல்லாவற்றிற்கும் மேலானது. இம்முறையைக் கவனித்து, நம் அனுபவத்திற்குக் கொண்டுவரும்பொழுது சங்கீத ஞானிகளும், அறிவுடையோரும், பக்தியுடையோரும் மேலான ஆனந்தம் அடைவார்கள்.

இகபர விஷயங்கள் யாவற்றிலும் ஆனந்தத்தைத் தரும்படியான சங்கீதம் யாவரும் விரும்பக்கூடிய சாஸ்திரம். தெய்வீக அம்சமாக விளங்கும் சங்கீத வித்தை சாஸ்திரங்கள் எல்லா வற்றிலும் மிகச் சிறந்தது. இசைத்தமிழை மென்மேலும் விருத்திசெய்ய விரும்பும் தமிழ் மக்கள் தங்கள் தங்கள் மனோபாவப்படி சிந்தனைக்குத் தக்கவாறு சிறிதாகவும், பெரிதாகவும் ஸ்புடக் கணக்கினால் வெகு சுலபமாய்க் கீதம், வர்ணம், கீர்த்தனம், பதம் முதலானவைகள் பழைய ராகங் களிலும், புதிது புதிதான இராகங்களிலும் உண்டுபண்ணி, பக்திரசமான சாகித்தியங்கள் பாக்கள் முதலியவைகளால் முத்தொழில் மூர்த்தியாகிய கானமூர்த்தியின் புகழைத் துதி சொல்லிக் கானம் செய்து நாத பிரம்மத்தை ஆராதிக்கும் இங்கிலையே நன்னிலை என்றறிந்து ஆனந்தித்து அதனால் அதிகப் பிரயோஜனமும், பக்திவிருத்தியும் நன்மையும் அடையும்படியாக, எழுவகைத்தோற்றமாய், அவற்றின் உயிராய், உயிரில் உணர்வாய், உணர்வில் அறிவாய், அறிவில் ஆனந்தமாய், ஆனந்தத்தில் நாதமாய், நாதத்தில் கீதமாய், கீதத்தில் லயமாய் ஆனந்த நர்த்தனம் செய்து உலகை பரிபாலிக்கும் எல்லாம் வல்ல பெருமானின் திருவருளை வேண்டுகிறேன்.

மு. ஆபிரகாம் பண்டிதர்.



# பூர்வ இசைத்தமிழில் காணப்படும் சில அரும்பத விளக்கமும் முக்கிய குறிப்புக்களும்.

1. முத்தமிழ். இயல் இசை நாடகமென்னும் மூவகைத் தமிழ்.

2. இசைத்தமிழ். சுரம், சுருதி, இராகம் என்னும் மூன்றின் இலக்கணங்களும் பன்னீராயிரம் ஆதி இசைகளும் பண்களும்.

3. இசை. பண், சுரம், காமரப்பாட்டு, கானம், கொளை, வரிகந்திருவம், கீதம், இராகம், கேயம், நாதம் என அழைக்கப் பெறும்.

4. ஏழிசை. 1. குரல் (ச) சட்ஜமம் 2. துத்தம் (ரி) ரிஷபம் 3. கைக்கிளை (க) காந்தாரம் 4. உழை (ம) மத்திமம் 5. இளி (ப) பஞ்சமம் 6. விளரி (த) தைவதம் 7. தாரம் (நி) நிஷாதம்.

5. ஏழிசை பிறக்கும் இடம். மிடற்றால் குரல், நாவினால் துத்தம், அண்ணத்தால் கைக்கிளை, சிரத்தால் உழை, நெற்றியால் இளி, நெஞ்சால் விளரி, மூக்கால் தாரம் பிறக்கும்.

6. பாலை. பகுப்பு அல்லது வகை. அது ஆயப்பாலை, வட்டப்பாலை, திரிகோணப்பாலை, சதுரப்பாலை என நான்கு வகைப்படும்.

7. ஆயப்பாலை. ஒரு இராசி வட்டத்தில் சப சப முறையாக வல முறையாய் வரும் அரை அரையான பன்னிரு சுரங்களும், சம சம வாக இடமுறையாய் வரும் பன்னிரு சுரங்களும் அவைகளில் கிரக மாற்றும்பொழு துண்டாகும் செம்பாலை, படுமலைப்பாலை, செவ்வழிப்பாலை, அரும்பாலை, கோடிப்பாலை, விளரிப்பாலை, மேற்செம்பாலை முதலிய ஏழுபாலைகளும், மற்றும் சிறு பாலைகளும் உண்டாகும் விதத்தைச் சொல்லும் முறை.

8. வட்டப்பாலை. ஒரு இராசி வட்டத்தில் சப சம முறையில் வரும் பன்னிரு அரைச் சுரங்களையும் இரண்டிரண்டு அலகாகப் பிரித்து 24 அலகுகளாக்கி விளரி கைக்கிளையில் ஒவ்வொரு அலகு குறைத்துக் கமகமாய் வாசிக்கும் மருதம் குறிஞ்சி நெய்தல் பாலை என்னும் நால்வகை யாழ்களையும் அவை ஒவ்வொன்றி லுண்டாகும் அகநிலை, புறநிலை, அருகியல், பெருகியல் போன்ற 16 ஜாதிப் பண்களையும்பற்றிச் சொல்லும் முறை.

9. திரிகோணப்பாலை. ஒவ்வொரு அலகில் கமகமாய்ப் பாடும் வட்டப்பாலை முறையைப் போல் ½ அலகு கமகமாய்ப் பாடும் முறை.

10. சதுரப்பாலை. திரிகோணப்பாலை முறையைப் போல் சப சம முறையில் வரும் இரண்டு சுரங்களில் கால் கால் அலகு கமகமாய் வாசிக்கும் முறை.

11. ஆயப்பாலைப் பண்கள். ஆயப்பாலையில் பிறக்கும் இராகம், அது ஏழு விதமாம். அவை செம்பாலைப்பண், படுமலைப்பாலைப்பண், செவ்வழிப்பாலைப்பண், அரும்பாலைப்பண், கோடிப்பாலைப்பண், விளரிப்பாலைப்பண், மேற்செம்பாலைப்பண் என்று சொல்லப்படும். அவைகள், ச, ரி, க, ம, ப, த, நி, என்ற ஏழு எழுத்துக்களையும் முறையே கிரகம் மாற்றிச் சொல்லும்பொழுது உண்டாகும் இராகங்களாம். அவைகளைத் தற்காலத்தில் முறையே சங்கராபரணம், கரகரப்ரியா, தோடி, கல்யாணி, ஹரிகாம்போதி, பைரவி, சுத்த தோடி இராகங்களாக வழங்குகிறோம்.

12. பெரும்பண்கள். நான்கு விதமாம். அவை மருதப்பண், குறிஞ்சிப்பண், நெய்தற் பண், பாலைப்பண் என்பன. அவைகளை மருதயாழ், குறிஞ்சியாழ், நெய்தல்யாழ், பாலையாழ் எனவும் கூறுவர்.

13. மருதயாழ். குரலே குரலாக ஆரம்பிக்கும்பொழுது உண்டாகும் செம்பாலைப்பண் ணில் விளரி கைக்கிளைகளில் ஒவ்வொரு அலகு குறைத்துக் கமகமாய்ப் பாடுவது.

14. குறிஞ்சியாழ். உழை குரலாக அதாவது மத்திமத்தை சட்ஜமாக ஆரம்பித்துப் பாடும் அரும்பாலைப் பண்ணில் விளரி கைக்கிளைகளில் ஒவ்வொரு அலகு குறைத்துப் பாடுவது.

15. நெய்தல்யாழ். இளி குரலாகப் பாடும் கோடிப்பாலைப் பண்ணில் விளரி கைக்கிளை களில் ஒவ்வொரு அலகு குறைத்துக் கமகமாய்ப் பாடும் இராகம்.

16. பாலையாழ். தாரம் குரலாகப் பாடும் மேற்செம்பாலையில் விளரி, கைக்கிளைகளில் ஒவ்வொரு அலகு குறைத்துப் பாடப்படுவதால் வட்டப்பாலையின் உட்பிரிவாக அடங்கும்.

17. ஜாதிப்பண்கள். அகநிலை, புறநிலை, அருகியல், பெருகியல் என நான்கு. இவை காலும், மருதம், குறிஞ்சி, நெய்தல், பாலை என்னும் நால்வித யாழ் பேதத்தால் பதினாறு வகை யாகும். அவை அகநிலை மருதம், புறநிலை மருதம், அருகியல் மருதம், பெருகியல் மருதம், அகநிலைக் குறிஞ்சி, புறநிலைக் குறிஞ்சி என்றாற் போல அந்தந்த யாழின் பெயர்களை அடுத்து வரும்.

18. அகநிலை. ஒவ்வொரு யாழின் ஆரம்ப சுரத்தில் வரும் இராகமே அகநிலையாம்.

19. புறநிலை. நால்வகை யாழ்களின் ஆரம்ப சுரத்திற்கு நான்காவதான நட்பு நரம்பில் தொடங்கும் இராகமாம். ச – க வைப்போல்.

20. அருகியல். நால்வகை யாழின் ஆரம்ப சுரத்திற்கு (ச – ப) வைப்போல் இணையாக வரும் சுரத்தில் ஆரம்பிக்கும் இராகங்களாம். இது (ச – ப) முறையாம்.

21. பெருகியல். நால்வகை யாழ்களில் ஆரம்பிக்கும் சுரத்திற்கு முடிந்த சுரமாக வரும் சுரத்தில் துவங்கும் இராகங்களாம். ப – நி யைப் போல்.

22. குரல் இளியாய். என்றது ச,-ப,-ச,-ப முறையாய் வலமுறை திரிதலுக்குப் பெயர்.

23. உழை குரலாய். என்பது ம – ச, ம – ச வாக இடமுறை திரிதல்.

24. மூவகை இயக்கு. வலிவு, மெலிவு, சமன் என்னும் மூன்று ஸ்தாயிகள். வலிவு தார ஸ்தாயி, மெலிவு மந்த்ர ஸ்தாயி, சமன் மத்திம ஸ்தாயி.

25. பண். ஏழு சுரங்களுள்ள சம்பூர்ண இராகம். பாட்டிற்குப் பண் என்று சொல்வர்.

26. பண்ணியம். ஆறு சுரங்களுள்ள இராகம்.

27. திறம். ஐந்து சுரங்களுள்ள இராகம்.

28. திறத்திறம். நான்கு சுரங்களுள்ள இராகம். இந்நான்கையும் தற்காலத்தில் முறையே சம்பூர்ணம், ஷாடவம், ஔடவம், சுவராந்தம் என வழங்குகின்றனர்.

29. ஆளத்தி. இராக ஆலாபனம் செய்தல். இது காட்டாளத்தி, நிறவாளத்தி, பண்ணாளத்தி என மூன்று வகைப்படும்.

30. ஆளத்தியின் எழுத்து. மவ்வும், தவ்வும், நவ்வும், ஐந்து நெடிலும், ஐந்து குறிலும்.

31. குயிலுவக் கருவி. சங்கீதத்திற் குதவும் யாழ், குழல், தண்ணுமை முதலிய வாத்தியங்கள்.

32. யாழ் உறுப்புக்கள். கோடு, மாடகம், நரம்பு, பத்தர், ஆணி.

33. யாழ் வகை. பேரி யாழ், மகர யாழ், சகோட யாழ், செங்கோட்டி யாழ், நாரத யாழ், தும்புரு யாழ், கீசக யாழ், மருத்துவ யாழ் முதலியன. கருணாமிர்தசாகரம் 579-ம் பக்கம் பார்க்க.

34. குழல். சிலப்பதிகாரத்தில் வங்கியம் என வழங்கப்பெறும். மற்ற விபரம் கருணாமிர்த சாகரம் 594-ம் பக்கத்தில் காண்க.

35. தண்ணுமை. மிருதங்கம், மத்தளம் போன்ற ஓசைக் கருவிகள்.

36. கண்டம். மிடற்றுப் பாடல் அல்லது வாய்ப்பாட்டு.

37. பாணி. தாளம். அது நாற்பத்தொரு வகைப்படும். கருணாமிர்த சாகரம் 609 பக்கம்.

38. பாணியின் அங்கங்கள். கொட்டு அரை மாத்திரை ; அசை ஒரு மாத்திரை ; தூக்கு இரண்டு மாத்திரை ; அளவு மூன்று மாத்திரை.

39. நரம்பு. பன்னிரு இராசிகளில் நின்ற சுரங்களாம்.

40. நின்ற நரம்பு. எடுத்துக்கொண்ட சுரம். இச் சுரமே முடிந்த சுரமாகவும் வருவதினால் இதற்குப் பின்னுள்ள நரம்புகளே ஒன்று, இரண்டு முதலிய சுரங்களாகச் சொல்லப்படுகின்றன. நின்ற நரம்பு சட்ஜமானால் முடிந்த பன்னிரண்டாம் நரம்பு மேல் சட்ஜமாயிருக்கும்.

41. இணை நரம்பு அல்லது இணைச்சுரம். நின்ற நரம்பிற்கு ஏழாவது இடத்தில் வரும் சுரம் இணைச்சுரம். உதாரணம்—ஆதார சட்ஜத்திற்கு ஏழாம் இடமாகிய பஞ்சமம் இணைச் சுரம்.

42. கிளைச்சுரம். நின்ற நரம்பிற்கு ஐந்தாம் இடத்தில் வரும் சுரம் கிளைச்சுரம். உதாரணம் : சட்ஜத்திற்கு ஐந்தாம் இடமாகிய சுத்த மத்திமம் கிளைச்சுரமாகும்.

43. நட்புச் சுரம். நின்ற நரம்பிற்கு நான்காம் இடத்தில் வரும் சுரம் நட்புச்சுரம். உதாரணம் : சட்ஜத்திற்கு நான்காம் இடமாகிய அந்தரகாந்தாரம் நட்புச் சுரமாகும்.

44. பகைச்சுரம். நின்ற நரம்பிற்கு ஆறும் மூன்றும் பகை. நின்ற நரம்பிற்கு மூன்றும் இடத்திலும் ஆறும் இடத்திலும் வரும் சுரங்கள் பகைச்சுரங்கள். உதாரணம் : சட்ஜத்திற்கு மூன்றும் இடமாகிய சாதாரண காந்தாரமும் ஆறுமிடமாகிய பிரதி மத்திமமும் பகைச்சுரங்களாகும். ஆறும் சுரம் ஆரோகண வழியிலும், அவரோகண வழியிலும் பகைச்சுரமாகும்.

45. கூடம். பகைச்சுரம் கூடமெனினும் பகையெனினு மொக்கும். கூடமென்பது மழுங்கி இசைப்பது அல்லது தன்னோசை மழுங்கல். வாயினல் சொல்லப்படும்பொழுது துவங்கின சுரத்திற்கு இசை பொருந்தாமல் மழுங்கிப் பாடப்படும்.

46. ஸ்புடம். ஒரு இராகத்தின் ஆரோகணம், அவரோகணம், சுருதி பேதம் முதலிய வைகளைக் கவனித்து, ஒவ்வொரு சுரத்திற்கும் ச-க, ச-ம, ச-ப பொருத்தம் பார்த்து, ஸ்புடம் செய்து

அல்லது சுத்தம் செய்து பொருந்தும் சுரத்தொடர்களையும், இணைக்கும் சுரங்களையும் வரிசையாக எழுதி அதிலிருந்து இராகம், ஆலாபனம், கீதம், கீர்த்தனம் முதலியவை செய்வதற்கு உதவியாயிருக்கும் இசை யிலக்கண முறை.

47. ஜீவசுரம். ஒரு இராகத்தின் ஆரோகண, அவரோகண சுரங்கள் தெரிந்து, அதில் வாதி சம்வாதியான இணை, கிளை, நட்புப் பொருத்தமுள்ள தொடர்களை மந்த்ரஸ்தாயி பஞ்சமத்திலிருந்து தாரஸ்தாயி பஞ்சமம் வரை ஆரோகணமாயும், அவரோகணமாயும் ஸ்புடக் கணக்கின்படி கிடைக்கும் தொடர்களை வரிசையாக எழுதவேண்டும். ஒவ்வொரு சுரத்திற்கும் வாதி சம்வாதிப் பொருத்தமான தொகுதி இவ்வளவென்று கணக்கிட்டுப் பார்க்க, அதில் அதிக பாத்தியமுள்ள சுரமே ஜீவசுரமாகும்.

48. அமுத வைப்பு. சில இராகங்களில் ஜீவசுரமே அமுத வைப்பாகும். மற்றும் சில இராகங்களில் ஜீவசுரத்தின் இணை, கிளையான இடத்தில் அமுதவைப்பு நிற்கும். திரிகோணப்பாலை· சதுரப்பாலையில் வரும்.

49. பாடலமுதம். பாட்டின் மிக இனிமையான இடமே பாடலமுதம். ஒரு இராகத்தின் முக்கியமான சுரம் ஜீவசுரமாகும். சில இராகங்களில் ஜீவசுரமே பாடலமுதமாக வரும். உதாரணமாக, கைகவசி, பவப்ரியா முதலிய இராகங்களில் காணலாம். ஆனால் தண்டியலங்காரம் சொல்லணியில், (173).

"கூடம் விரவிக் குறைநிலத்தா னத்தியன்ற
பாட லமுதம் பருகினன்—ஆடுகின்ற
ஊசலயற் றேன்றி யொளியிழைக்கு நாணளித்த
ஆசில் வடிவே லன்."

இக்கு ஆறும் நரம்பாகிய பகையோடு கூடிக் குறைநிலத்தானத்தியன்றதனை பாடலமுதம் என்றது, கலைமலை வாயினும் புனைந்துரையாதலிற் பொருந்துவதாயிற்று. இதைக் கவனிக்கும் பொழுது வட்டப்பாலையின் இராகங்களில் இரண்டலகுகளைக் குறைத்துப் பாடலமுதம் பருகினர்கள் என்று தெரிகிறது. கூடம் விரவி அதாவது ஆறும் நரம்பாகிய பகைச்சுரத்தோடு கூடி, குறைநிலத் தானத் தியன்ற பாடலமுதம் பருகினன் என்றதைக் கவனிக்கும்பொழுது, நம் அனுபவத்தில் பாடிக்கொண்டிருக்கும் வட்டப்பாலை இராகங்களை ஸ்புடம் எழுதிக் கவனித்தால், குறைந்த சுரங்களில் பாடலமுதம் வருவதைக் கண்டுகொள்ளலாம். சஹானா, பியாகடை, முதலிய இராகங்களில் குறைந்த சுரங்களில் பாடலமுதம் வருவதையும், சுரங்கள் ஒரு அலகு குறைந்து அல்லது ஒரு அலகு கூடி வருவதால் அவைகள் வட்டப்பாலை இராகங்களாக இருப்பதையும் நன்றாய்த் தெரிந்துகொள்ளலாம். (கருணாமிர்தசாகரம் முதற்புத்தகம் 715-ம் பக்கத்தில் கலைமலையமைதியைப் பற்றி சொல்லப்பட்டிருக்கிறது.)

50. கீதம். ஒரு இராகத்தின் இலக்கணங்களைக் கண்டுகொள்ள உதவியாயிருக்கும் முறை. அது மூன்று வகைப்படும். சஞ்சாரி கீதமென்றும் இராக இலட்சண கீதமென்றும் இராக இலக்கண இலட்சண கீதமென்றும் சொல்வார்கள். சஞ்சாரி கீதமும் இலட்சண கீதமும் சேர்ந்து வருவதுதான் இராக இலக்கண இலட்சண கீதமெனப்படும்.

51. கீர்த்தனம். தெய்வத்தைத் துதி தோத்திரம் பிரார்த்தனை புகழ் சொல்லிப் பாடுதல். இது பல்லவி, அநுபல்லவி, சரணம் என மூன்று கண்டிகையாக வரும். சில கீர்த்தனங்களில் எத்துக்கடை சுரமும் வரும்.

52. பதம். இது கீர்த்தனை போன்றது. தெய்வத்தைப் பக்திசெய்ய சிங்கார ரசமாகப் பாடுவதாகும்.

53. சுரஜதி. பல்லவி, அநுபல்லவி, சரணங்கள் 3, 4, 5, உள்ளவாகவும் பக்திரசமான சாகித்தியங்களுடையவாகவு மிருக்கும். சுரஜதியில் அநேகமாய் சாகித்தியம் ஒவ்வொரு சுரத்திற்கும் ஒவ்வொரு எழுத்தாக வரும். இது இராக சஞ்சாரம் முழுதும் வரப்பெற்று சுர அடுக்குகளாலும், சுர வரிசைகளாலும், சொற்கட்டு, சாகித்தியம், சுரம், தாள நடை யாவும் சேர்ந்து வெகு அழகாக அமைந்திருக்கும். சங்கீதம் கற்போர்க்கு இதைப் பாடம் பண்ணுவதால் சுர ஞானமும் தாள ஞானமும் உண்டாக அதிகப் பிரயோஜனமாயிருக்கும்.

54. வர்ணம். இது பல்லவி அநுபல்லவி சரணம் சாகித்தியத்தோடு அகார உகாரங்கள் பெற்று வரும். அனுபல்லவிக்கு எத்துக்கடை சுரம் வந்து பல்லவியைப் பாடி முடித்து அதன்பின் சரணத்தைப் பாடிப் பின் மற்ற சரணங்கள் சுரங்களாகப்பாடி ஒவ்வொரு சரணம் முடிந்ததும் முதல் சரணத்தை சாகித்தியத்தோடு பாடி முடிப்பதாகும். சில வர்ணங்களில் சரணங்கள் 3, 4, 5, 6 ஆக வரும். பின்னுள்ள சரணங்கள் 4, 8, 12, 16 ஆன அதிக ஆவர்த்தங்களோடு வரும். சில வர்ணங்கள் முழுவதும் சாகித்தியம் பெற்று வரும். வர்ணங்களில் பலவகையான சுர அடுக்குகளையும் தாள ஜாதிகளைக் காட்டும்படியான சொற்கட்டுகளையும் சுர வரிசைகளையும் தாள வரிசைகளையும் மந்த்ர, மத்திய, தார ஸ்தாயிகளின் இராக சஞ்சாரங்களையும் வெகு அழகாகக் காட்டும் முறை; இரண்டாம் மூன்றும் காலத்தில் திரிகால வர்ணமாகப் பாடுவர். பத வர்ணமென்றும், சவுக்க வர்ணமென்றும், தான வர்ணமென்றும், சாதாரண வர்ணமென்றும் சொல்வார்கள். இதன் சாகித்தியம் தெய்வத்தைச் சிங்கார ரசத்தில் பாடுவதாகும்.

55. பல்லவி. பல்லவி என்ற பதத்திற்கு பத லய விந்யாசம், அதாவது பதத்தை லயம் தவறாமல் தாளத்தில் அடக்கி கற்பனையாகப் பாடுவதாகும். இது இராக ஆலாபனம் செய்வதுபோல் பல்லவியில் அமைக்கப்பட்டிருக்கும் பதங்களைச் சேர்த்துத் தாளத்துடன் சவுக்க, மத்திம, துரித காலமும் கலந்து மனோதர்மமாகப் பாடுவதாகும். பல்லவியில் வரும் வார்த்தைகளின் எழுத்துக்களை அகார, இகார, உகாரங்களைக் கலந்து தாளத்தோடு நிரவிப் பாடுவதினால் இதை நிரவலென்பார்கள். இதற்குப் பின் இராக பாவத்துடன் சுரங்களைச் சவுக்க காலத்தில், தாளலயத்துடன் பலவிதமாக விஸ்தாரம் செய்து, பின்பு மத்திம காலத்திலும், துரித காலத்திலும் இராக சஞ்சாரம் கெடாமல் சுரங்களைத் தெளிவாக உச்சரித்துக் கற்பனையாக அழகாய்ச் சுரங்கள் பாடி, தாள அங்கங்களின் மேன்மையான பாகங்களை அதில் காட்டி லயஞானத்தோடு பாடுவதாகும். இதில் அநேக விதங்கள் உண்டு. சங்கீதக் கலையில் மிகுந்த சுர லய ஞானத்தில் தேர்ச்சிபெற்ற வித்துவான்களின் திறமையை இதில் காணலாம்.

56. இசையோர்தல். ச–ப முறையில் சுருதி சேர்த்து சுரங்கள் ஓசையில் சரியாய் இருக்கின்றனவா வென்று ஆராய்தல்.

57. இசை மரபு. இடைச் சங்ககாலத்திலுள்ள இசைத் தமிழ் நூல்களில் ஒன்று.

58. இசை நுணுக்கம். தமிழ் இசை நூல்களில் ஒன்று.

59. இசை நுண்மை. நுட்பமான ஓசை. ஒரு ஸ்தாயியில் 96-இல் ஒன்றான ஓசைக்குப் பெயர், அல்லது ஒரு சுரத்தின் எட்டில் ஒன்றான ஓசைக்குப் பெயர். இசை நுண்மைக்கு மேல் ஓசையின் பேதம் தெரியக்கூடிய சுருதிகளில்லையென்பது காணப்படுகிறது.

60. சுரம். கோவை அல்லது நரம்பு. சுரங்கள் ஏழு. சுர ஸ்தானங்கள் 12. ஆயப்பாலையில் சுர ஸ்தானங்கள் 12.

61. சுருதி. அல்லது அலகு. 12 சுரங்களின் உட்பிரிவு. நம் கர்நாடக சங்கீதம் அதி நுட்ப சுருதிகளுடையது. 22 சுருதிகளிலும் அடங்கினதில்லை. வட்டப்பாலை, திரிகோணப்பாலை, சதுரப்பாலையின் சுரங்களான 24, 48, 96 போன்ற நுட்ப சுருதிகள் வரும்போதுதான் நம் கர்நாடக இராகங்கள் விசேஷ அழகுடன் விளங்குகின்றன. பொற்சடகத்தில் 756, 757, 758 பக்கங்களில் நம் அனுபத்தில் பாடிவரும் இராக அட்டவணைகளில் வரும் ஆரோகண, அவரோகண சுரங்களைக் கவனித்தால் இணை கிளையான சுரங்களில் சுருதிகள் கூடியும் குறைந்தும் (கமகம்) அல்லது கம்பிதம் வருவதினால், நம் தென்னிந்திய சங்கீதம் சாஸ்திர முறையுள்ளதென்று தெரிந்துகொள்ளலாம். சங்கீத சுரஞானமுள்ள அறிவுடையோர் இதை ஆராய்ந்து பார்க்குங்கால் அறிந்துகொள்வார்கள்.

62. சுரப்படுத்தல். ஒரு பாட்டிற்கு சுரம் குறித்தல். ஒரு இசைக்கு சுரம் எழுதி அதன் கீழ் சாகித்யத்தை ஒழுங்காய் எழுதி தாள அச்சர கோடுகளுக்குள் அமைத்து குறில் நெடில் இரண்டாம் மூன்றாம் காலத்தைக் காட்டி எழுதலாகும். சுரத்திற்கு கீழ் ஒரு கோடிட்டால் <u>சரிகம</u> இரண்டாம் காலத்தையும் இரண்டு கோடிட்டால் <u>சரிகம</u> இரண்டாம் காலத்தையும் ச- இந்த அடையாளம் 1 மாத்திரை அளவையும் சுரங்களுக்கு மேலும் கீழும் உள்ள புள்ளிகள் ஸ்தாயியையும் குறிக்கும்.

63. சாகித்தியம். ஒரு இசைக்கு பாட்டு எழுதுவது. இசையின் ரசபாவமறிந்து அதற்கேற்ற பொருள் அமைத்து குறில் நெடில் கவனித்து வல்லினம் மெல்லினம் தெரிந்து வரப் பெறு எழுத்துக்கள் நீக்கி அசை எதுகை மோனை வைத்த பாடல்கள்.

64. இராகச்சாயை. ஸ்புடம் எழுதிய துண்டுகளில் சில முக்கியமான தொடர்களை எழுதி இராக சஞ்சாரம் பாடிப் பார்த்தல் இராகச் சாயையாகும்.

மேற்சொல்லிய குறிப்புக்களைக் கவனித்தும், பின்பு எழுதிக் காட்டியிருக்கும் ஸ்புடம், கீதம், கீர்த்தனம் முதலியவைகளை நன்கு கவனித்தும் கேட்டதையே கேட்டுப் பழமையான இராகங்களில் மாத்திரமல்ல, புதிது புதிதான அநேக அழகான இராகங்களில் கீதம், கீர்த்தனம், வர்ணம், சுரஜதி முதலியன செய்துபார்த்துத் தமிழ் இசையில் ஆசையுள்ளோரும், சங்கீத வித்வான்களும், சங்கீத அன்புடையோரும் தம் அனுபவத்திற்குக் கொண்டுவந்து விருத்தி செய்து புதிது புதிதான இன்னிசைப் பாடல்களால் ஆனந்தமூர்த்தியின் இரு பொற்பாத கமலங்களை போற்றிப் புகழ்ந்து துதி செய்ய வேண்டிக்கொள்ளுகிறேன்.

மு. ஆபிரகாம் பண்டிதர்.



இசை இலக்கணத்தைக்கொண்டு ஒரு இராகத்தை ஸ்புடம் செய்யும் விபரம்.



# I. மாயாமாளவ கௌளை.

15-வது மேளக் கர்த்தா

262 26 62 262
சரிகமபதநிச சநிதபமகரிச

## வாதி சம்வாதிப் பொருத்தமுள்ள தொகுதிகளும் அவைகளை இணைக்கும் விதமும்.

| நெ. | ஆரோகணம். | இணைக்கும் சுரம். | நெ. | அவரோகணம். | இணைக்கும் சுரம். |
|---|---|---|---|---|---|
| 1 | ப த நீ ... | த | 22 | ப் ம் க் ரி் ச்ா | ரி் க் |
| 2 | ப த நி சா ... | நி | 23 | ம் க் ரீ ... | க் |
| 3 | த நி சா ... | நி | 24 | ம் க் ரி் ச்ா ... | ரி் |
| 4 | த நி ச ரீ ... | ச | 25 | க் ரி் ச்ா ... | ரி |
| 5 | நி ச ரி கா ... | ரி | 26 | க் ரி ச் நீ ... | ச் ரி் க் |
| 6 | ச ரி கா ... | ரி | 27 | ரி் ச் நி தா ... | நி |
| 7 | ச ரி க மா ... | க | 28 | ச நி தா ... | நி |
| 8 | ச ரி க ம பா | ம க | 29 | ச நி த பா ... | த நி |
| 9 | ரி க மா ... | க | 30 | ச நி த ப மா | ப த |
| 10 | ரி க ம ப தா | ப ம | 31 | நி த பா ... | த |
| 11 | க ம ப தா ... | ப ம | 32 | நி த ப ம கா | ம ப |
| 12 | க ம ப த நீ ... | த ப | 33 | த ப ம கா ... | ம ப |
| 13 | ம ப த நி ச்ா | நி த | 34 | த ப ம க ரீ ... | க ம |
| 14 | ப த நீ ... | த | 35 | ப ம க ரி சா | ரி க |
| 15 | ப த நி ச்ா ... | நி | 36 | ம க ரீ ... | க |
| 16 | த நி ச்ா ... | நி | 37 | ம க ரி சா ... | ரி |
| 17 | த நி ச் ரீ ... | ச் நி த | 38 | க ரி சா ... | ரி |
| 18 | நி ச ரி் க்ா ... | ரி் | 39 | க ரி ச நீ ... | ச ரி க |
| 19 | ச் ரி் க்ா ... | ரி் | 40 | ரி ச நி தா ... | நி |
| 20 | ச் ரி் க் ம்ா ... | க் ரி் | 41 | ச நி தா ... | நி |
| 21 | ச் ரி் க் ம் ப்ா | ம் | 42 | ச நி த பா ... | த நி |
| | நி ச ரீ ... | | 43 | ச நி த ப மா | ப த நி ச |
| | ரி ச நீ | | | | |
| | 2-வது சுரப் பொருத்தத்தில் இவ்விரண்டு தொகுதிகளும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. | | | | |

## No. 1.

## மேற்கண்ட தொடர்களில் உத்தம பொருத்தத் தொகுதிகள்.

| நெ. | ஆரோகணம். | இணைக்கும் சுரம். | நெ. | அவரோகணம். | இணைக்கும் சுரம். |
|---|---|---|---|---|---|
| 1 | ச ரி க ம பா | ம க | 6 | ப் ம் க் ரி் ச்ா | ரி் |
| 2 | ரி க ம ப தா | ப ம | 7 | ச் நி த ப மா | ப த |
| 3 | க ம ப த நீ ... | த ப | 8 | நி த ப ம கா | ம ப |
| 4 | ம ப த நி ச்ா | ம் நி | 9 | த ப ம க ரீ | க ம ப த |
| 5 | ச் ரி் க் ம் ப்ா | ம் | 10 | ப ம க ரி சா | ரி |
| | | | 11 | ச நி த ப மா | ப த நி ச |

## No. 2.

## மத்திம பொருத்தத் தொகுதிகள்.

| நெ. | ஆரோகணம். | இணைக்கும் சுரம். | நெ. | அவரோகணம். | இணைக்கும் சுரம். |
|---|---|---|---|---|---|
| 1 | ச ரி க மா ... | க ரி | 7 | ம் க் ரி் ச்ா ... | ரி் |
| 2 | க ம ப தா ... | ப ம | 8 | க் ரி் ச் நீ ... | ச் |
| 3 | ப த நி ச்ா ... | ச் நி | 9 | ரி் ச் நி தா ... | நி |
| 4 | த நி ச் ரீ ... | ச் | 10 | ச் நி த பா ... | த நி |
| 5 | நி ச் ரி் க்ா ... | ரி் | 11 | த ப ம கா ... | ம ப |
| 6 | ச் ரி் க் ம்ா ... | க் | 12 | ம க ரி சா ... | ரி |
| | | | 13 | க ரி ச நீ ... | ச |
| | | | 14 | ரி ச நி தா ... | நி |
| | | | 15 | ச நி த பா | த நி ச |

## வாதி சம்வாதிப் பொருத்தமில்லாத தொகுதிகள்.

| நெ. | ஆரோகணம். | | நெ. | அவரோகணம். | |
|---|---|---|---|---|---|
| 1 | ரி க ம பா ... | | 8 | ப் ம் க்ா ... | |
| 2 | க ம பா ... | | 9 | ப் ம் க் ரீ ... | |
| 3 | ம ப தா ... | | 10 | ம் க் ரி் ச் நீ ... | |
| 4 | ம ப த நீ ... | | 11 | க் ரி் ச் நி தா | |
| 5 | ப த நி ச் ரீ ... | | 12 | ரி் ச் நி த பா | |
| 6 | த நி ச் ரி் க்ா | | 13 | நி த ப மா ... | |
| 7 | நி ச் ரி் க் ம்ா | | 14 | த ப மா ... | |

## No. 3.

## அதம பொருத்தத் தொகுதிகள்.

| நெ. | ஆரோகணம். | இணைக்கும் சுரம். | நெ. | அவரோகணம். | இணைக்கும் சுரம். |
|---|---|---|---|---|---|
| 1 | ச ரி கா ... | ரி ச | 7 | ம் க் ரீ ... | க் ம் |
| 2 | ரி க மா ... | ம | 8 | க் ரி் ச்ா ... | ரி் |
| 3 | ப த நீ ... | த ப | 9 | ச் நி தா ... | நி ச் |
| 4 | த நி ச்ா ... | நி த | 10 | நி த பா ... | த ப |
| 5 | நி ச் ரீ ... | ச் நி | 11 | ம க ரீ ... | க ம |
| 6 | ச் ரி் க்ா ... | க் | 12 | க ரி சா ... | ரி க |
| | | | 13 | ரி ச நீ ... | ச ரி |
| | | | 14 | ச நி தா ... | நி சா |

| | | தொ. | No. 1. தொகுதியின் இராகச்சாயைச் சுருக்கம். | இணைக்கும் சுரம். | தொ. | No. 2. தொகுதியின் இராகச்சாயைச் சுருக்கம். | இணைக்கும் சுரம். | தொ. | No. 3. தொகுதியின் இராகச் சாயைச் சுருக்கம். | இணைக்கும் சுரம். |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | 1 | சரிகமபா | மக | 1 | சரிகமா ... | கரி | 1 | சரிகா ... | ரிச |
| | | 2 | ரிகமபதா | ப | 2 | கமபதா ... | பம | 2 | ரிகமா ... | கம |
| | | 3 | மபதநிச்ா | நி | 3 | பதநிச்ா ... | நித | 3 | பதநீ ... | தப |
| | | 4 | ச்ரி்க்ம்ப்ா | ம் | 4 | நிச்ரிக்ா ... | ரி் | 4 | தநிச்ா ... | நித |
| | | 5 | ப்ம்க்ரி்ச்ா | ரி் | 5 | ச்ரி்க்ம்ா ... | க் | 5 | நிச்ரீ ... | ச்நி |
| | | 6 | ச்நிதபமா | பத | 6 | ம்க்ரி்ச்ா . | ரி்க | 6 | ச்ரி்க்ா ... | க் |
| | | 7 | நிதபமகா | மப | 7 | ரி்ச்நிதா ... | நி | 7 | ம்க்ரீ .. | க்ம் |
| | | 8 | தபமகரீ | கமபத | 8 | தபமகா ... | மப | 8 | க்ரி்ச்ா ... | ரி் |
| | | 9 | பம கரிசா | ரி | 9 | மகரிசா ... | ரி | 9 | ச்நிதா ... | நிச் |
| | | 10 | சநிதபமா | பதநிசா | 10 | கரிசநீ ... | ச | 10 | நிதபா ... | ம |
| | | | | | 11 | ரிசநிதா ... | நி | 11 | கரிசா ... | ரி |
| | | | | | 12 | சநிதபா ... | தநிசா | 12 | சநிதா ... | நிச |
| 11565565<br>சரிகமபதநி | | | | | | | | | | |

## கீதம்—1.

சாப்புத்தாளம்.

| 3 | 4 | 3 | 4 | 3 | 4 | 3 | 4 |
|---|---|---|---|---|---|---|---|
| ச்ா ச்<br>மா க<br>தா த | ச் நி தா<br>க ம ப த<br>நி ச் ரீ | நி நி த<br>நீ ச<br>சா நி | ப ம கா<br>ரி் ச் நீ<br>தா பா | க ம ப<br>ச் க் ரி்<br>மா ப | தா த ப<br>ச நீ ச்<br>த த நி நி | ம கா<br>ம் க் ரி்<br>ச் ச்ா | ரி ரி க க<br>ச்ா ரீ<br>- - - - |
| தா த<br>த தா<br>ரி் க்ா<br>த பா | த ப ம க<br>ரி் ரி் ச் ச்<br>ரி் ச ரி் க்<br>த ச நி த | ரீ —<br>நி நி த<br>ம் ப்ா<br>பா ப | ம க ரீ<br>தா க க<br>ம் க் க் ரி்<br>ம க ரீ | நி ச ரி<br>ம ம ப<br>ரி் ச்ா<br>ச ரி க | — ரி க ம<br>ப த தா<br>ரி் ச் நீ<br>ரி க ம ப | ப தா<br>நி ச் ரி்<br>ச் ச் நி<br>த நி த | தா ச் நி<br>க்ா ரி் ச்<br>தா நி நி<br>நி ச்ா - |
| கா க<br>ரி கா<br>க ரி ச | ரி ரி ச ச<br>ச ரி க ம<br>நீ த நி | — ச ரி<br>பா ம<br>ச ரீ | க மா —<br>க ரி சா<br>ச ரி கா | க ரி ச<br>சா ப<br>க ம ப | நீ ச நி<br>ம க ரி ச<br>த நீ நி | த ப த<br>— ச் நி<br>ச ரி ச் | நீ நி ச<br>த ப மா<br>ச்ா - - |

மாயாமாளவ கௌளை இராகத்தில் சட்ஜம் ஜீவசுரம்.

சட்ஜத்திற்கு அந்தர காந்தாரம் நட்பு சுரமாயும் சுத்த மத்திமம் கிளைச் சுரமாயும் பஞ்சமம் இணைச் சுரமாயும் மந்த்ரஸ்தாயி தைவதம் நட்பு சுரமாயும் ரிஷப நிஷாதங்கள் அனுவாதி சுரமாகவும் சட்ஜத்திற்குப் பொருத்தமுள்ள தொடர்கள் அதிகம் வருவதாலும் சட்ஜமே ஜீவசுரமாகும். ரிஷப, காந்தார, தைவத, நிஷாத சுரங்களெல்லாம் அநேகமாய் சம எண்ணிக்கையுள்ளதாயிருப்பதால் இந்த சுரங்கள் ரஞ்சனை யுள்ளவை.

# கீர்த்தனம்—1.

மாயாமாளவ கௌளை.] [திஸ்ரநடை ஆதிதாளம்.

பல்லவி.

குருநாதா வரம்தா வாஉன்
திருநாமம் துதிசெய்ய வேஎன்

அனுபல்லவி.

திருவாயே மலர்ந்தே நீயே
தருவாயே ஒருவா சகமே

சரணம்.

கருணா கரபர மனேஉன
திருபா தம்சரண் அடைந்தேன்
தருணமிது தரும துரையே
மாகதம் தினமுனைப் பாடிட.

| | 4 | 2 | 2 |
|---|---|---|---|
| | | **பல்லவி.** | |
| 1. | ச்சா நிசநித ததா தா - | ததா நிததபபம | கா - கா - |
| | குரு நா - தா - | வரம் தா | வா உன் |
| | கரிசா ரிச நீ சரி கா மா - | பபா பதநீ | தநி சா நிச ரீ |
| | திரு நா - மம் - | துதி செய் | ய - வே என் |
| 2. | ச்சா ரிச நித தநிச்ரிசநி தா - | ததா சநிதபமக | ரீ - சா - |
| | குரு நா - தா - | வரம் தா | வா உன் |
| | கரிசா ரிச நீ சரிகா மா - | பபா பத நீ | தநி சா நிச்க்ரி ரி |
| | திரு நா - மம் - | துதி செய் | ய - வே - |
| 3. | ச்சா தநிசரிசரி கரிசநித தா - | ததா சநிதப மக | ரீ - சா - |
| | குரு நா - தா - - | வரம் தா | வா உன் |
| | கரிசா ரிசநீ சரிகமபத நிச் ரீ | சநி தா பதநிசநித | தநிச்ரிசநி நிச்ரிகரிச |
| | திரு நா - மம் | துதி செய் | ய என் |
| | | **அனுபல்லவி.** | |
| 1 | ததா தநி ச்ரா நிசரிசசநி தா - | ச்ரிகா க்ரிரிசசநி | நீ - சா - |
| | திரு வா யே | மலர்ந் தே | நீ யே |
| 2. | ததா தநி சா நிச் ரீ தா - | சசா ச்ரிக்ரா | நீ சா |
| | திரு வா யே | மலர்ந் தே | நீ · யே |
| 3 | தபா பத நீ கமபத நி தா - | ச்ச்ா ச்ரிக்ம்ப்ம் | க்ரீ சா - |
| | திரு வா யே | மலர்ந் தே | நீ யே |
| | ச்சா ரிசநித சநிதப மா - | காம பதா | பதநீ தநிச்ா |
| | தரு வா - யே - | ஒரு வா - | ச - கம் |

### சரணம்.

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1. | ககா | மகரி | கரிச | நீ - | சசா | ரிசநிதத | தநீ | சா - |
| | கரு | ஞு - | க - | ர | பா | ம - | னே | உன் |
| | சரீ | கரிச | ரிநீ | நீ - | சரீ | சரிக | மா - | - - - |
| | திரு | பா | தம் | | சரண் | அடைந் | தேன் | - - - |
| 2. | மபா | தபமகரீ | கமகரிசரி | நீ - | சசா | ரிசசநிநித | தநிசரிசரி | நீ - |
| | கரு | ஞு - | க - | ர | பா | ம - | னே | உன் |
| | சரீ | கரிசநிதநி | சரிகமகரி | நீ - | சரீ | சரிக | மாபதா - | பா - |
| | திரு | பா - | த | - | சரண் | அடைந் | தே - | - |
| 1. | ததா | தநிச்ா | நிசரிசசநி | தா - | ச்ரிகா | கரிரிசசநி | நிநீ | சா - |
| | தரு | ணம் | இ | து | த ரு | ம | துரை | யே |
| 2. | ததா | தநிசா | நிசரீ | தா - | சசா | சரிகா | நிநீ | சா - |
| | தரு | ணம் | இ | து | த ரு | ம | துரை | யே - |
| 3. | தபா | பத நீ | கமபதநி | தா - | ச்சா | சரிகமபம | கரீ | சா - |
| | தரு | ணம் | இ | து | த ரு | ம | துரை | யே - |
| | ச்சா | ரிசநித | சநிதப | மா - | கா ம | பதா | பதநீ | தநி சா |
| | மா | க | தம் | | தீன | முனைப் | பா - | ட. |
| 4. | ரிநீ | சதா | நிபா | பதநீ | க்ரீ | ம்கரி | க்ரீ | சா |
| | தரு | ணம் | இது | - - | :தரு | ம | துரை | யே |
| | ரிகா | சரீ | நிசா | மா | காம | பதா | பத நீ | தநி சா |
| | மா | கதம் | - | - | தீன | முனே | பா | ட - |

### எத்துக்கடைசுரம்.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| ச்ச்ா | சநித | தநித | பா - | தாப | மகரி | மாக | ரிசா |
| சாரி | கரிக | மகம | பா - | சநித | பா - | நீத | பா - |
| தாநி | ச்ா - | க்ரி | ச்ா - | ம்க்ரி | ச்ா - | ப்ம்க் | ரிசா |
| தத்த | நிச்ா | பதநி | ச்சா | மபத | நிச்ா | ரிரிச | நீ - |
| க்ரிச | நீ - | காம | பதநி | நீத | பதநி | தபம | கா - |
| சரீ | கா - | நிசரி | கா - | நீத | பமக | தாப | மகரி |
| நிசா | ரீ - | தநிச | ரீ - | மாக | ரீ - | ரிகம | சரிக |
| மபம | பதப | தநித | ச்ரிக் | ரிச நி | சரிச | நி தநி | சநித |



# கீர்த்தனம்—2.

மாயாமாளவ கௌளை. ஆதிதாளம்.

பல்லவி.

தேவா உன்னை அதிகாலையில் துதிப்பேன்.

அனுபல்லவி.

காவா என்னை இந்நாள் முழுதும்

சரணம்.

பாவலர் நாவலர் போற்றும் நாதனே
பாடியே நாடியே மரகதம் வாழ்த்தி -

| 8 | 4 | 4 | 8 | 4 | 4 |
|---|---|---|---|---|---|
| 1. சா - பமகரி சா ரிச | நீ - சரி | கரி கா | மமா கமபத தபா | பதநீ | ச்ா சநிதப |
| தே - வா - உன் | - னை | - - - | அதி கா லையில் | துதிப்பே | - - ன் |
| 2. தா - தபமக ரீ ரிச | நீ - சரி | கரி கா | மமா கமபத தபா | பதநீ | ச்ா சநி த |
| தே வா உன் | - னை | - - | அதிகாலையில் | துதிப்பே | - - ன் |
| 3. தா - நிதபாதப மகரி | ரிச நீ - | சரிகரி கா | மமா கமபத தபா | பதநீ | ச்ா சநி த |
| தே வா - | உன் | னை - | அதிகா லையில் | துதிப்பே | - - ன் |
| 4. தா - ச்நிதபமக ரீ | ரிச நீ - | சரிகா ரிகமா | மமா கமபத தபா | பதநீ தநிசா | நிசரீ ரிசசா |
| தே வா - | உன் | னை - | அதிகா லையில் | துதிப்பே | - - ன் |
| 5. ரீ - சநிதபமக ரீ | கரிசா ரிசநீ | சரிகா ரிகமா | மமா கமபத நிசநிதபம | பதநிச தநிசரி | சநி சா - |
| தே வா | உன் | னை - | அதி கா லை யில் | துதிப்பே | - - ன் |

அனுபல்லவி.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. ச்ா - சநி த நீச | ச்ரிக்ரிரிச - | சா - - | | | |
| கா - வா என்னை | - | | | | |
| 2. ரீ - சநி த நீச | ச ச்ரிகரி - | சா - - | நித சநி க் ரிரிச் | சா - - | சா - - |
| கா - வா என்னை | - - | - | | | |
| 3. க்ா-ரிச தா நிச | ச்ரி க்ாரிச | நீ - - | க்ா - ரிச தா ரீ | நி ச்ரி கா | ரிச - நீ |
| கா வா என்னை | - - - | - | கா வா - என் | னை - | - |
| 4. கா - கமபத நீ க் | - ரிசா | ரிச நீ | ரீ - சநி தா - - | தரீ சநி | ச்ா ரிச நீ |
| கா வா - எ | ன்னை | | இந்நாள் | முழுதும் | - - - |
| 5. கா - கமபத நீ க் | - ரிசா | - - - - | ரீ - சநி தா நிச | ரிசநீசநிதா | நிதபாபதநீ |
| கா வா எ | ன்னை | | இந்நா - ள் | மு ழு | து ம் |
| 6 கா - கமபத நீ க் | - ரி சா | - - - - | ரீ - சநி தா நிச | ச்ாரிச்சாநீசநிநீ | தாநித த |
| | | | | | பாதப ப |
| கா வா - எ | ன்னை | - - - - | இந்நா ள் | மு ழு | து ம் |

## சரணம்.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 1. | தா ததா - பாதப ப | பதநிச சநி | தாபா | தபமக கா ரிச நீ - | தநிசரி கா - | கமபத பா |
| | பா வ லர் - - | நா | வலர் | போற் றும் | நா - த | னே - |
| 2. | பத நீநீ நீச்நி நீ | சநிதப ம மக | மா - - | தபமக கா ரிச நீ - | தநிசரி கா - | கமபத பா |
| | பா - வ லர் | நா வல | ர் | போற் றும் | நா - த | னே - |
| 3. | ச்ாசா ச்ரிநிசதநி பத | நிசதநிபதமப | தநிபதமபகம | தபமக கா கரிசநி நீ | தநிசரி கா - | கமபத பத நி |
| | பா வ லர் - - - | நா வ | லர் | போற் றும் | நா - த | னே - |
| 1. | ச்ா-சநி த நிச | ச்ரிக்ரிரிசசா | சா - - | - - - - - - - - - | - - - - | - - - - |
| | பா டி யே | நா - டி | யே | - - - - - - - - - | - - - - | - - - - |
| 2. | ரீநீ சநி தா நிச | ச ச்ரிக்ரி ரீ | சா - - | நித ச்நிக்ரிரிச | சா - - | - - - - |
| | பா டி யே | - நாடி | யே | - - - | - - | - - - - |
| 3. | க்ா-ரிச தா நிச | ச்ரி க்ா ரிச | நீ - - | க்ா ரிச தா நிச | ச்ரி க்ாரிச | நீ - - |
| | பா டி யே - - | நா - டி | யே | பா டி யே - - | நா - டி | யே |
| 4. | கா - கமபத நீ க் | - ரிசா | ரிச நீ | ரிரி சநி தா - - - | தரீ சநி | சா ரிசநி |
| | பா - டி யே நா | - டியே | - - - - | மரக - தம் | வாழ்த்தி | - யே |
| 5. | கா - கமபத நீ க் | - ரிசா | - - - - | ரிரி சநி தா நிசா | ரிசநீ சநிதா | நிதபா பதநீ |
| | பா - டி யே நா | - டியே | | மரக - தம் | வாழ்த்தி | யே - - |
| 6. | கா - கமபத நீ க் | - ரிசா | - - - - | ரிரி சநி தா நிசா | ச்ாரிசச நீசநிநீ | தாநித த பாதப ப |
| | பா - டி யே நா | - டியே | - - - - | மர க த ம் - - | வாழ்த்தி | யே - - - |

## எத்துக்கடை சுரம்.

| 8 | 4 | 4 | 8 | 4 | 4 |
|---|---|---|---|---|---|
| ததாநி சசாநி | ரிரீச | நீ க்ரி | க்ாரிச ரீசநி | சாநித | நீதப |
| பதநித தநிசநி | நிசரிச | ரிசநிச | ததநி பபத கக | ம பப | த மமப |
| ககம மபம கம | கரிகரி | நிநிசரி | தநிசரி நிசரிக | கரிசநி | தநிசரி |
| நிநிரிரி கக நிச | ரிக சச | ரிரி கக | சரிகம பபதத | நித பத | நிசசநி |
| தததநி தநிநி | ரிரிரி ச | நிநி சச | ரிரி மம் கக ரிரி | சசாரி | நிநீச் |
| ச்ரி நிச தநிபத | ரிகசரி | நிசதநி | சரிக்ா நிசரீ | தநிசா | பதநீ |
| ச்கரி நிரிசதச | நி பநித | கமமப | பததநி க்ரிரிச | சநிநித | தரிசநி |
| சநிபத பதநி த | நிதநிச | நிச நிச | ரி க்ரிக்ரிச ரிச | ரிசநி ச | நிசநித |



